

தினசரித்தொல்லையான அழுக்கிலுள்ள
கிருமிகளிலிருந்து உங்கள் ஆரோக்கியத்தைக்
காப்பாற்றிக்கொள்ளுங்கள்...
லைப்பாயின்
பாதுகாக்கும்
நுரையினுல்!
LIFEBUOY SOAP
நீங்கள் எவ்வளவு ஜாக்கிரதையாயிருந்தாலுங்கூட, தினசரித்தொல்லையான அழுக்கிலுள்ள கிருமிகளின் அபாயத்துக்குள்ளாக நேரிடும். லைப்பாய் சோப் உபயோகித்துத் தவருமல் ஸ்நானம் செய்து உங்கள் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். லைப்பாய் சோப்பின் பாதுகாக்கும் நுரை அழுக்கிலிருக்கும் கிருமிகளை விரட்டுகிறது. உங்களை நாள்முழுவதும் புத்துணர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.
லைப்பாய் சோப்

# கல்கி பொருளடக்கம்

மலர் 13
இதழ் 2

1953 ஆகஸ்டு 9

விஜய ஆடி 25உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

## அவர் சுதந்திரம்!




காஷ்மீர் தனிச் சுதந்திரத்துடன் இயங்க வேண்டும் என்று காஷ்மீர் பிரதமர் ஷேக் அப்துல்லா அபிப்பிராயம் தெரிவித்து வருகிறார்.

# ஔவையார்

தமிழ் உலகிலே ஒரு தெய்வீகப் பெயர்...

# ஜெமினி

திரை உலகிலே கீர்த்தி வாய்ந்த பெயர்...

# கே.பி.சுந்தராம்பாள்

இசை உலகிலே இணையற்ற பெயர்...

இத்தனை சிறப்புகளுடன்

## ஜெமினி

# ஔவையார்

திரைப்படம்...

எல்லாப் பிரபல தியேட்டர்களிலும்
ஆகஸ்ட் **15**ம் முதல்
ஆரம்பமாகிறது

கல்கி

மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 2

# பொன்யுகம் பிறந்தது!

நம் முன்னோர்கள், மனித குலத்தைக் கீழ் நோக்கி இழுக்கும் மூன்று ஆசைகளைப் பற்றிச் சொன்னார்கள். மண்ணாசை, பொன்னாசை, சிற்றின்பத்தில் ஆசை ஆகிய மூன்று ஆசைகளில் மண்ணாசையை முதலில் வைத்தார்கள். மண்ணாசையை வெற்றி கொள்வது மிகக் கடினம் என்றார்கள், அதனால் தனி மனிதர்களும் சமூகங்களும் தேசங்களும் அடைந்த துன்பங்களைப் பற்றி உதாரணங்கள் கூறினார்கள். நம்முடைய காலத்தில், நமக்கு அக்கம் பக்கங்களிலே, நாம் பார்த்திருக்கிறோம். மண்ணாசை காரணமாக எத்தனை விபரீதங்கள் நேர்ந்திருக்கின்றன? வயலின் ஒரு சிறிய வரப்பை அரை அடி தள்ளிப் போட்டதன் காரணமாக எத்தனை சிவில் வழக்குகள், கிரிமினல் வழக்குகள் நடந்திருக்கின்றன? பத்துக் குழி நிலத்துக்காகத் தகராறு செய்து கொண்டு கோர்ட்டுகளுக்குப் போய், பத்தாயிரம்-லட்சம் செலவு செய்து, சொத்து முழுவதையும் பறிகொடுத்துக் கடனாளி ஆனவர்கள் எத்தனை பேரை நம் கிராமங்களில் பார்த்திருக்கிறோம்? அதேமாதிரி நிலத் தகராறுகள் காரணமாக எத்தனை கொலைகள் நடந்து, எத்தனை குடும்பங்கள் அழிந்து போயிருக்கின்றன?

அந்த மண்ணாசையைப் பயன்படுத்திக் கொண்டு, ஏழை மக்களின் மனத்தில் அதை ஒரு வெறியாகக் கிளப்பிவிட்டு, கொடிய பலாத்காரச் செயல்களில் அவர்களை இறங்கும்படி தூண்டி வரும் குழப்பக்காரர்களைப் பற்றியும் நாம் அறிந்திருக்கிறோம் அல்லவா? தெலிங்கானா பிரதேசத்தில் நடந்த குரூரமான கொடுமைகள் எல்லாம் அடிப்படையில் மண்ணாசை காரணமாக எழுந்ததே அல்லவா?

அத்தகைய மண்ணாசைப் பூதத்தை வென்ற மகாத்மா ஒருவர் தற்சமயம் நம்மிடையே வாழ்கிறார். அவர் தம்முடைய உள்ளத்திலிருந்து மண்ணாசையைப் போக்கிக் கொண்டதை நாம் பெரிய காரியமாகச் சொல்லவில்லை. அத்தகைய வைராக்கிய சீலர்கள் பலர் இந்தப் புண்ணிய பாரத நாட்டில் எப்போதும் இருந்திருக்கிறார்கள். பிறருடைய உள்ளத்தில் இருக்கும் மண்ணாசையையும் வெற்றி கொள்ளும் மகானைப் பற்றியே சொல்கிறோம். சமூகத்துக்கே தீங்கு இழைத்து வரும் மண்ணாசை என்னும் மகா பூதத்தை எதிர்த்துப் போராடி வெற்றி முரசு கொட்டிக் கொண்டு திக்விஜயம் செய்து வரும் பெரியவரைப் பற்றியே குறிப்பிடுகிறோம்.

அவர் பெயர் ஸ்ரீ விநாயக விநோபா பாவே. எண்பத்து ஆறு ராத்தல் எடையுள்ள மெலிந்த உடல் படைத்த மனிதர்.

நம் தமிழ் நாட்டில் சிலர் மண்ணினால் விநாயகர்களைச் செய்து சில காலத்துக்கு முன் உடைத்து எறிந்த வேடிக்கையைப் பார்த்தோம்.

ஆனால் விநோபா பாவே விநாயகரோ, மண்ணாசை என்னும் பெரும் பூதத்தை உடைத்துத் தகர்த்து எறிந்து கொண்டு வருகிறார்.

சுமார் முப்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்னர், காந்திமகான் தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியா திரும்பி வந்ததும் சபர்மதி நதிக்கரையில் ஆசிரமம் அமைத்தார். பொதுநலத் தொண்டில் ஆர்வம் உள்ளவர்கள் சிலர் ஆசிரமத்தில் வந்து சேர்ந்தார்கள். அப்போது இருபத்து இரண்டு பிராயத்து இளைஞராயிருந்த ஸ்ரீ விநோபா பாவேயும் ஆசிரமத்துக்கு வந்து சேர்ந்தார்.

காலஞ்சென்ற தீனபந்து ஆண்ட்ரூஸ் அந்தக் காலத்தில் சபர்மதி ஆசிரமத்தைப் பார்த்துக் காந்தி மகானைக் கண்டு பேசிவிட்டுப் போக வந்தார். காந்திஜி அப்போது விநோபாவுடன் மிக்க ஆர்வத்துடன் பேசிக் கொண்டிருந்ததைப் பார்த்தார். விநோபா பாவே அங்கிருந்து போன பிறகு "அவர் யார்?" என்று கேட்டார்.

"சாதாரணமாக இந்த ஆசிரமத்தைத் தேடி வருகிறவர்கள், ஆசீர்வாதம் பெறுவதற்காக வருகிறார்கள். இப்போது தாங்கள் பார்த்தவரோ, எங்கள் ஆசிரமத்தையே ஆசீர்வதிக்க வந்தவர்!" என்று சொன்னார்.

அன்று முதல் இன்றுவரையில் விநோபா பாவே மகாத்மாவின் நிர்மாணத் தொண்டுகளில் ஈடுபட்டு வந்திருக்கிறார். அவருடைய பெயர் வெகு காலம் வெளியில்

தெரியாமலே இருந்தது. 1941-ம் வருஷத்தில் ஒரு நாள் உலகப் பிரசித்தி அடைந்தது. அந்த ஆண்டில் மகாத்மா காந்தி தனிப்பட்டவர்களின் சத்தியாக்கிரஹ இயக்கத்தைத் தொடங்கினார். சத்தியாக்கிரஹம் செய்யத் தகுதி வாய்ந்தவர் என்று மகாத்மாவினால் அங்கீகரிக்கப்பட்டவர்கள் மட்டுமே சத்தியாக்கிரஹம் செய்யலாம் என்பது அந்த இயக்கத்தில் முக்கியமான நிபந்தனை. அவ்வியக்கத்தில் முதன் முதலில் சட்ட மறுப்புச் செய்து சிறை செல்லுவதற்கு ஆச்சாரிய வினோபா பாவே அவர்களை மகாத்மா தேர்ந்தெடுத்தார். அதனால் 'முதல் சத்தியாக்கிரஹி' என்று ஸ்ரீ வினோபா உலகமெங்கும் புகழ் அடைந்தார். இரண்டாவது சத்தியாக்கிரஹியாக மகாத்மாவினால் தேர்ந்தெடுக்கப் பட்டார் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு.



ஸ்ரீ வினோபா பாவே

இவ்விருவருமே இன்று மகாத்மாவின் வாரிஸுகளாக இருந்து வருகிறார்கள். ஜவாஹர்லால்ஜி அரசியல் உலகில் மகாத்மாவின் உரிமை பெற்ற வாரிஸ்தாராக இருந்து வருகிறார்.

பாரமார்த்திக உலகில் ஆச்சாரிய வினோபா காந்திஜியின் ஞானப் புதல்வராக இருந்து வருகிறார்.

* * *

முதல் சத்தியாக்கிரஹியாக மும்முறை சிறை புகுந்த வினோபாஜி நாட்டின் சுதந்திர இயக்கம் வெற்றியுடன் முடிவுற்ற பிறகு வர்தாவுக்கும் சேவாக் கிராமத்துக்கும் அருகில் பௌனர் என்னும் கிராமத்தில் உள்ள ஆசிரமத்தில் வசித்து வந்தார். காந்திமகானுடைய மகா நிர்யாணத்துக்குப் பிறகு வினோபா, பெரிதும் ஆத்ம சோதனையில் ஈடுபட்டிருந்தார். நாட்டுக்கும் சமூகத்துக்கும் எந்த வழியில் தொண்டாற்றுவது என்று சிந்தித்து வந்தார். ஆத்ம சோதனையின் மூலம் அதற்கு ஒரு வழி உதயமாயிற்று. சர்வோதய சமாஜத்தை ஸ்தாபித்தார். ஹைதராபாத்தைச் சேர்ந்த தெலிங்கானாப் பிரதேசத்தில், குழப்பவாதிகளினால் நிகழ்ந்து வரும் கொடிய செயல்களைப்பற்றி அறிந்தார். அதை அடக்குவதற்குச் சர்க்கார் கையாளும் அடக்குமுறையினால் மக்கள் அடையும் இன்னல்களைப் பற்றியும் அறிந்தார். ஹைதராபாத்துக்கு அருகில் சிவராம்பள்ளி என்னுமிடத்தில் நடந்த சர்வோதய மகாநாட்டுக்குக் கால்நடை யாத்திரை கிளம்பிச் சென்றார். அங்கிருந்து தெலிங்கானா பிரதேசத்துக்கும் புறப்பட்டார். 1951ம் வருஷம் ஏப்ரல் மாதம் 18உ போச்சம்பள்ளி என்னும் கிராமத்தில் ஹரிஜனங்களுடன் பேசிக் கொண்டிருந்தார். அஹிம்சையின் பெருமையையும் உழைப்பின் பெருமையையும் அவர்களுக்குப் போதித்தார். கிராமவாசிகளில் ஒருவர் "ஐயா! சர்க்காரிடம் சொல்லி எங்களுக்கு நிலம் வாங்கித் தாருங்கள்! நாங்கள் உழைத்துப் பிழைத்துக் கொள்கிறோம்" என்று கூறினார். அந்தக் கோரிக்கை வினோபா அவர்களின் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்தது. அதுவே பூமிதான இயக்கமாகப் பரிணமித்தது.

ஆச்சாரிய வினோபா சர்க்காரிடம் முறையிட விரும்பவில்லை. அன்று மாலை நடந்த பொதுக் கூட்டத்திலேயே தமது அநுபவத்தைச்சொல்லி "நிலம் படைத்தவர்கள் யாரேனும் பூமி தானம் செய்ய முன் வரக் கூடாதா?" என்று கேட்டார். உடனே, ஸ்ரீ ராமச்சந்திர ரெட்டி என்னும் மிராசுதார் "நான் நூறு ஏக்கரா தருகிறேன்!" என்று முன் வந்தார். பூமி தான இயக்கத்துக்கு விநாயக பூஜை நடந்து விட்டது.

முன்னொரு நாள் மகாத்மா காந்தி "இந்தியா சுதந்திரம் அடையும் வரையில் சபர்மதி ஆசிரமத்துக்குத் திரும்பி வருவதில்லை" என்று சபதம் செய்துவிட்டு, உப்பு சத்தியாக்கிரஹ இயக்கம் தொடங்கி, டாண்டி யாத்திரை புறப்பட்டார் அல்லவா! அதைப் போலவே, ஆச்சாரிய வினோபாவும் "பூமிதான யக்ஞம் பூர்த்தியாகும் வரையில் பௌனர் ஆசிரமத்துக்குத் திரும்புவதில்லை" என்று சபதம் எடுத்துக்கொண்டு கால்நடை யாத்திரை புறப்பட்டார்.

ஹைதராபாத்திலிருந்து ஆச்சாரிய வினோபா புதுடில்லிக்கு நடந்து சென்றார். அங்கிருந்து உத்தரப் பிரதேசம் போனார். அதன் பிறகு பீஹாருக்குச் சென்றார். சென்ற விடமெல்லாம் நிலம் படைத்தவர்களிடம் பூமிதானம் கேட்டு வாங்கி வருகிறார். மொத்தம் ஏழாயிரம் மைலுக்கு மேல் கால்நடை யாத்திரை செய்திருக்கிறார்.

யாத்திரை சரிதான்; இயக்கம் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றிருக்கிறது என்று கேட்கிறீர்களா? நல்லது; ஒவ்வொரு மாகாணத்திலும் பூமிதான இயக்கத்துக்கு எவ்வளவு நிலம் கிடைத்திருக்கிறது என்பதைக் கீழே பாருங்கள் :—

*16-6-53க் தேதி வரை அகில இந்தியாவிலும் கிடைத்த பூமிதான விவரம்.*

| மாகாணம் | | ஏக்கர் |
|---|---|---:|
| அஸ்ஸாம் | ... | 256 |
| ஆந்திரம் | ... | 7,097 |
| உத்தரப்பிரதேசம் | ... | 4,79,218 |
| உத்கல் (ஒரிஸ்ஸா) | ... | 7,535 |
| கர்நாடகம் | ... | 595 |
| கேரளம் | ... | 5,800 |
| குஜராத் | ... | 5,501 |
| தமிழ் நாடு | ... | 8,498 |
| டில்லி | ... | 1,124 |
| பஞ்சாப்-பெப்சு | ... | 1,719 |
| பீஹார் | ... | 7,18,772 |
| வங்காளம் | ... | 202 |
| மத்தியப் பிரதேசம் | ... | 31,005 |
| மத்திய பாரதம் | ... | 2,491 |
| மகாராஷ்டிரம் | ... | 7,871 |
| மைசூர் | ... | 470 |
| ராஜஸ்தானம் | ... | 22,072 |
| விந்தியப் பிரதேசம் | ... | 2,382 |

| | | |
|---|---|---|
| சௌராஷ்டிரம் | ... | 3,000 |
| ஹிமாசலப் பிரதேசம் | ... | 1,006 |
| ஹைதராபாத் | ... | 55,870 |
| மொத்தம் | .................... | 13,62,494 |

பதின்மூன்று லட்சத்துச் சொச்சம் ஏக்கரா பூமியை ஏழைகளுக்குப் பிரித்து விநியோகிப்பதற்காக நிலம் படைத்தவர்கள் இதுவரை தானமாகக் கொடுத்திருக்கிறார்கள். ஸ்ரீ விநோபா பாவே யாத்திரை செய்த ஹைதராபாத், உத்தரப்பிரதேசம், பீஹார் ஆகிய மாகாணங்களில் பூமி தானத்துக்கு அதிகமாக நிலம் கிடைத்திருப்பதையும் நேயர்கள் கவனிப்பார்கள்.

“மண்ணாசையை வெற்றி கொண்ட மகாத்மா” என்று ஆச்சாரிய விநோபா பாவேயைச் சொல்லலாமா, கூடாதா என்று இப்போது கூறுங்கள்.

ஸ்ரீ விநோபா பாவே யாத்திரை செய்யாத மற்ற இராஜ்யங்களிலும் ஆங்காங்கு, மகாத்மாவின் சீடர்களும், அவர் தொடங்கிய நிர்மாணப் பணிகளில் ஈடுபட்டுள்ளவர்களும், பூமிதான இயக்கத்தை ஆரம்பித்து நடத்தி வருகிறார்கள். தமிழகத்திலும் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார், சர்தார் வேதரத்தினம், ஸ்ரீ என். எம். ஆர். சுப்பராமன் முதலியவர்களை அங்கத்தினர்களாகக் கொண்ட பூமிதான இயக்கக் கமிட்டி ஏற்பட்டுத் தொண்டாற்றி வருகிறது. இக் கமிட்டியின் கன்வீனரும் நிர்மாணப் பணிக்கே தம் வாழ்க்கையை அர்ப்பணம் செய்தவருமான ஸ்ரீ ச. ஜகந்நாதனும் அவருடைய வாழ்க்கைத் துணைவியாரும் தமிழ் நாட்டில் இயக்கத்துக்குப் பலந்தேடப் பெரு முயற்சி செய்து வருகிறார்கள்.

ஸ்ரீ விநோபா பாவே தொடங்கிய இயக்கம் எதிர்பாராத அளவில் வெற்றி பெற்று வருவதைக் கண்டு இந்திய சர்க்காரும் இராஜ்ய சர்க்கார்களும் அதில் சிரத்தை காட்டத் தொடங்கினார்கள். காங்கிரஸ் ஸ்தாபனங்களும் ஊக்கம் கொண்டன.

இந்த ஆதரவுகளை யெல்லாம் காட்டிலும் பூமிதான இயக்கத்துக்குப் பலம் அளித்திருப்பது சோஷலிஸ்ட் தலைவர் ஸ்ரீ ஜயப்பிரகாஷ் நாராயண் முழு மனதுடன் அந்த இயக்கத்தில் ஈடுபட்டிருப்பதுதான். சிலகாலத்துக்கு முன்பு ஹைதராபாத் இராஜ்யத்தில் அவர் சுற்றுப் பிரயாணம் செய்த விவரம் நேயர்கள் அறிவார்கள்.

ஸ்ரீ ஜயப்பிரகாஷ் நிகழும் ஆகஸ்டு மீ 15 உ தமிழ் நாட்டுக்கு விஜயம் செய்கிறார். அன்று முதல் பதினைந்து நாட்கள் தமிழ்நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்யப் போகிறார். அவருடைய விஜயத்தைத் தமிழ் மக்கள் நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்வார்கள் என்று நம்புகிறோம்.

நம் நாட்டில் செல்வப் பிரிவினையில் உள்ள ஏற்றத் தாழ்வுகள் மறைந்தே தீர வேண்டும். முக்கியமாக, ஒரு சிலர் ஆயிரக்கணக்கான ஏக்கராவுக்குச் சொந்தக்காரர்களா யிருப்பதும், நிலத்தில் இறங்கி உழைத்துப் பாடுபடக் கூடிய பலர் நிலமில்லாமல் திண்டாடுவதுமான நிலைமை மாற வேண்டும். இந்த மாறுதலை உண்டாக்குவதற்குப் பல வழிகள் உண்டு. கலகம், குழப்பம், பலாத்காரம் முதலிய முறைகளைக் கையாளலாம். அவற்றினால் வேறு பல தீங்குகள் ஜன சமூகத்துக்கு உண்டாகும். சர்க்கார் படிப்படியாகச் சட்டம் செய்து நில உடைமை முறையில் மாறுதல் செய்யலாம். தற்சமயம் பல இராஜ்ய சர்க்கார்கள் இதைப் பற்றிச் சிந்தித்து வருகிறார்கள்.

எல்லாவற்றிலும் சிறந்த முறை விநோபாவின் பூமிதான முறை என்பதைச் சொல்ல வேண்டியதேயில்லை. இதன் மூலம் நில தானம் கொடுத்தவர்களும் ஆசீர்வதிக்கப் படுகிறார்கள்; பெற்றுக் கொண்டவர்களும் நலம் அடைகிறார்கள்.

பூமிதான இயக்கம் நம் நாட்டில் பூரணமாக வெற்றி அடைந்தால், கம்யூனிஸத்திலும் சோஷலிஸத்திலும் உள்ள நல்ல அம்சங்களை மட்டும் எடுத்துக்கொண்டு, இந்தப் புண்ணிய பாரத நாடு ‘ஸர்வோதயம்’ என்னும் ஒரு புதிய தத்துவத்தை உலகத்துக்கு அளித்ததாகும். உலகெங்கும் உள்ள மக்கள் பாரத நாட்டின் மூலம் உலகில் “பொன் யுகம் பிறந்தது” என்று சொல்லி மகிழ்ந்து கொண்டாடுவார்கள்.

* * *

பாரத நாடு சுதந்திரம் அடைந்து ஆறு வருஷங்கள் பூர்த்தியாகி விட்டன. 1947-ம் ஆண்டு ஆகஸ்டு மீ 15உ டில்லி செங்கோட்டையில் அசோக சக்கரம் பொறித்த இந்திய சுதந்திரக் கொடி ஏற்றப்பட்டது. ஏழாவது பூரண சுதந்திரத் திருவிழாவைத் தேசமெங்கும் இந்த ஆகஸ்டு 15 உ கொண்டாடப் போகிறோம்.

சுதந்திரத் திருநாளை இவ்வாண்டில் பூமிதானத் திருநாளாகக் கொண்டாடுமாறு நம் தேசத் தலைவர்கள் பணித்திருக்கிறார்கள். இந்தப் புனித முயற்சியில் தமிழ் மக்கள் தங்கள் கடமையை ஆற்ற வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

மகாத்மா காந்தியின் மனதுக்கு உகந்த தொண்டுகளில் எப்போதும் தமிழ் நாடு முன்னணியில் நின்று வந்திருக்கிறது. காந்திக்குப் பின் காந்தியாக இன்று விளங்கி வரும் விநோபாவின் பூமிதான இயக்கத்துக்கும் தமிழ் மக்கள் பரிபூரண ஆதரவை அளித்து வெற்றி பெறச் செய்ய வேண்டும்.

## ஏன் எதிர்க்கிறார்கள்?

ஸ்ரீ கோபால கிருஷ்ண கோகலே என்று ஒரு மாபெரும் தலைவர் இருந்தார். ஐம்பது வருஷங்களுக்கு முன்னால் பிரிட்டிஷ் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்த இந்திய சட்டசபையில் அவர் ஓர் அங்கத்தினர். அச் சட்டசபையில் அவர், ‘கட்டாய இலவசக் கல்வி மசோதா’ என்பதாக ஒரு மசோதாவைக் கொண்டு வரப் பிரயத்தனப் பட்டார். இந்தியாவில் பள்ளிக்கூடம் போகும் வயதுள்ள எல்லாப் பிள்ளைகளுக்கும் கட்டாயமாக ஆரம்பக் கல்வி போதிக்கப்பட வேண்டும் என்பது அம் மசோதாவின் நோக்கம். அந்த நோக்கத்தைக் குறித்து ஸ்ரீ கோகலே எத்தனையோ பேசினார்; எழுதினார்; பிரசாரம் செய்தார். ஆயினும் மசோதாவுக்குப் போதிய ஆதரவு கிடைக்கவில்லை; சர்க்காரும் ஒப்புக் கொள்ளவில்லை. “கட்டாய இலவசக் கல்விக்கு இன்னும் தேசம் தயாராகவில்லை” என்றார்கள். மசோதா சட்டமாகவில்லை.

அதுமுதல் எத்தனையோ தேசத் தலைவர்கள் எவ்வளவோ பொது மேடையில் எல்லாக் குழந்தைகளுக்கும் இலவச ஆரம்பக் கல்வியாவது அளிக்க வேண்டிய அவசியத்தைப் பற்றிப் பேசி வந்திருக்கிறார்கள். காரியத்தில் ஒன்றும் நடைபெறவில்லை.

ஸ்ரீ கோகலே காலத்துக்கும் முற்பட்டவர் ஸ்வாமி விவேகானந்தர். அந்த மகான் இந்தியாவில்

பிரிட்டிஷ் சர்க்கார் ஏற்படுத்திய கல்வி முறையைக் கண்டனம் செய்தார். தேசம் முன்னேற வேண்டுமானால் அந்த ஏட்டுக் கல்வி முறையை மாற்ற வேண்டும் என்று சொன்னார்.

சுவாமி விவேகானந்தருக்குப் பின் எத்தனையோ பெரியவர்களும் தலைவர்களும் பிரமுகர்களும் கல்வித் துறை நிபுணர்களும் மெக்காலே துரை ஏற்படுத்திய குமாஸ்தா வர்க்க உற்பத்தியையே நோக்கமாகக் கொண்ட கல்வி முறையை மாற்ற வேண்டுமென்று பேசியும் எழுதியும் வற்புறுத்தியும் வந்திருக்கிறார்கள். அயல் நாடுகளிலிருந்து வந்த எவ்வளவோ கல்வி நிபுணர்கள் அந்தக் கருத்தை வற்புறுத்தி யிருக்கிறார்கள். இவர்களில் மார்க்கன் என்னும் அமெரிக்க நிபுணரின் கருத்தை 1949-ம் ஆண்டு ஜூலை 24-ந் தேதி "கல்கி" இதழில் குறிப்பிட்டு நாம் எழுதியிருந்தது நேயர்கள் சிலருக்கு ஞாபகம் இருக்கலாம்.

காந்தி மகான் இந்தக் கல்வி முறையை எவ்வளவு மட்டமானதாகக் கருதினார் என்று சொல்ல வேண்டியதில்லை. அதனாலேயே அவர் ஆதாரக் கல்வி முறையை வகுத்தார். கைவேலை மூலமாகவே கல்வி போதிக்கப்பட வேண்டும் என்றார்.

காங்கிரஸ் மகாசபையும் இக்கருத்தை ஏற்றுக் கொண்டு வருஷந்தோறும் தீர்மானங்கள் நிறைவேற்றி வந்திருக்கிறது.

ஆனாலும் இந்தத் துறையில் இதுவரையில் எடுத்துக் காட்டக் கூடிய அளவில் காரியம் எதுவும் நடைபெறவில்லை. ஆதாரக் கல்வி உற்சாகிகளும், காந்தி மகாத்மாவின் சீடர்களும் ஆங்காங்கு ஆதாரப் பள்ளிக்கூடங்கள் நடத்தி வருகிறார்கள். ஆனால் 100க்கு 99 பள்ளிக்கூடங்களில் வேறு விதப் படிப்பு கற்பிக்கப் படுகையில், ஒரு பள்ளிக்கூடத்தில் மட்டும் ஆதாரக் கல்வி போதிக்கப்படுவதினால், வெற்றிக்குச் சாதகமான சூழ்நிலை ஏற்படுவதில்லை. ஆதாரக் கல்வி உற்சாகிகளை மற்றவர்கள் "ஏதோ போகட்டும்; கிறுக்குப் பிடித்தவர்கள்!" என்ற மனப்பான்மையுடனேயே நடத்தி வந்தார்கள்.

"எல்லாக் குழந்தைகளுக்கும் ஆரம்பக் கல்வி போதனை" "ஏட்டுக் கல்வியுடனே கைத்திறனை வளர்க்கும் கல்வி முறை" என்ற இரு பெரும் இலட்சியங்களையும் பெரிய அளவில் ஒரு இராஜ்யம் முழுவதற்கும் அமுலுக்குக் கொண்டு வருவதற்கான மகத்தான திட்டத்தை முதன்முதலில் சென்னை சர்க்கார் தான் காரிய சாத்தியமான முறையில் தயாரித்தார்கள். கல்வி இலாகா நிபுணர்களுடன் கலந்து யோசித்து, ஒரு வருஷ காலம் புள்ளி விவரங்கள் சேகரித்து, எல்லாவிதமான தடங்கல்களையும் நீக்குவதற்குரிய சாதனங்களைத் தயாரித்துக் கொண்டு, அந்த முறையை அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

இவ்வளவு தீர்க்காலோசனையுடன் தயாரித்த தேச நன்மைக்கான திட்டத்தை, கோகலே, விவேகானந்தர் முதல் காந்தி மகாத்மா வரையில் பெரியோர்கள் விரும்பிய திட்டத்தை,—முதன் முதலாகச் சென்னை இராஜ்யத்தில் அமுலுக்கு வருவதனால் இந்த இராஜ்யத்துக்கே பெருமை தரக்கூடிய திட்டத்தை,—ஏன் எதிர்க்கிறார்கள்!

சிலர் புதுமை-மாறுதல் எதையும் கண்டு அஞ்சுகிறவர்கள். ஆதலின் புதிய திட்டத்தினால் பிற்பட்ட வகுப்புக் குழந்தைகளின் கல்வித் தரம் குறைந்து விடுமோ என்று சந்தேகப்பட்டு எதிர்க்கிறார்கள். இவர்களுடைய சந்தேகங்களைப் போக்கிப் பிற்பட்ட வகுப்புக் குழந்தைகளுக்குத்தான் புதிய திட்டத்தினால் பெரு நன்மை என்று தெளிவு படுத்துவது அவசியமாகும்.

மற்றும் பலர் புதிய கல்வித் திட்டத்தின் நன்மைகளை நன்றாகத் தெரிந்திருந்தும், அரசியல் காரணங்களுக்காக எதிர்க்கிறவர்கள் இதை ஒரு வியாஜமாகக் கொண்டு ஜாதித் துவேஷப் புயலைக் கிளப்பிக் காங்கிரஸ் சர்க்காரைக் கவிழ்த்து விடலாம் என்று அவர்கள் திட்டமிட்டு வேலை செய்கிறார்கள்.

மூன்றாவது காரணம் ஒன்றும் சொல்லலாம்.

ராஜாஜி முக்கியமான எந்தக் காரியத்தைச் சொன்னாலும் அதை மற்றவர்கள் மூர்த்தன்யமாக எதிர்க்க வேண்டியது என்றும், சில காலத்துக்குப் பிறகு "ராஜாஜி சொன்னதே சரி; மற்றவர்களின் எதிர்ப்பு பிசகானது" என ஏற்பட வேண்டியது என்றும், ராஜாஜியின் ஜாதகத்தில் எழுதியிருக்கிறது போலும்!

அந்தப் பொதுவான ஜாதக ரீதிக்கு இந்த முக்கியமான கல்விச் சீர்திருத்தச் சட்டம் விலக்காகப் போய்விடக்கூடாது அல்லவா!

அதற்காகத்தான் புதிய கல்வித் திட்டத்தை எதிர்க்கிறார்களோ என்றும் சொல்லத் தோன்றுகிறது.

# ஏன் அவசரப்படுகிறார்கள்?

ஜனநாயக ஆட்சியின் கீழ் சர்க்கார் கொண்டு வரும் எந்தத் திட்டத்தையும் அலசி ஆராயவும் குறைகளை எடுத்துக் காட்டவும் எல்லாருக்கும் உரிமை உண்டு.

திட்டத்திலுள்ள குறைகளை நீக்க வேண்டுமென்று கேட்கலாம்; திட்டத்தை அடியோடு ரத்து செய்ய வேண்டுமென்றும் கோரலாம். இந்தக் கோரிக்கைகளுக்குப் பொதுஜன ஆதரவைத் தேடலாம்.

இதற்கெல்லாம் ஜனநாயக ஆட்சியின் கீழ் நியாயமான கிளர்ச்சி முறைகள் இருக்கின்றன.

எந்தப் புதிய திட்டத்தையும் பொது ஜனங்களின் பெருமிதமான ஆதரவு இன்றிச் சர்க்கார் நீடித்து நடத்த முடியாது.

ஆகையால் புதிய ஆரம்பக் கல்வித் திட்டத்தை எதிர்ப்பவர்கள் தாராளமாக அவர்களுடைய கிளர்ச்சியை நடத்தலாம். புதிய கல்வித் திட்டத்திலுள்ள கேடுகளை எடுத்து விளாசலாம். குறைகளும் கேடுகளும் இருப்பது உண்மையானால் போகப் போக அவை வளர்ந்துகொண்டு போகும். ஜனங்களும் நன்றாய் உணர்ந்து கொள்வார்கள்.

ஒரு வருஷம் நடத்திப் பார்த்தால் 'குட்டு' வெளியாகிவிடும். குறைகள் வெட்ட வெளிச்சமாகி விடும். பொது ஜனங்களும் நன்றாய்த் தெரிந்து கொள்வார்கள்.

பெருமிதமான பொதுஜன அபிப்பிராயத்தை அலட்சியம் செய்து எந்தச் சர்க்காராவது ஒரு திட்டத்தை அமுல் நடத்த முடியுமா!

அதிலும், 'சாதி வேற்றுமையை நிலை நாட்டும்' ஒரு திட்டத்தை நீடித்து அமுல் நடத்த முடியுமா!

"ராஜாஜி பிடிவாதக்காரர், குறைகள் வெளியானாலும் மாற்ற ஒப்புக்கொள்ள மாட்டார்" என்று வைத்துக் கொள்வோம்.

ஆனால் ராஜாஜி சாசுவதமாக இந்த இராஜ்யத்தின் முதன் மந்திரியாக இருக்கப் போகிறாரா! அவரை வெளியேற்றுவதற்குக் காங்கிரஸின் எதிரிகள் பலர் ஆவலாய் விரும்புவது போலவே காங்கிரஸுக்குள்ளேயும் சிலர் இருக்கிறார்கள் என்பது தெரிந்த விஷயம்.

அப்படி இருக்கும்போது, புதிய கல்வித் திட்டத்தை எதிர்ப்பவர்கள் ஏன் இவ்வளவு அவசரமும் ஆத்திரமும் காட்டுகிறார்கள்!

நூற்றைம்பது வருஷமாக அமுலிலிருந்த மெக்காலே கல்வித் திட்டத்தை,—அறிவாளிகள் அனைவரும் ஒருமுகமாகக் கண்டனம் செய்த கல்வித் திட்டத்தை,—மாற்றுவதற்கு இவ்வளவு அவசரமும் ஆத்திரமும் யாரும் காட்டவில்லையே!

பழைய திட்டத்தை இவ்வளவு காலமாகச் சகித்துக் கொண்டிருந்தவர்கள் புதிய திட்டத்துக்கு ஒரு வருஷம் அவகாசம் கொடுத்துப் பார்க்கலாம் அல்லவா!

அதில் பயனில்லை யென்றும் கேடு விளைகிறது என்றும் நிரூபித்துக் காட்டலாமல்லவா!

பின்னர், "உங்கள் புதிய கல்வித் திட்டத்தை மாற்றுங்கள்; அல்லது கடையைக் கட்டுங்கள்!" என்று ராஜாஜியைக் கேட்கலாமே!

திட்டம் அமுல் நடக்க ஆரம்பமாகும்போதே, அதில் உள்ள பலாபலன்கள் தெரிவதற்கு அவகாசம் கொடுக்காமலே, இவ்வளவு அவசரமாகவும் மூர்த்தண்யமாகவும் எதிர்ப்பது ஏன்!

அதற்குக் காரணம் இருக்கத்தான் செய்கிறது.

ஒரு வருஷம் அவகாசம் கொடுத்து அமுல் நடத்திப் பார்த்தால் புதிய கல்வித் திட்டம் மகத்தான வெற்றி அடைந்து விடும் என்பது அரசியல் காரணங்களுக்காக எதிர்ப்பவர்களுக்கு நன்கு தெரிந்திருக்கிறது!

புதிய திட்டத்தின் அமுல் ஆரம்பமாவதற்கு முன்னால் சந்தேகம் தெரிவித்த ஆசிரியர்கள் எல்லாரும் இப்போது அதை உற்சாகமாக ஆதரிக்கத் தொடங்கி விட்டார்கள்.

கிராமாந்தரத்து மக்கள் புதிய கல்வித் திட்டத்தை ஒரு வரப் பிரசாதமாக வரவேற்கத் தொடங்கி விட்டார்கள்.

ஒரு வருஷம் அவகாசம் கொடுத்து விட்டால் திட்டம் பரிபூரண வெற்றி அடைந்து விடும்.

அப்புறம் அதை எதிர்ப்பவர்களைப் பார்த்துப் பொதுமக்கள் சிரிப்பார்கள்.

ஆகையினாலேயே, புதிய கல்வித் திட்டத்தை எதிர்ப்பவர்கள் இவ்வளவு அவசரப்படுகிறார்கள்.

எந்த முறைகளைக் கையாண்டாவது புதிய திட்டம் அமுலுக்கு வராமலே நிறுத்திவிட வேண்டும் என்றும், அதைப் பரீட்சிக்கவே இடம் தரக் கூடாதென்றும் ஆத்திரப்படுகிறார்கள்.

# ஏன் குழப்பத் தொண்டு செய்கிறார்கள்?

ஜனநாயகம் நிலவும் நாடுகளில் பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்டுவதற்கு நியாயமான முறைகள் எத்தனையோ இருக்கின்றன.

அம்முறைகளில் பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்டிச் சர்க்காரின் திட்டங்களை மாற்றலாம்; சர்க்காரையே மாற்றி விடலாம்.

புதிய கல்வித் திட்டத்தை எதிர்ப்பவர்களுக்கு இந்த முறைகள் நன்றாய்த் தெரியும்.

திராவிடக் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம், கம்யூனிஸ்ட் கட்சி — ஆகிய ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர்கள் சொல்வன்மையும் எழுத்து வன்மையும் உள்ளவர்கள்.

சென்ற பொதுத் தேர்தலின் போது அந்தச் சக்திகளை அவர்கள் நன்றாக உபயோகப்படுத்தினார்கள். பிரபல காங்கிரஸ் வாதிகளையும் மந்திரி பதவி வகித்தவர்களையும் தேர்தலில் தோற்றுப் போகும்படி செய்தார்கள்.

ஆகையால், ஜனநாயக முறையில் கிளர்ச்சி செய்யும் வழிகளை அவர்கள் நன்கு அறிந்தவர்கள்.

எனவே, புதிய கல்வித் திட்டம் மக்களுக்குத் தீமை பயப்பது என்ற நிச்சய புத்தி அவர்களுக்கு இருந்தால், பொது ஜனங்களிடையே தாராளமாகப் பிரசாரம் செய்யலாம். பொதுக் கூட்டங்களில் பேசலாம்; பத்திரிகைகளில் எழுதலாம். இதற்கெல்லாம் வேண்டிய சாதனங்கள் அவர்களிடம் இருக்கின்றன.

புதிய கல்வித் திட்டத்துக்கு உண்மையான பொதுஜன எதிர்ப்பு இருப்பதாகத் தெரிந்தால், மந்திரிகள் அதை மாற்றிக் கொண்டே தீர வேண்டும். மாற்ற விரும்பாவிட்டால் பதவியை விட்டு விலகிக் கொள்ள வேண்டும்.

அவ்வப்போது உபதேர்தல்கள் நடந்து கொண்டிருக்கின்றன. நாலு உபதேர்தல்களில் சேர்ந்தாற்போல் காங்கிரஸ் அபேட்சகர்கள் தோல்வி அடைந்தால், காங்கிரஸ் மந்திரி சபை கலகலத்துப் போய்விடும். சட்டசபையில் மிக சொற்பமான பெரும்பான்மை பலந்தான் இப்போது காங்கிரஸுக்கு இருக்கிறது. நாலு உபதேர்தல்களில் தோல்வியடைந்தால், காங்கிரஸ் மந்திரி சபை நடக்க முடியாது. 'நம்பிக்கை யில்லாத் தீர்மானம்' கொண்டு வந்து மந்திரி சபையை மாற்றிவிடலாம். பின்னால் வருகிறவர்கள் புதிய கல்வித் திட்டத்தை மாற்றி விட்டுப் போகிறார்கள்.

விஷயம் இவ்வளவு தெளிவாகவும் சுலபமாகவும் இருக்கும்போது, மேற்படி ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர்கள் ஏன் குழப்பத் தொண்டுகளில் தலையிடுகிறார்கள்! ஏன் ரயிலை நிறுத்த முயலுகிறார்கள்! ஏன் தண்டவாளங்களின் குறுக்கே படுக்கிறார்கள்! ஏன் முதன் மந்திரி வீட்டு வாசலில் மறியல் செய்ய ஊர்வலம் விடுகிறார்கள்! ஏன் சின்னஞ் சிறு பிள்ளைகளைப் பயமுறுத்திப் பள்ளிக்கூடம் போகாமல் தடுக்கிறார்கள்!

ஜனநாயக சர்க்காரோடு போர் தொடுக்க வேண்டிய இடம் பொது மேடைகள் அல்லவா!

இவர்களுக்குப் பொது மேடைகள் இல்லையா! பேச்சுத் திறமை இல்லையா! எழுத்துத் திறமை இல்லையா! இவர்கள் பேசுவதையும் எழுதுவதையும் யாராவது தடை செய்கிறார்களா! வரை முறையில்லாத வசை மொழிப் பிரசாரத்தைக் கூடத் தடை செய்யாமல் விட்டிருக்கிறார்களே!

ஜனநாயகப் போர் முறைகள் வேண்டிய அளவு இருக்கும்போது, மேற்படியார்கள் குழப்பத் தொண்டு தொடங்கி யிருப்பதின் உண்மைக் காரணம் இதுதான் :—

ராஜாஜி மந்திரி சபை இந்த இராஜ்யத்தின் மக்களுக்கு நன்மையான திட்டங்களை ஒன்றன்

பின் ஒன்றாகக் கொண்டு வருகிறது. காங்கிரஸுக்கு மக்களிடையே ஏற்பட்டிருந்த கெட்ட பெயர் அநேகமாக மறைந்து விட்டது.

வடநாட்டில் நடக்கும் உபதேர்தல்களில் காங்கிரஸுக்குத் தோல்வியும் பிரஜா—சோஷலிஸ்டுகளுக்கு வெற்றியும் கிடைத்து வருகிறது.

ஆனால், தமிழ் நாட்டிலோ உபதேர்தல்களில் காங்கிரஸ் வெற்றியடைந்து வருகிறது.

பொதுத் தேர்தலின்போது காங்கிரஸ் தோல்வியடைந்த இரண்டு தொகுதிகளில் சமீபத்தில் உபதேர்தல்கள் நடந்தன. இரண்டு தொகுதிகளிலும் காங்கிரஸ் வெற்றி பெற்று விட்டது.

காங்கிரஸ் எதிரிகளுக்கு இந்தத் தேர்தல் முடிவுகள் கசப்பாயிருக்கின்றன.

ராஜாஜி மந்திரி சபை நீடித்து நடக்க இடம் கொடுத்தால், காங்கிரஸின் செல்வாக்கு மீண்டும் வலுத்து விடும்.

ஆகையால் அதற்கு இடம் கொடுக்கக் கூடாது. ராஜாஜி மந்திரி சபையை எப்படியாவது கவிழ்த்து விடவேண்டும். இதற்கு ஜனநாயக முறைகளை நம்புவதில் பயனில்லை. தேர்தலில் இனி வெற்றி கிட்டாது. குழப்பத் தொண்டுதான் செய்ய வேண்டும். அதற்குப் புதிய கல்வித் திட்டத்தை ஒரு வியாஜமாக வைத்துக் கொள்ளலாம்! சாதித் துவேஷத்தைக் கிளப்பிவிடப் பார்க்கலாம்! அத்துடன் போலீஸார் தடியடிப் பிரயோகம், துப்பாக்கிப் பிரயோகம் முதலியவற்றைக் கைக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்த நிலைமையை ஏற்படுத்தலாம். பிறகு, "அடித்தார்கள்; சுட்டார்கள்!" என்று மேலும் துவேஷப் பிரசாரம் செய்யலாம் ...... இதுதான் குழப்பத் தொண்டு தொடங்கி இருப்பவர்களின் உண்மை நோக்கம்.

உலகத்திலேயே தமிழ் மக்களைக் காட்டிலும் அறிவாளிகள் யாருமில்லை என்று நாம் நம்புகிறோம். ஏட்டுக் கல்வியுள்ளவர்களும் சரி, ஏட்டுக் கல்வியே இல்லாதவர்களும் சரி, நல்லது கெட்டது அறிந்து கொள்ளும் விவேகத்தில் தமிழ் மக்கள் தலை சிறந்தவர்கள்.

ராஜாஜியின் தலைமையில் தமிழ் நாடு அடைந்து வரும் நலன்களையும் அவர்கள் அறிவார்கள்; ராஜாஜியை எதிர்ப்பவர்களின் உள் நோக்கங்களையும் அறிவார்கள்.

புதிய கல்வித் திட்டத்தை வியாஜமாக வைத்துக் கொண்டு குழப்பத் தொண்டு செய்பவர்களுக்குத் தமிழ்ப் பெருமக்களின் ஆதரவு கிட்டாது என்பது நிச்சயம்.

எதிர்ப்பவர்கள் குழப்பத் தொண்டு செய்வதினால் தங்களையும் கஷ்டப்படுத்திக் கொள்கிறார்கள்; பொது மக்களுக்கும் உபத்திரவம் விளைவிக்கிறார்கள்.

ஆனால் அவர்கள் இந்த முறைகளினால் நினைத்த பலன்களை அடையப் போவதில்லை.

குழப்பத் தொண்டை விட்டு ஜனநாயக முறைகளுக்குத் திரும்பி வருவது அவர்களுக்கும் நல்லது; பொது மக்களுக்கும் நன்மையானது.

## போட்டியின் முடிவு!




ரஷ்யத் தலைவர்களுக்குள் எழுந்துள்ள போட்டியினால் ரஷ்ய ராணுவத்தின் பலம் நாளுக்கு நாள் பெருகி வருகிறது.

# பொன்னியின் செல்வன்

## கல்கி

### அத்தியாயம் 34

## ‘போய் விடுங்கள்!”

“ஐயோ! பிசாசு!” என்ற பீதி நிறைந்த குரல் வந்த திசையை நோக்கி வந்தியத் தேவன் விரைந்து ஓடினான். ஓடும்போதே அவன் உள்ளத்தில் “இது மணிமேகலையின் குரல் அல்லவா? இவள் எதற்காக இந்நேரத்தில் இங்கு வந்தாள்? எதைப் பார்த்துவிட்டு இப்படி அலறினாள்? பிசாசு என்பது ஒன்று இருக்க முடியாது. பின் என்னவாயிருக்கும்? குரலில் உண்மையான பயம் தொனித்ததே? அவளை இப்போது நாம் அணுகிச் செல்வதிலிருந்து ஏதாவது தொல்லை ஏற்படுமோ? அவளுடைய தமையனோ நம்மைக் கடித்துத் தின்றுவிட வேண்டுமென்றிருக்கிறான். ஆதித்த கரிகாலர் வெறிகொண்டிருக்கிறார். பழுவூர் ராணி மனத்தில் என்ன வஞ்சம் வைத்திருக்கிறாளோ, ஒன்றும் தெரியவில்லை!......” என்ற எண்ணங்கள் துரிதமாகத் தோன்றி மறைந்தன. இப்படி உள்ளத்தில் கலக்கம் இருந்தபடியால் அவன் கவனக் குறைவு அடைந்திருந்தான். திடீரென்று ஒரு பன்னீர் மரத்தின் வேர் தடுக்கித் தரையில் விழுந்தான். மேல் துணியின் தலைப்பு பக்கத்திலிருந்த பூம்புதரில் சிக்கிக் கொண்டது. விழுந்தவன் சமாளித்து எழுந்து உட்கார்ந்து அங்கவஸ்திரத்தை மெள்ள எடுக்க முயன்றான். எத்தனையோ பகைவர்களும் சதிகாரர்களும் செய்ய முடியாத காரியத்தை இந்தச் சிறிய மரத்தின் வேர் செய்துவிட்டதே. நம்மைக் கீழே தள்ளிவிட்டதே. இது ஏதேனும் அபசகுனத்துக்கு அறிகுறியோ, அல்லது நம்மை ஆபத்துக்கு உள்ளாக்காமல் இந்த மரவேர் தடுத்து ஆட்கொள்கிறதோ என்று எண்ணி வந்தியத் தேவன் தனக்குத்தானே புன்னகை புரிந்து கொண்டான்.

அச்சமயம், “அம்மா! அம்மா! எங்கே இருக்கிறீர்கள்?” என்ற குரல் கேட்டது. அது சந்திரமதியின் குரல்.

“இங்கேதானடி இருக்கிறேன். அல்லிக் குளத்தின் அருகில் இருக்கிறேன்! சீக்கிரம் வா!” என்றது மணிமேகலையின் குரல்.

காலடிச் சத்தங்கள் கேட்டன; காலில் அணியும் நூபுரங்களின் இனிய ஒலிகளும் கேட்டன.

அல்லிக் குளம் என்று மணிமேகலை கூறியது அந்தப் பூங்காவனத்தின் மத்தியில் செய் குன்றத்தின் அருகில் இருந்த சிறிய பளிங்குக்கல் தடாகத்தைத்தான். அந்தக் குளம் அல்லிப் பூவின் வடிவத்தில் அமைக்கப் பட்டிருந்தது. அதில் சில அல்லிக் கொடிகளும் செங்கழுநீர்க் கொடிகளும் இருந்தன. அச்சமயம் சில மலர்களும் இருந்தன. இந்த அல்லிக் குளத்தை முன்னமே வந்தியத் தேவன் பார்த்திருந்தான். அதன் அருகிலேதான் அவளும் விழுந்திருக்க வேண்டும்! நல்ல

வேளையாக, அப் பெண்கள் இருவரும் அவனைக் கவனிக்கவில்லை. பகல் வேளையாக இருந்து அவர்கள் அவன் விழுந்ததைப் பார்த்திருந்தால் கலகல வென்று சிரித்து அவனுடைய மானம் போகும்படி செய்திருப்பார்கள். இப்போது மணிமேகலையின் துணைக்குச் சந்திரமதி வந்து விட்டபடியால், அந்தப் பெண்களுக்குத் தெரியாமலேயே அவன் அங்கிருந்து நழுவிப் போய் விடலாம்.

இதற்கிடையில் அந்தப் பெண்களின் பேச்சு அவன் காதில் விழுந்தது.

"அம்மா! எதைக் கண்டு பயந்தீர்கள்? ஏன் அப்படிக் கூச்சலிட்டீர்கள்?" என்றாள் சந்திரமதி.

"அடியே! அந்த மதிள் சுவரைப் பாரடி! அதன்மேலே ஏதோ தெரிந்தது. தலையில் சடையும் முகத்தில் தாடியும் மீசையுமாக ஓர் உருவம் தெரிந்தது. அதன் கழுத்தில் — சொல்லப் பயமாயிருக்கிறதடி!—மண்டை ஓட்டு மாலை ஒன்று அணிந்திருந்தது! நான் கூச்சவிட்டதும் அது மறைந்து விட்டது!" என்றாள் மணிமேகலை.

"நன்றாயிருக்கிறது, இளவரசி! தங்களுடைய மனப் பிராந்திதான் அது! பேயும் இல்லை, பிசாசும் இல்லை! இவ்வளவு உயரமான மதிள் சுவரின்மேல் யாரும் வந்து உட்கார்ந்திருக்கவும் முடியாது" என்றாள் சந்திரமதி.

"இல்லையடி! என் மனப்பிராந்தியில் அப்படிப் பேய் பிசாசு ஒன்றும் தோன்றுவது வழக்கமில்லை......"

"ஆமாம்! மன்மதனையொத்த வடிவழகரின் முகந்தான் உங்கள் கனவிலும் நனவிலும் தோன்றுவது வழக்கம்!"

"சீச்சீ! இப்போது கூட உனக்கு விளையாட்டா?"

"பின், எப்போது விளையாடுவது? முன்மாலை நேரத்தில் பூங்காவனத்தில் அல்லிக் குளத்தினருகே வந்து காத்திருக்கிறீர்கள். முல்லை மலர்களின் மணம் கம்மென்று வீசுகிறது...ஆனால், பாவம், என்ன செய்கிறது? தாங்கள் வல்லத்து இளவரசரை எதிர் பார்த்துக் கொண்டிருக்க, மீசையும் தாடியும் உள்ள பிசாசு வந்து சேருகிறது!"

"போதும் போதாததற்கு நீயும் வந்து சேருகிறாய்!"

"என்னைப் பார்த்து விட்டுத்தான் அந்தப் பிசாசு பயந்து ஓடி விட்டதோ, என்னமோ? கடம்பூர் அரண்மனைப் பணிப் பெண் சந்திரமதியைக் கண்டால் பேய் பிசாசுகள், பூதங்கள், வேதாளங்கள் எல்லாம் பயந்து ஓடும் என்பது உலகப் பிரசித்தியாயிற்றே!"

"சந்திரமதி! உன் வேடிக்கைப் பேச்செல்லாம் இப்போது வேண்டாம். உண்மையாகவே நான் அந்த மதிள் சுவரின் மேல் கோரமான ஓர் உருவத்தைப் பார்த்தேன். நீ நம்பாவிட்டால், வேண்டாம்! நீ போன காரியம் என்ன ஆயிற்று என்று சொல்லு!"

"போன காரியம் பலிக்க வில்லை, இளவரசி!"

"ஏன்? ஏன்?"

"காஞ்சி இளவரசரும் கடம்பூர் இளவரசருந்தான் அங்கே கூடிக் கூடிப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். வல்லத்து இளவரசரைக் காணவே காணோம்..."

"ஒரு வேளை அவரையும் எங்கே யாவது அனுப்பி வைத்து விட்டார்களா, என்ன?"

"அப்படியும் தெரிய வில்லை. தங்கள் தந்தையும் பல்லவருந்தான் மலையமான் அரசரை எதிர்கொள்ளப் போயிருக்கிறார்கள். இடும்பன் காரியைக் கேட்டேன். இன்று சாயங்காலம் கரிகாலர் வல்லத்தரசர்மீது ஏதோ எரிந்து விழுந்தாராம்!......"

"அவருக்குப் பைத்தியந்தான் பிடித்திருக்கிறது. எல்லார் பேரிலும் எரிந்து விழுகிறார். பிறகு?......"

"'இன்றைக்கு இனிமேல் என் முகத்தில் விழிக்காதே! நாளைப் பொழுது விடிந்த பிறகு வா!' என்று சொல்லி அனுப்பி விட்டாராம்!"

"பின்னர் அவர் எங்கே போயிருப்பார்?" என்றாள் மணிமேகலை.

"இந்த மாளிகை மதிள் சுவருக்குள்ளே தான் எங்கேயாவது அலைந்து கொண்டிருக்க வேண்டும். அதனால்தான் சொன்னேன்; ஒரு வேளை அவரே பிசாசு போல் வேஷம் போட்டுக் கொண்டு தங்களைப் பயமுறுத்தினாரோ என்று."

"இல்லை; இந்த அரண்மனையில் வேஷக்காரர்கள் பலர் இருப்பது எனக்குத் தெரியும். ஆனால் அவர் வேஷம் போட்டு ஏமாற்றுகிறவர் அல்ல..."

"இப்படித்தான் நம்மைப் போன்ற அபலைப் பெண்கள் புருஷர்களை நம்பி ஏமாந்து போவது வழக்கம்."

"அப்படியே யிருக்கட்டும். நீ மறுபடியும் போய்த் தேடிப் பார்! அரண்மனை மதிளுக்குள்ளே தானே எங்கேயாவது இருக்க வேண்டும்? இடும்பன் காரியையும் தேடிப் பார்க்கச் சொல்லு!"

"இளவரசி! அந்த இடும்பன் காரியைக் கண்டால் எனக்குப் பிடிக்கவேயில்லை. விழித்து விழித்துப் பார்க்கிறான். அவனிடம் எனக்குப் பயமாகக் கூட இருக்கிறது......"

"பேய் பிசாசுக்குப் பயப்படாதவள் இடும்பன் காரிக்குப் பயப்படுகிறாயே? போனால் போகட்டும். அவனிடம் ஒன்றும் சொல்லாமலிருப்பதே நல்லது. நீயே இன்னொரு தடவைபோய்த் தேடிப் பார்த்து விட்டு வா!"

"அதுவரையில்......"

"நான் இங்கேயே இருக்கிறேன்..."

"மறுபடியும் அந்தப் பிசாசு இங்கு வந்தால்?......"

"உன் பெயரைச் சொல்லி விரட்டியடித்து விடுகிறேன்!"

சந்திரமதி அங்கிருந்து போவதற்கு அறிகுறியான நூபுரத்தின் மெல்லிய ஒலி கேட்டது.

மேற்கூறிய சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத் தேவனுடைய மனத்தில் பற்பல எண்ணங்கள் தோன்றின. சுவரின் மேலிருந்து எட்டிப் பார்த்த 'பிசாசு' யாராயிருக்கும் என்று யோசித்தான். ஆழ்வார்க்கடியான் காளாமுகனுடைய வேடம்தரித்து வந்து தன்னைக் காப்பாற்றியது அவன் நினைவுக்கு வந்தது. ஒரு வேளை அந்த வீர வைஷ்ணவனாகவே இருக்குமோ? தஞ்சாவூரிலிருந்து தனக்கு ஏதேனும் முக்கியமான செய்தியுடன் வந்திருக்கிறானோ? இங்குள்ளவர்களுக்கு அடையாளம் தெரியாமலிருக்க அப்படி வேஷம் தரித்து வந்திருக்கிறானோ?

மணிமேகலை தன்னைப் பார்க்க இவ்வளவு ஆவல் கொண்டிருப்பதின் காரணம் என்ன? எதற்காகத் தோழியை அனுப்பித் தேடி அழைத்துக் கொண்டு வரச் சொல்கிறாள்? அவள் விஷயத்தில் மணிமேகலையின் மனோ நிலை அவனுக்கு ஒருவாறு தெரிந்திருந்தது. அதனாலேயே அவள் அருகில் அதிகமாக நெருங்காமலிருந்து வந்தான். கந்தமாறனுடைய பகைமையை இன்னும் தூண்டி விடாமலிருக்கவும் விரும்பினான். ஆயினும், இப்போது நந்தவனத்தில் வந்து தனிமையாக உட்கார்ந்து கொண்டு அவனை அழைத்து வரச் சொல்லி யிருக்கிறாள். ஏதோ முக்கியமான காரியம் இல்லாவிட்டால் இவ்வளவு துணிச்சலான காரியத்தில் இறங்கியிருக்க மாட்டாள். பாவம்! அவளுக்கும் ஏதாவது சங்கடம் நேர்ந்திருக்கிறதோ, என்னமோ? அல்லது நந்தினி அவளிடம் ஏதாவது செய்தி சொல்லி அனுப்பியிருக்கலாம். கடவுளே! இங்கே, இந்தக் கடம்பூர் அரண்மனையில் உள்ளவர்கள் ஒவ்வொருவரும் மனத்தில் ஏதோ ஒன்றை மறைத்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். சற்று முன்னால் மணிமேகலை கூறியது ரொம்ப உண்மை. எல்லாருமே வஞ்சக வேஷதாரிகள். இவர்களுக்கு மத்தியில் இந்தப் பேதைப் பெண் அகப்பட்டுக் கொண்டு திண்டாடுகிறாள். பழுவூர் ராணி இந்தப் பெண்ணை எந்தத் தீய காரியத்துக்குப் பயன்படுத்தத் திட்ட மிட்டிருக்கிறாளோ, தெரியவில்லை. ஆம்; மணிமேகலையின் மனத்தில் ஏதோ சந்தேகம் தோன்றி யிருக்க வேண்டும். ஏதோ ஓர் அபாயத்தை அவள் எதிர்பார்த்திருக்க வேண்டும். ஆகையினாலேயே அவள் தன்னுடைய உதவியை நாடுகிறாள்.

அந்தக் கள்ளங் கபடமற்ற பேதைப் பெண் முன்னொரு சமயம் தனக்குச் செய்த உதவியை வந்தியத் தேவன் நினைத்துப் பார்த்துக் கொண்டான். அவளுக்கு உண்மையாகவே ஏதேனும் துன்பம் நேர்ந்திருந்து தன்னுடைய உதவியைக் கோருவதா யிருந்தால், அதை மறுப்பது நன்றி கொன்ற பாதகம். எப்படி யிருந்தாலும் உண்மையைத் தெரிந்து கொள்ளுவதற்கு இது ஒரு நல்ல சந்தர்ப்பம். சந்திரமதி போய் விட்டாள்; மணிமேகலை தனியாக இருக்கிறாள். யார் கண்டது? அவளுடைய உதவி அவனுக்கு மறுபடியும் தேவையா யிருக்கக் கூடும். அவளுடைய சகாயத்தினால் இந்தச் சூழ்ச்சி குடிகொண்ட அரண்மனையை விட்டுப் போக முடிந்தால்கூட நல்லதுதான். எதற்கும் அவளிடம் இச்சமயம் போய்க் கேட்டு உண்மையைத் தெரிந்து கொள்ளலாம்......

அல்லிக் குளத்தின் கரையிலிருந்த பளிங்குக் கல் மேடையில் மணிமேகலை உட்கார்ந்திருந்தாள். மேகங்கள் சூழ்ந்திருந்த வானத்தில் ஆங்காங்கு சில நட்சத்திரங்கள் சுடர்விட்டு ஒளிர்ந்தது போல் அல்லிக் குளத்திலும் அடர்த்தியாகப் படர்ந்திருந்த இலைகளுக்கு மத்தியில் மலர்கள் தலைதூக்கி நின்றன. சுற்றி

லும் சூழ்ந்திருந்த இருளில், இரவில் பூக்கும் அம்மலர்களின் வெண்மை நிறம் நன்கு எடுத்துக் காட்டப் பட்டது. அல்லிக்குளத்துக்கு அப்பால் முல்லைப் புதர்களில் பாதி மலர்ந்த பூக்களும் மொட்டுக்களும் நீலநிற விதானத்தில் முத்துக்களைப் பதித்ததுபோல் காட்சி தந்தன.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த மணிமேகலை தனக்குப் பின்னால் காலடிச் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். மிகச் சமீபத்தில் வந்திருந்த உருவத்தைக் கண்டு அவசரமாக எழுந்த போது கால் தடுமாறிப் பின்னுலிருந்த குளத்தில் விழப் போனாள்.

"ராஜகுமாரி! நான்தான்!" என்று கூறிக் கொண்டே வந்தியத் தேவன் மணிமேகலையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

மணிமேகலையின் உடல் சிலிர்த்தது. இயற்கையாக ஏற்பட்ட கூச்சத்தினால் அவனுடைய கரங்களைப் பற்றி அப்பால் தள்ளி விட்டுத் தன்னை விடுவித்துக் கொள்ளப் பார்த்தாள். ஆனால் அதற்கு வேண்டிய பலம் அப்போது அவளுடைய கரங்களில் இல்லை!

அந்த முயற்சியில் மறுபடியும் பின்னாலேதான் சாயும்படி நேர்ந்தது.

வந்தியத் தேவன் இன்னும் கெட்டியாக அவளைப் பிடித்துத் தாங்கி முன் பக்கமாகக் கொண்டு வந்தான்.

மணிமேகலை ஒரு பெருமுயற்சி செய்து தன்னைச் சுதாகரித்துக் கொண்டு, "விடுங்கள்! என்னைத் தொடாதீர்கள்!" என்று கோபக் குரலில் கூறினாள்.

வந்தியத் தேவன் அவளை விட்டு விட்டு "ராஜகுமாரி! மன்னிக்க வேண்டும்!" என்றான்.

மணிமேகலை இன்னமும் படபடப்பு நீங்காத தழதழத்த குரலில், "தங்களை நான் எதற்காக மன்னிக்க வேண்டும்?" என்று கேட்டாள்.

"திடீரென்று வந்து தங்களைத் திடுக்கிடச் செய்ததற்காகத்தான்!"

"வந்ததுதான் வந்தீர்கள்! எதற்காக என்னைத் தொட்டுப் பிடித்துக் கொள்ள வேண்டும்?" என்று மணிமேகலை கேட்ட குரலில், அவள் தன்னை நன்றாகச் சுதாகரித்துக்கொண்டு விட்டாள் என்பது வெளியாயிற்று.

"தாங்கள் குளத்தில் விழாமல் பிடித்துக் கொண்டேன்!"

"அழகாயிருக்கிறது! அன்று ஏரியில் விழுந்து நான் முழுகித் தத்தளித்தபோது இவ்வளவு பரிவு காட்டவில்லையே? இந்த முழங்கால் அளவு தண்ணீர் உள்ள குளத்தில் நான் விழாமல் காப்பாற்றுவதற்கு வந்து விட்டீர்களே?"

"அது என் குற்றந்தான்!"

"நீங்கள் ஒரு குற்றமும் செய்யவில்லை; குற்றமெல்லாம் என்னுடையது."

"அது எப்படி? தாங்கள் குற்றம் எதுவும் செய்யவில்லை. என் பேரில் ஏதோ கோபத்தினால் இவ்விதமாகச் சொல்லுகிறீர்கள்!"

"முன்னொரு நாள் தாங்கள் வேட்டை மண்டபத்துக்குள்ளிருந்து திடீரென்று நான் இருந்த அறையில் புகுந்தீர்கள். அன்றைக்கும் என்னைத் திடுக்கிட வைத்தீர்கள். அப்போதே நான் கூக்குரலிட்டுத் தங்களை என் தந்தையிடம் பிடித்துக் கொடுத்திருக்க வேண்டும்!"

"அன்றைக்கு என்னைப் பெரும் அபாயத்திலிருந்து காப்பாற்றினீர்கள். அதை என்றைக்கும் நான் மறக்கமாட்டேன்..."

"அதற்குப் பதில் தாங்கள் நன்றி செலுத்திய விதத்தை நானும் மறக்கமாட்டேன். நன்றி கெட்டவர்களிலே தங்களைப் போல் நான் பார்த்ததே இல்லை..."

"இளவரசி! இது பெரிய அபாண்டம்! எந்த விதத்தில் நான் நன்றி கெட்டவன்? சொல்லுங்கள்!"

"தங்களை யாரோ கொலைகாரர்கள் துரத்தி வருவதாகப் பொய் சொன்னீர்கள். நான் வேட்டை மண்டபத்துக்குப் போய்ப் பார்த்து விட்டு வருவதற்குள் என்னிடம் சொல்லிக் கொள்ளாமலே திருடனைப்போல் ஓடிவிட்டீர்கள்!"

"திருடனைப்போல் ஓடி விட்டேன் என்றா சொன்னீர்கள்?"

"திருடனைப் போல் என்று கூறியது தவறு; திருடனேதான்!"

"இளவரசி! அன்று நான் எவ்வளவு இக்கட்டான நிலைமையிலிருந்தேன் என்பது தங்களுக்குத் தெரியாது......"

"தெரியாதவளுக்குத் தாங்கள் தெரியப்படுத்தி யிருக்கலாமே? யார் வேண்டாம் என்று தடுத்தார்கள்?"

"தங்கள் தோழி சந்திரமதிதான். தாங்கள் வேட்டை மண்டபத்துக்குள் சென்றதும் சந்திரமதி இன்னொரு வாசல் வழியாக வந்து விட்டாள். அவள் கண்களில் படாமல் இருப்பதற்காக யாழ்க்களஞ்சியத்தில் மறைந்து கொண்டேன்."

"பிறகு அங்கிருந்து மாயமாய் மறைந்து போய் விட்டீர்கள்."

"இல்லை; மச்சுப்படி ஏறி மாடங்களை யெல்லாம் தாண்டி மதில் சுவர் மேலும் ஏறிக் குதித்துத் தான் போனேன். இளவரசி! அன்று என்னை யாராவது கண்டு பிடித்திருந்தால், நான் ஏற்றுக் கொண்டிருந்த காரியமும் கெட்டிருக்கும்; தங்களுக்கும் வசைச் சொல் ஏற்பட்டிருக்கும்......"

"இந்தப் பேதைப் பெண்ணைப் பற்றித் தங்களுக்கு எவ்வளவு கவலை?..."

"உண்மையாகவே கவலைதான்!"

"அப்படியானால், இங்கே தாங்கள் திரும்பி வந்து இத்தனை நாள் ஆயிற்றே? சொல்லாமல் ஓடிப் போன காரணத்தைச் சொல்லி யிருக்கலாமே?......"

"அதற்குச் சந்தர்ப்பத்தைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்......"

"ஏன், ஐயா, வெறும் வார்த்தை? நான் இருக்கும் திக்கையே தாங்கள் திரும்பிப் பார்ப்பது இடையாதே?"

"சகோதரி!......"

"நான் தங்கள் சகோதரி அல்ல!"

"தாங்கள் என் சிநேகிதன் கந்தமாறனுடைய சகோதரி; ஆகையால் எனக்கும் சகோதரி."

"கந்தமாறன் என்னுடைய சகோதரன் அல்ல; தங்களுக்கு அவன் சிநேகிதனும் அல்ல. நம் இருவருக்கும் அவன் கொடிய பகைவன்......"

"இளவரசி! அதுதான் தங்களுக்குத் தெரிந்திருக்கிறதே! சில நாள் முன் வரையில் கந்தமாறன் என் உயிர்க்குயிரான நண்பனாக இருந்தான். இப்போது அடியோடு மாறிப் போயிருக்கிறான். பார்த்திபேந்திரன் எப்போது என் தலைக்கு உலை வைக்கலாம் என்று பார்த்துக் கொண்டிருக்கிறான். ஆதித்த கரிகாலரோ நிமிஷத்துக்கு நிமிஷம் மாறுகிறார். இந்த நிமிஷம் அன்பாகப் பேசுகிறார்; அடுத்த நிமிஷம் எரிந்து விழுகிறார். எப்போது என்ன ஆபத்து வருமோ என்று எதிர்பார்த்துக் காலங் கழிக்கிறேன். இந்த நிலைமையில் என்னுடைய நன்றியைச் செலுத்துவதற்காகத் தங்களை நான் தேடி வந்தால்......"

"ஐயா! தங்களைக் காப்பாற்றிக் கொள்வதில் தாங்கள் இவ்வளவு ஊக்கமா யிருப்பது பற்றி நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்......!"

"இளவரசி! என்னைப் பற்றி நான் கவலைப்படவில்லை. என் உயிரைப் பற்றியும் கவலைப் படவில்லை. தங்களுக்கு என்னால் தீங்கு எதுவும் நேராமலிருக்க வேண்டுமே என்றுதான் கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறேன்."

"கவலைப்பட்டு உருகிக் கொண்டே இருக்கிறீர்கள். ஆண் மக்கள் எல்லாருமே வஞ்சகர்கள் என்று சந்திரமதி சொல்லுவாள். அது உண்மை என்று இப்போதுதான் நிச்சயமாகிறது."

"யார் என்ன சொன்னாலும் சரிதான்; என் உயிர் உள்ளவரையில் தங்களை நான் மறக்கமாட்டேன்! தாங்கள் எனக்குச் செய்த உதவியையும் மறக்கமாட்டேன்!"

மணிமேகலை சிறிது சிந்தனையில் ஆழ்ந்திருந்து விட்டு, "ஐயா! இப்போது தாங்கள் சொன்னதை இன்னொரு தடவை சொல்லுங்கள்!" என்றாள்.

"ஆயிரம் தடவை வேணுமானாலும் சொல்கிறேன். என் உயிர் உள்ளவரையில் தாங்கள் செய்த உதவியை மறக்க மாட்டேன்!" என்று வந்தியத் தேவன் உறுதியுடன் கூறினான்.

"ஆயிரம் தடவை சொன்னால் மட்டும் என்ன பயன்? அதை நிறைவேற்ற முயற்சி எடுக்க வேண்டும் அல்லவா?"

"எந்த விதத்தில் முயற்சி எடுப்பது? சொல்லுங்கள், இளவரசி!"

"தங்கள் உயிர் உள்ள வரையிலே தானே எனக்கு நன்றி செலுத்துவீர்கள்? ஆகையால், தங்கள் உயிரை முதலில் காப்பாற்றிக் கொள்ளவேண்டும். தங்களுக்காக இல்லா விட்டாலும், எனக்காகக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்!"

"இளவரசி! இது என்ன?......"

"ஐயா! உண்மையைச் சொல்லுங்கள்! சற்று முன்னால் நானும் என் தோழியும் பேசிக் கொண்டிருந்ததைத் தாங்கள் கேட்டுக் கொண்டிருந்தீர்களா?"

"மன்னிக்க வேண்டும், இளவரசி! 'ஐயோ! பிசாசு!' என்று தாங்கள் கூவியதைக் கேட்டு ஓடிவந்தேன். அதற்குள் தங்கள் தோழி சந்திரமதி வந்து விட்டாள். உங்களுடைய பேச்சைக் கேட்கும்படி நேர்ந்து விட்டது......"

"தங்களை எப்படியாவது தேடிப் பிடித்து அழைத்து வரும்படி அவளை நான் அனுப்பியது தெரியும் அல்லவா?"

"காதில் விழுந்தது; அதனாலேதான் தங்களை அணுகி வந்தேன்......"

"இல்லாவிடில் என் அருகிலும் வந்திருக்க மாட்டீர்கள். அடடா! என்ன

தரிசனம்? போனால் போகட்டும். தாங்கள் எவ்வளவு கல்நெஞ்சரா யிருந்தாலும், என் மனம் கேட்கவில்லை. தங்களுக்கு ஆபத்து என்றால், நான் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை.''

''இளவரசி! என்னுடைய ஆபத்தான நிலைமை எனக்குத் தெரிந்தே யிருக்கிறது. எனக்குத் தெரியாத புதிய ஆபத்து ஏதேனும் வரப் போகிறதா?''

''ஐயா! இந்த அரண்மனையை விட்டுத் தாங்கள் உடனே போய் விடுங்கள்!''

''என்னைப் புறங்காட்டி ஓடச் சொல்கிறீர்களா?''

''போர்க்களத்தில் புறங்காட்டி ஓடக் கூடாது. சதிகாரர்களிடமிருந்து தப்பிச் செல்வதில் குற்றம் என்ன?''

''யார் சதிகாரர்கள்?''

''வேறு யார்? கந்தமாறனும் பார்த்திபேந்திரனுந்தான்.''

''அவர்களுக்குப் பயந்து நான் இந்த அரண்மனையை விட்டு ஓட முடியாது.''

''என் தமையனால் தங்களுக்குத் தீங்கு நேர்வதை அறிந்து, நான் அதைச் சகித்துக் கொண்டிருக்க முடியாது.''

''இளவரசி! கந்தமாறனுடைய காரியங்களுக்குத் தாங்கள் எப்படிப் பொறுப்பு ஆவீர்கள்?''

''என் காரணமாகவே அவனும் பார்த்திபேந்திரனும் தங்களுக்குத் தீங்கு இழைக்கப் பார்க்கிறார்கள்......''

''தங்களுக்காக நான் துன்பம் அடைந்தால் அது என் பாக்கியம். தாங்கள் செய்த உதவிக்குப் பிரதி செய்ததாக எண்ணிக் கொள்வேன்......''

''நந்தினிதேவி கூறியது சரிதான்!''

''ஆகா! பழுவூர் ராணி தங்களிடம் என்ன சொன்னாள்!''

''உங்களிடம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும்படி சொன்னால், கேட்கமாட்டீர்கள்;—வேறு யுக்தி செய்ய வேண்டும் என்றார். ஐயா! தயவுசெய்து தாங்கள் என்னுடன் வாருங்கள். பழுவூர் ராணி தங்களை ஏதோ ஒரு அவசர காரியமாகப் பார்க்க வேண்டுமாம்.''

''அந்த அவசரமான காரியம் என்னவென்பது தங்களுக்குத் தெரியும் அல்லவா?''

''தெரியும்; பழுவேட்டரையர் கொள்ளிடத்தைத் தாண்டும் போது படகு கவிழ்ந்து போய் விட்டதாக ஒரு செய்தி வந்திருக்கிறது......''

''நானும் கேள்விப் பட்டேன்.''

''தாங்கள் உடனே போய் அதைப் பற்றிய உண்மையைத் தெரிந்து கொண்டு வரவேண்டுமாம். அவ்விதம் தங்களிடம் பழுவூர் ராணி நேரில் கேட்டுக் கொள்ளப் போகிறார்.''

வந்தியத்தேவன் சிறிது யோசித்து விட்டு, ''இதை யெல்லாம் என்னிடம் முன்னால் கூறவேண்டாம் என்று பழுவூர் ராணி எச்சரிக்கவில்லையா?'' என்றான்.

''ஆமாம்!''

''பின், ஏன் இதைப்பற்றி என்னிடம் சொன்னீர்கள்?''

''என் மனம் குழம்பியிருக்கிறதுதான் காரணம். ஐயா! சில நாளைக்கு முன்னால்வரையில் நான் கள்ளங் கபடறியாத பெண்ணா யிருந்தேன். யாரைப் பற்றியும் எந்தவிதமான சந்தேகமும் கொண்டதில்லை. யாரைப் பற்றியேனும் என் தோழிகள் குறை சொன்னாலும் நம்புவதில்லை. இப்போது எல்லாரையும் சந்தேகிக்கிறேன்; எல்லாவற்றையும் சந்தேகிக்கிறேன்.''

''என் முகத்தில் விழித்த நேரத்தினால் ஏற்பட்ட விபரீதம் போலிருக்கிறது.''

''ஒரு விதத்தில் அது உண்மைதான்! பழுவூர் இளைய ராணி தங்களை அழைத்து வரும்படி எனக்குச் சொல்லி அனுப்பினார். அவருடன் பேசும்போது ஒரு சந்தேகமும் தோன்றவில்லை. எல்லாம் சரியென்று தோன்றியது......இப்பால் வந்ததும் அவர் பேரிலேயே சந்தேகம் ஏற்படுகிறது.''

''என்ன சந்தேகம், இளவரசி? நந்தினி தேவியின் பேரில் தங்களுக்கு என்ன சந்தேகம்?''

''அவரும் சேர்ந்து தங்களுக்குத் தீங்கு செய்ய எண்ணுகிறாரோ என்றுதான்.''

''இந்த சந்தேகம் ஏன் வந்தது? அவர் எனக்கு என்ன தீங்கு செய்ய முடியும்?''

''அதுவும் என்னால் சொல்ல முடியாது. ஆனால் அவருடைய பேச்சும் நடவடிக்கைகளும் யோசித்துப் பார்த்தால் சந்தேகம் உண்டாக்குகின்றன. அடிக்கடி ஒரு நீண்ட வாளைக் கையில் வைத்துக் கொண்டு ஏதேதோ பேசிக் கொண்டிருக்கிறார்......''

"ஒரு பெண்ணின் கையில் உள்ள வாளைக் கண்டு நான் அஞ்சவதில்லை. அதைக் காட்டிலும்,......"

"முகத்திலுள்ள கண்களாகிற வாள்களுக்கு அஞ்சுவீர்கள். எல்லாரும் சொல்லும் கதைதான் இது. ஐயா! நந்தினி தேவியின் வாளுக்கு மட்டும் தங்களை நான் பயப்படச் சொல்ல வில்லை. முதன் முதலில் தாங்கள் வேட்டை மண்டபத்திலிருந்து நான் இருந்த அறைக்குள் வந்ததை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள் ......"

"நன்றாக ஞாபகம் இருக்கிறது."

"கொலைகாரர்கள் சிலர் தங்களைத் தொடர்ந்து வந்ததாகச் சொன்னீர்கள். முதலில் அதை நான் நம்பவில்லை. பிறகு வேட்டை மண்டபத்துக்குள் போய்ப் பார்த்தேன். அங்குள்ள மிருகங்களுக்குப் பின்னால் சிலர் மறைந்திருப்பதாகத் தோன்றியது. அவர்கள் தங்களைக் கொல்ல வந்தவர்களா, அல்லது தங்களுடனேயே வந்தவர்களா என்று அப்போது என்னால் நிச்சயிக்க முடியவில்லை. அதனாலேயே அதைப்பற்றி நான் யாரிடமும் சொல்லவில்லை. அவர்களைப் பற்றிச் சொன்னால், தங்களைப் பற்றியும் சொல்ல வேண்டியதாகும் அல்லவா?"

"எனக்குத் தாங்கள் செய்த பேருதவி எவ்வளவு என்பதை இப்போதுதான் நன்கு உணர்ந்து கொள்கிறேன்."

"அதற்காக நான் அந்த விஷயத்தை இப்போது சொல்லவில்லை. சற்று முன்னால் நந்தினி தேவி தங்களை அழைத்து வரும்படி என்னை அனுப்பினார். உடனே, ஏதோ அவரிடம் கேட்பதற்காகத் திரும்பிப் போனேன். கதவைத் தாளிட்டுக் கொண்டிருந்தார். உள்ளே, வேட்டை மண்டபத்திலிருந்து பேச்சுக் குரல்கள் இலேசாகக் கேட்டன. ஐயா! என் சந்தேகத்தைத் தங்களுக்கு இப்போது சொல்லி விடுகிறேன். வேட்டை மண்டபத்தில் யாரோ ஆள்கள் வந்து ஒளிந்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. அவர்களுக்கும் பழுவூர் ராணிக்கும் ஏதோ சம்பந்தம் இருக்க வேண்டும் என்றும் சந்தேகிக்கிறேன்."

**வ**ந்தியத் தேவன் இப்போதுதான் நிலைமையின் முக்கியத்தை நன்கு உணர்ந்தான். இன்று ஏதோ விபரீத சம்பவம் நிகழப் போகிறது என்பதாக அவன் உள்ளுணர்ச்சி அவனுக்குச் சொல்லிக்

கொண்டே யிருந்தது. மணிமேகலை கூறிய செய்திகள் அவன் உள்ளுணர்ச்சியை உறுதிப்படுத்தின.

"இளவரசி! எனக்குத் தாங்கள் ஓர் உதவி அவசியம் செய்ய வேண்டும்!"

"என்னவென்று சொல்லுங்கள்!"

"வேட்டை மண்டபத்துக்கு, வெளியிலிருந்து சுரங்கப் பாதை மூலமாக வரும் வழி ஒன்றிருக்கிறது. இப்போது நந்தினி தேவி இருக்கும் அறைவழியாகப் போவதற்கும் ஒரு வாசல் இருக்கிறது. இவற்றைத் தவிர மூன்றாவது வழி ஒன்றும் இருக்கிறதல்லவா?"

"ஆமாம்; வேலைக்காரர்கள் போவதற்கென்று ஒரு வழி இருக்கிறது. அரண்மனைக்குப் புதிதாக வரும் விருந்தாளிகளை அந்த வழியாகத்தான் என் தந்தை அழைத்துப் போவது வழக்கம்..."

"இளவரசி! அந்த வழியாக என்னை இப்போதே வேட்டை மண்டபத்துக்கு அழைத்துப் போங்கள்!"

"எதற்காக?"

"அங்கே வந்து ஒளிந்திருப்பவர்கள் யார், அவர்கள் என்ன நோக்கத்துடனே வந்திருக்கிறார்கள் என்று கண்டு பிடிப்பதற்குத்தான்......"

"தங்களை அபாயத்திலிருந்து தப்புவிக்க வந்தேன். அபாயத்துக்கே இட்டுச் செல்லும்படி கேட்கிறீர்கள்......"

"என் இடையில் எப்போதும் கத்தி இருக்கிறது. இளவரசி! தெரியாமல் வரும் அபாயத்தைக் காட்டிலும் தெரிந்த அபாயத்தை எதிர்ப்பது எளிது. அபாயத்தை நாமே எதிர் கொண்டு போவது இன்னும் மேலானது."

"ஒரு நிபந்தனைக்குச் சம்மதித்தால் தங்களை வேட்டை மண்டபத்துக்கு அழைத்துப் போவேன்."

"அது என்ன?"

"நானும் தங்களுடன் வருவேன்; என் இடையிலும் ஒரு சிறிய கத்தி வைத்துக் கொண்டிருக்கிறேன்" என்று மணிமேகலை தன்னுடைய கத்தியை எடுத்துக் காட்டினாள்.

வந்தியத்தேவன் அதற்குச் சம்மதம் கொடுத்தான்.

"அப்படியானால் சீக்கிரம் என்னைப் பின் தொடர்ந்து வாருங்கள். சந்திரமதி இங்கே என்னைத் தேடி வருவதற்குள் போய்விட வேண்டும்" என்றாள்.

நந்தவனத்தைக் கடந்து வந்தியத்தேவனை மணிமேகலை அழைத்துச் சென்றாள். பிறகு, மாளிகையின் ஓரமாகச் சுவர்களின் கரிய நிழல் அடர்ந்திருந்த இடங்களின் வழியாக அழைத்துச் சென்றாள். பிறகு மாளிகையில் புகுந்து ஜன சஞ்சாரம் இல்லாத தாழ்வாரங்கள், நடை பாதைகள் வழியாக அழைத்துச் சென்றாள். பின்னர், கதவு சாத்தப்பட்டிருந்த ஒரு வாசற்படியின் அருகில் வந்தாள். அங்கேயே வந்தியத்தேவனை நிற்கச் செய்து விட்டு விரைந்து சென்று ஒரு கை விளக்கை எடுத்து வந்தாள். கதவைத் திறந்து உள்ளே விளக்கைத் தூக்கிக் காட்டியபோது வரிசையாகப் படிக்கட்டுக்கள் அமைந்த குறுகிய நடை பாதை காணப்பட்டது. இருவரும் அப்படிகளில் இறங்கிச் சென்றார்கள். சிறிது நேரம் சென்ற பிறகு, முன்னால் சென்ற மணிமேகலை சட்டென்று நின்று, மெல்லிய குரலில், "நில்லுங்கள்! ஏதோ காலடிச் சத்தம் போலிருக்கிறது. தங்களுக்குக் கேட்கிறதா?" என்றாள்.

---

## அகில உலகச் சிறுகதைப் போட்டி

○●○

அகில உலகச் சிறுகதைப் போட்டிக்கு ஆயிரத்துக்கு மேற்பட்ட தமிழ்க் கதைகள் வந்துள்ளன. ஆனால் இந்தியாவில் அகில உலகச் சிறுகதைப் போட்டியை நிர்வகிக்கும் பொறுப்புள்ள "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகையினர் இந்தப் போட்டியில் கலந்து கொண்டுள்ள இதர மொழிக்காரர்கள் இன்னும் அவகாசம் வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருப்பதால் போட்டிக் கதை அனுப்புவதற்குரிய தேதியைச் செப்டம்பர் 30உ வரை ஒத்தி வைத்திருக்கிறார்கள். ஆகையால் இதுவரை சிறு கதைப் போட்டிக்குத் தமிழ்க் கதை அனுப்பாதவர்கள் விரும்பினால் செப்டம்பர் 30உ வரையில் கதைகள் அனுப்பி வைக்கலாம்.

# பட உலகில் ஓர் அற்புதம்

"கர்நாடகம்"

சில நாளைக்கு முன்பு நான் கைலாச யாத்திரை சென்றிருந்தேன். கைலாசம் என்றால், இமயமலைத் தொடரில் எங்கேயோ உள்ள கைலையங்கிரியைச் சொல்லவில்லை. ஸ்ரீ பரமசிவனும் பார்வதிதேவியும் கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் சாக்ஷாத் கைலாசத்தையே சொல்லுகிறேன்.

கைலாச யாத்திரையின் போது எனக்கு ஏற்பட்ட உணர்ச்சி பரவசத்தை விவரிக்க முடியாது. மேக மண்டலங்களுக்கு மேலே மேலே மேலே போகும்போது உள்ளமும் உடம்பும் ஆனந்த பரவசம் அடைகின்றன.

ஆம்; இந்த உடம்புடனேயே கைலாசத்துக்குப் போயிருந்ததாகத்தான் சொல்லுகிறேன். 'கூண்டோடு கைலாசம்' சென்று, அங்கிருந்து திரும்பியும் வருவது எளிதில் கிடைக்க முடியாத பாக்கியந்தான். அத்தகைய பெரும் பேறு ஒளவை மூதாட்டியின் கருணையினால் எனக்குக் கிடைத்தது. ஒளவையை எதிர்கொண்டு கைலாசத்துக்கு அழைத்துச் சென்ற திவ்ய தேஜோமயமான தேவர்களுடனே சேர்ந்து நானும் போனேன்.

வெள்ளி நிறம் பெற்று ஒளிர்ந்த மேக மண்டலங்களுக் கிடையிலே பளிங்குக் கல் படிகளில் ஏறிப் போகும்போது எவ்வளவு உற்சாகம் உண்டாகிறது? ஏறுவதில் ஏதேனும் சிரமம் உண்டா? களைப்பு உண்டா? இடையவே கிடையாது! படிகளிலே காலை வைத்து ஏறுகிற உணர்ச்சியே கிடையாது. ஏதோ ஒரு தெய்வீக சக்தியினால் மிதந்து மிதந்து மிதந்து மேலே போவதாகத்தான் தோன்றுகிறது. கைலாசத்துக்குப் போகும் வழியில் ஆங்காங்கு அமைந்திருக்கும் சித்திர விசித்திரமான மணி மண்டபங்களின் அழகைத்தான் என்னவென்று சொல்வது!

அவ்வளவு ஆனந்த மயமான கைலாசத்திலிருந்து திரும்பிப் பூலோகத்துக்கு வர மனம் வரவில்லைதான்! அங்கேயே தங்கிவிடலாம் என்ற எண்ணம் மேலோங்கி நின்றது. ஆயினும் "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற பெரியோர் வாக்குக் கிணங்க, நேயர்களுக் கெல்லாம் நான் கண்ட கைலாசத்தைப் பற்றித் தெரிவிக்க வேண்டுமென்ற ஆர்வம் என்னைத் திரும்பக் கொண்டுவந்து சேர்த்தது. அந்த ஆர்வத்துடனே, "இவ்வளவுதான்; படம் முடிந்து விட்டது! போகலாமா?" என்று பக்கத்திலிருந்த நண்பர் கூறிய வார்த்தைகளும் என்னை இந்த மண்ணுலகத்துக்குத் திரும்பி வரும்படி செய்தன......

"சரி, சரி! ஏதோ ஒரு சொப்பனத்தைப் பற்றிச் சொல்கிறீர்! எங்களுக்குத் தெரியாதா?" என்று நேயர்கள் சிலர் முணு முணுப்பது கேட்கிறது.

இல்லை! இல்லை! சொப்பனம் எதையும் பற்றி நான் சொல்லவில்லை.

இருபது வருஷத்துக் கனவு பலித்து நனவானது பற்றித்தான் சொல்கிறேன்.

நீங்களும் நானும் எத்தனையோ நெடுங் காலமாக ஸினிமாக் கலையை உயர்த்துவது பற்றிச் சிந்தித்து வந்திருக்கிறோம். 'வெள்ளித் திரையானது மக்களின் ஒழுக்கத்தையும் பண்பாட்டையும் உயர்த்தி மனோரதம். அடையச் செய்வதற்கு ஓர் அற்புத சாதனமாயிற்றே? இந்தச் சாதனத்தைக் கொண்டு தமிழரின் மேம்பாட்டைச் சித்திரிக்க யாராவது முன் வரமாட்டார்களா?' என்று ஆசைப் பட்டிருக்கிறோம்.

தமிழர் வாழ்வை அடிப்படையாகக் கொண்டு தமிழ் நாட்டையும் தமிழர்களையும் உயர்த்தக்கூடிய ஒரு படம் வெளிவராதா என்று ஏக்கம் அடைந்திருக்கிறோம். இது வெறும் பகற் கனவாகவே போய் விடுமோ என்று சில சமயம் நிராசை அடைந்திருக்கிறோம்.

தமிழ் நாட்டைப் பற்றிய வரையில் அந்தக் கனவு பலித்து விட்டது; நம்முடைய மனோரதம் நிறைவேறி விட்டது.

தமிழ் மூதாட்டியாகிய ஒளவையாரும் ஜெமினி அதிபர் ஸ்ரீ எஸ். எஸ். வாஸனும் ஒத்துழைத்து, நம் காலத்திலேயே வெள்ளித் திரை பற்றிய நம் ஆசைக் கனவு நிறைவேறும்படி செய்திருக்கிறார்கள்.

ஒளவை மூதாட்டியும் ஸ்ரீ எஸ். எஸ். வாஸனும் என்னைக் கைலாசத்துக்குமட்டுமே அழைத்துச் சென்றார்கள் என்று எண்ண வேண்டாம். 'பூலோக கைலாசம்' என்று நாம் பெருமிதத்துடன் சொல்லிக் கொள்ளக் கூடிய பழந் தமிழ் நாட்டுக்கும் அழைத்துச் சென்றார்கள். இந்த நாளில் நாம் கனவிலும் காணமுடியாத காட்சிகளை யெல்லாம் காணும்படி செய்தார்கள். கேட்பதற்கரிய இசைப் பாடல்களையும் இன்னமுதப் பொன்மொழிகளையும் கேட்கும்படி செய்தார்கள். தமிழர்களாகப் பிறந்து தமிழ் நாட்டில் வாழ்வோர் எல்லோரும் பெருமித முற்றுத் தலை நிமிர்ந்து நிற்கும்படி செய்தார்கள்.

ஒளவை மூதாட்டி சோழ மன்னனுடைய சபைக்கு வருகையில் அவருக்கு அளிக்கப் படும் மகத்தான வரவேற்பு வைபவங்களைப் பார்க்கும் தமிழன் எவனுக்கும் உள்ளம் உற்சாகத்தினால் விம்மும்; உடல் ஆனந்தத்தினால் சிலிர்க்கும்; தோள்கள் பெருமிதத்தினால் பூரிக்கும். இந்தக் கோலாகலமான காட்சிகளையே திரும்பத் திரும்பப் பார்த்துக்



"சுட்ட பழமா? சுடாத பழமா?"

கொண்டு வாழ்நாளைக் கழித்து விடலாம் என்றே தோன்றும்.

அம்மம்மா! தமிழன்னைக்கு அளிக்கப்படும் அந்த வரவேற்புக் காட்சிகளைப் பார்க்கும் போது பழந் தமிழ் நாட்டின் செல்வச் சிறப்புக்களும் பண்பாட்டின் உயர்வுகளும் நம் உள்ளத்தில் நிரந்தரமாகப் பதிந்து விடுகின்றன. அது மட்டு மல்ல; இந்த நாளில் வாழும் தமிழர்கள் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் எவ்வளவு உயர்வான சாதனைகளைச் செய்யக் கூடும் என்பதும் இடையிடையே நமக்கு நினைவு வருகிறது.

மேனாட்டில் ஸெஸில் பி. டெமில், அலெக்ஸாண்டர் கோர்டா முதலிய படத் தயாரிப்பாளர் பழைய ரோம சாம்ராஜ்யத்தின் சரித்திர நிகழ்ச்சிகளை ஆதாரமாகக் கொண்ட படங்களை வெளியிட் டிருக்கிறார்கள். ரோம சாம்ராஜ்யத்தின் மகோந்நதத்தை நம் கண் முன்னால் பிரத்யட்சமாகக் காட்டுவதற்குரிய மகத்தான காட்சிகளை வெள்ளித் திரையில் வெளியிட்டிருக்கிறார்கள். அவற்றைப் பார்த்து நம்மில் பலர் அதிசயத்தினால் திகைத்துத் திணறித் திண்டாடிப் போயிருக்கிறோம்.

சோழ மன்னன் ஔவை மூதாட்டிக்கு அளித்த வரவேற்புக் காட்சிகளின் மூலமாக ஸ்ரீ எஸ். எஸ். வாஸன், ஸெஸில் பி. டெமிலையும் அலெக்ஸாண்டர் கோர்டாவையும் புறமுதுகிடும்படி செய்திருக்கிறார். இதை எண்ணும் போதெல்லாம் நாம் பெருமிதம் கொள்ளாமலிருக்க முடியாது.

ஆனால் பழந் தமிழ் நாட்டின் மேன்மைகளை மட்டுந்தான் "ஔவையார்"ப் படம் சித்திரிக்கிறது என்று சொல்வதற்கில்லை. மனித சுபாவம் எப்போதும் ஏறக்குறைய ஒரு மாதிரியானது. சிறுமைக் குணங்கள் படைத்தவர்கள் அந்நாளிலும் இருந்திருக்கிறார்கள். மழையின்மையால் நாடு வறண்டு அந்த நாளிலும் வயல்கள் வெடித்துப் போயிருக்கின்றன. அந்த நிலைமையில் தான தர்மங்களைச் செய்து புகழ் பரப்பிய வள்ளலைக் கண்டு இன்னொரு சிற்றரசன் பொறாமை கொண்டு அவனுக்கு இன்னல் விளைக்கிறான். முல்லைக் கொடிக்குத் தேரை அளிக்கிறான் பறம்பு நாட்டுப் பாரி வள்ளல். அவன் புகழ் பெருகுவதைக் கண்டு சகியாமல் அவனை அடக்குவதற்கு மூவேந்தர்களும் தம் படைகளை அனுப்புகிறார்கள். போருக்கு வந்தவர்களிடம் அஹிம்சை உபதேசம் செய்ய வந்த பாரியின்மீது அம்பை விட்டுக் கொல்கிறான் ஒரு 'சுத்த' வீரன். உலகத்தில் இணையற்ற அறநூலை அருளிய திருவள்ளுவரை மதியாமல் புறக்கணித்த தமிழ்ப் புலவர் சிகாமணிகள் அந்த நாளிலும் இருந்திருக்கிறார்கள். புருஷனை ஓட ஓட விரட்டிய பெண்மணியும் கூட இருந்திருக்கிறாள். கோரைக்கா வாழ்வான் போன்ற லோபிகளும் இருந்திருக்கிறார்கள்.

ஆனால் இத்தகைய சிறுமைகள் பழந் தமிழ் நாட்டின் பெருமையை இன்னும் நன்றாக எடுத்துக் காட்டுவதற்கே உபயோகமாகின்றன. மனித சமூகத்துக்கு என்றென்றும் பயன்படக் கூடிய அருமையான மூதுரைகளை ஔவை மூதாட்டி இனிய இசைத் தமிழில் எடுத்துரைப்பதற்கும் பயன்படுகின்றன.

தெய்வத் தமிழின் பெருமையையும் தெய்வ பக்தியின் சக்தியையும் நிலைநாட்டுவதற்கு ஔவையார் சில சமயம் அற்புதங்களை நிகழ்த்த வேண்டி யிருக்கிறது. பாண்டியனுடைய அரண்மனைக் கதவை இறுகச் சாத்திக் குறுக்கும் நெடுக்கும் சங்கிலிகளால் பிணித்துப் பெரியதொரு பூட்டும் போட்டுப் பூட்டி விடுகிறார்கள். ஔவை மூதாட்டி ஒரு பாட்டுப் பாடியதும் பூட்டு உடைந்து சங்கிலிகள் அறுந்து கதவு திறந்து கொள்கிறது.

பாரி வள்ளலின் பெண்களை மணந்து கொள்ள விரும்பிய திருக்கோவலூர் இளவர

சனை மூன்று வேந்தர்களும் சேர்ந்து சிறைப் படுத்தி விடுகிறார்கள். ஔவையார் புத்திமதி சொல்லியும் அவர்கள் கேட்கவில்லை. பின்னர் அம்மூதாட்டி விநாயகப்பெருமானைப் பிரார்த்தனை செய்கிறார். விநாயகப் பெருமான் யானை உருவங்கொண்டு ஒரு பெரிய யானைப் படையைத் திரட்டி அனுப்புகிறார். யானைகள் கோட்டைக் கதவுகளையும் மதில் சுவர் களையும் மோதி உடைத்துத் தகர்த்துத் தரை மட்ட மாக்குகின்றன. (ஸாம்ஸன்-டெலீலா படத்தில் ரோமாபுரி சக்கரவர்த்தியின் அரண்மனை தகர்ந்து விழுகிறதே; அதைக் காட்டிலும் பன்மடங்கு பிரமாதமா யிருக்கிறது இந்தக் காட்சி!) அப்படியும் திருமணத்தைத் தடுத்து விடுவது என்று தீர்மானித்துக் கொண்டு மூவேந்தர்கள் படைகளுடன் விரைந்து வருகிறார்கள். ஔவையார் தமது தவ வலிமையினால் பூமியைப் பிளக்கும்படி செய்து அவர்களை அப்பால் நிறுத்திவிடுகிறார்.

இப்படிச் சில அற்புதங்கள் "ஔவையார்" படத்தில் நிகழ்கின்றன. அவற்றைப் பார்க்கும்போது "இவையெல்லாம் நடந்திருக்குமா?" என்ற எண்ணமே நமக்குத் தோன்றுவதில்லை. திரள் திரளாக யானைகள் படையெடுத்து வந்து முட்டி மோதிக் கோட்டைச் சுவர்களை இடித்துத் தகர்த்து வீழ்த்துவதை நம் கண் முன்னால் காணும்போது, "நடந்திருக்குமா?" என்ற ஐயம் தோன்றுவதற்கு இடம் எங்கே? இவ்விதமே படத்தில் வரும் எல்லாக் காட்சிகளும் நிகழ்ச்சிகளும் அவ்வளவு தத்ரூபமாகவும் விறு விறுப்புடனும் அமைந்திருக்கின்றன.

*　　　　*　　　　*

ஆனால் இந்தப் படத்தில் காட்டப்படும் அற்புதங்கள் எல்லாவற்றிலும் மிகப் பெரிய அற்புதம் என்னவென்று என்னைக் கேட்டால், ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் இம்மாதிரி ஒரு படத்தைத் தயாரிப்பதில் வெற்றியடைந்திருப்பதுதான் என்று சொல்வேன்.

"சந்திரலேகா" என்னும் படம் திரை உலகில் ஒரு மகத்தான சாதனைதான். அந்தப் படம் இந்தியா தேசம் முழுவதிலும் காட்டப்பட்டுப் புகழ்பெற்றது. அந்தப் படம் எடுத்தவருக்குப் பணம் கொடுத்தது. அதைக் காட்டிலும் பன்மடங்கு அரசாங்கத்துக்கு அதிக பணம் கொடுத்தது. ஆயினும் அதை ஒரு "அற்புதம்" என்று சொல்ல மாட்டேன். இளம் கதாநாயகி, இளம் காதலன், அவர்களுக்கு ஏற்பட்ட சோதனைகள், நிகழ்ச்சிகள் நிறைந்த தொடர்பான கதை, மனத்தை உருக்கும் சோக கட்டங்கள், கதையிலே பின்னிக் கொண்டு வந்த ஜிப்ஸி நடனம், சர்க்கஸ் வித்தை, டிரம் டான்ஸ்—இவையெல்லாம் சேர்ந்து "சந்திரலேகா" படம் மிகச் சிறந்த வெற்றியாயிற்று.

"ஔவையார்" கதையிலோ அத்தகைய இயற்கையிலேயே கவர்ச்சி அமைந்த அம்சங்கள் இல்லை. ஔவையாரின் வரலாறு தமிழ் நாட்டில் எப்படி வழி வழியாகக் கர்ண பரம்பரையில் வந்திருக்கிறதோ, அதிலிருந்து அதிகம் மாறுபடாமல் இருக்க வேண்டும். உதாரணமாக ஔவையின் இளம்பருவ வாழ்க்கையில் ஒரு காதல் சம்பவத்தைப் புகுத்தி யிருக்க முடியுமா! காதலர்கள் பல கஷ்டங்களுக்கு உள்ளான பிறகு, காதலன் இறந்து போனபடியால், ஔவை விரக்தியடைந்து சந்நியாச வாழ்க்கையை மேற்கொண்டதாகக் கதைப் போக்கை மாற்றியிருக்க முடியுமா! அத்தகைய மாறுபாட்டைத் தமிழ் மக்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள்.

ஔவையாரின் வரலாற்றில் மத்திய சம்பவம் என்பது ஒன்றும் கிடையாது. காதல் இல்லை; அதிலிருந்து உண்டாகும் மற்ற ரஸங்களும் இல்லை. ஔவை வரலாற்றில் வரும் நிகழ்ச்சிகள் தனித் தனியாக நிற்பவை. கர்ண பரம்பரையாக வந்திருக்கும் அந்தத் தனித்தனி நிகழ்ச்சிகளில் அதிக மாறுதல் செய்வதற்கும் இடமில்லை. இத்தகைய வரலாற்றுக் கதையை வைத்துக் கொண்டு இவ்வளவு கவர்ச்சிகரமான மகோந்நதமான படத்தை ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் தயாரித்திருப்பது ஔவை நிகழ்த்திய அற்புதங்கள் எல்லாவற்றையும் விடப் பெரிய அற்புதம் என்று சொல்லத் தோன்றுகிறது. படத்தைப் பார்க்கும்போது, ஒரு திகில் மனதில் இருந்து கொண்டே யிருக்கிறது. அது என்ன தெரியுமா! கண்ணைக் கொட்டினால் எந்த அருமையான காட்சி போய் விடுமோ, கவனத்தைச் சிறிது திருப்பினால் எந்த ரஸமான கட்டம் போய் விடுமோ என்ற திகில்தான்! அப்படி ஒன்றோடொன்று மோதிக் கொண்டு மேலே மேலே நிகழ்ச்சிகள் வந்து கொண்டிருக்கின்றன. அதே சமயத்தில் அவை ஒன்றையொன்று தழுவிக் கொண்டும் பின்னிக் கொண்டும் 'அடுத்தாற்போல் என்ன!' என்று அறியும் ஆவலைத் தூண்டிக்

அரியது கேட்ட வரிவடிவேலன்





தமிழ்நாட்டுக் குழந்தைகளுக்கு ஒளவை மூதாட்டி அழியாச் செல்வத்தை அளிக்கிறார்.

கொண்டும் வருகின்றன. ஆகவே, "பட உலகில் இந்த ஒளவையார் ஓர் அற்புதம்; மேனாட்டிலே கூட யாரும் சாதித்து அறியாத அற்புதம்" என்று சொன்னால் அது மிகையாகாது.

ஒவ்வொரு நிகழ்ச்சியின் முடிவும் ஒரு போதனை; ஒவ்வொரு போதனையும் மனித குலத்தை ஒருபடி மேலே உயர்த்தும் சாதனை.—இப்படியாக உயர் தரமாக அமைந்திருக்கும் இப்படத்துக்கு நெடுகிலும் ஜீவ களையை அளித்து வருபவர் ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் அவர்கள். "ஒளவையார்" என்னும் பாத்திரத்துக்கு மிகப்பொருத்தமானவர். சொந்த வாழ்க்கையில் உன்னத இலட்சியங்கள் உள்ளவர். அந்த இலட்சியங்களைக் கடைப்பிடிப்பதில் நெஞ்சுத் துணிவும் தீரமும் படைத்தவர். சொல்லாற்றல் பெற்றவர். தமிழ் மொழியைத் தெளிவுடனும் வன்மையுடனும் கையாண்டு கேட்பவர்களின் உள்ளத்தில் பசுமரத்தாணி போல் பதியச் செய்யக் கூடியவர். அவருடைய இசைத் திறனைப்பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. எனவே, ஸ்ரீ கே. பி. சுந்தராம்பாள் எல்லா வகையிலும் "ஒளவை"ப் பாத்திரத்துக்கு ஏற்றவராக விளங்குகிறார். "இவர் ஒளவையின் புனர் அவதாரம்" என்று சொல்லக் கூடியவாறு நடித்திருக்கிறார். ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் "ஒளவையார்" பாத்திரத்தில் நடித்திருக்கிறார் என்றால், அவர் பாடி விருப்பதெல்லாம் தென்னாட்டு இசைக் கலையான கர்நாடக சங்கீதமாக மிளிரும் என்று எதிர்பார்ப்பதில் தவறு இல்லை. அவ்வாறு எதிர்பார்த்துப் படம் பார்க்கப் போகிறவர்கள் பரிபூரணமான திருப்தி அடைவார்கள். "ஒளவையார்" படத்தில், தமிழும் தமிழிசையும் தமிழர் பண்பாடும் ஒன்றையொன்று தழுவி நிற்கின்றன. மூன்று தங்கக் கம்பிகளைச் சித்திர விசித்திர வேலைப்பாடுகளுடன் பின்னிவிட்ட சங்கிலித் தொடரைப் போல் அவை திகழ்கின்றன.

"ஒளவையார்" படத்தை ஸ்ரீ வாஸன் தயாரிக்கத் தொடங்கி ஆறு ஆண்டுகள் ஆகின்றன என்பது நேயர்கள் அறிந்த செய்தியே. படத்தைப் பார்த்தால், "ஆறு வருஷம் என்ன! பதினறு வருஷம் இதற்காகச் செலவு செய்திருந்தாலும் தகும்" என்று தான் தோன்றும்.

இது "ஒளவையார்" படத்துக்கு விமரிசனம் அல்ல. ஒரு தடவை பார்த்த உடனே மனதில் தோன்றிய எண்ணங்களை மேலே வெளியிட்டிருக்கிறேன். படத்தின் உயர்ந்த அம்சங்கள் பலவற்றையும் விவரித்து விமரிசனம் எழுதுவதாயிருந்தால், படத்தைப் பன்முறை பார்க்க வேண்டும். அதற்குள்ளே லட்சக்கணக்கான தமிழர்கள் படத்தைப் பார்த்து விட்டிருப்பார்கள்.

அவர்கள் எல்லோருடைய சார்பாகவும் ஜெமினி ஸ்டுடியோ அதிபருக்கு முன் கூட்டியே நன்றி செலுத்துகிறேன். பன்னெடுங்காலமாக சொப்பனமாக இருந்த இலட்சியத்தை நிறைவேற்றி, தமிழரையும் தமிழ் நாட்டையும் மேன்மைப்படுத்தும் இந்த அற்புத சிருஷ்டியை அளித்ததற்காக என் மகிழ்ச்சியை ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.



பல் கூச்சத்தினால் கூசும் பல்லால் அவதியுறுகிறீர்களா?

காலஹரணம்செய்யாதீர்கள் ... இன்றே நீங்கள் பல் வைத்தியரைக் காணுங்கள்; வீடு திரும்புகையில்ஒரு ட்யூப் 'பினாகாவும்' வாங்குங்கள்.

சாஸ்திரீய முறையில் தயாரிக்கப்பட்ட "பினாகா" பற்பசை, பற்சிதைவு, பலமற்ற ஈறுகள், வாய் நாற்றம் (பயோரியா) இவற்றிற்குக் காரணமாயுள்ள அபாயகரமான கிருமிகளை எதிர்த்து அறவே ஒழிக்கிறதென்பது பல நடவைகளில் செய்யப்பட்ட வைத்தியப்பரிசோதனையினால் நன்கு நிரூபிக்கப்பட்டுள்ளது.

## பினாகா (ரோஸ்)

சக்தி வாய்ந்த "ஸல்போரிஸினோலியட்" என்னும் பொருள் கொண்டது.

## பினாகா க்ரீன்

இயற்கையின் ஆச்சரியமூட்டக்கூடிய நாசினியான சுத்தி செய்த க்ளோரோபில்லும் கொண்டது.




ரேடியோ ஸிலோனில் ப்ரதி திங்கட்கிழமை காலை 8 மணிக்கு பினாகா ஹிட் பரேட்டையும் ப்ரதி ஞாயிறு காலை 8 மணிக்கு பினாகா கீதமாலையையும் கேளுங்கள்.

"ஸீபா" வின் விசேஷ குணம் பொருந்திய ஒரு பற்பசை.

CBK 11073 TAMIL

# சுமை இறங்கியது!

ஸ்ரீவத்ஸன்

குவிந்த தலை நிமிராமல் கணக்கைக் கூட்டிக் கொண்டிருந்தான் பிரபாகரன்.

"ஸார், உங்களை மானேஜரய்யா கூப்பிடுறாருங்க" என்று வந்து கூப்பிட்டான் பியூன் கந்தன்.

லெட்ஜருக்குள் பென்சிலை வைத்து மூடிவிட்டு மானேஜர் அறைக்குள் சென்றான் பிரபாகர்.

"மிஸ்டர் பிரபாகர்! நம்முடைய பாங்கு தஸ்தாவேஜுகள் சிலவற்றை மதுரை ஆபீஸில் கேட்டிருக்கிறார்கள். அந்தத் தஸ்தாவேஜுகள் மிகவும் ரகசியமானவை. அவற்றை எடுத்துக் கொண்டு நாளைய தினம் நீர் புறப்பட வேண்டும்" என்றார் காரியாலய மானேஜர்.

மறுநாள் பிரபாகரன் தஸ்தாவேஜுகளை எடுத்துக்கொண்டு புறப்படும்போது, "பிரபாகரன், மதுரையில் பெரிய தெருவில் என் சகோதரி இருக்கிறாள். அவள் வீட்டு விலாசம் இந்தாரும். வேலை முடிந்து வரும்போது அப்படியே அங்கு போய் எல்லோரும் சௌக்கியமா என்று பார்த்து வாரும்!" என்று சொன்னார் மானேஜர்.

பிரபாகரன் மதுரைக்குப் போனான். வேலையெல்லாம் சீக்கிரமாகவே முடிந்து விட்டது. மானேஜரின் சகோதரி வீடு தேடிப் போனான். அஸ்தமிக்கும் வேளை. வீட்டை அடையாளம் கண்டுகொண்டு வீட்டின் வாயிலில் வந்து படி ஏறினான். அப்பொழுது உள்ளேயிருந்து, "வருவார் வருவார் என்று வழி மேல் விழி வைத்தேன்" என்ற அடிகளை யாரோ பாடிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது.

மிகவும் சுகமான சாரீரம். உள்ளே எட்டிப் பார்த்தான். பதினெட்டு வயதுடைய பாவை ஒருத்தி ஊஞ்சலில் உட்கார்ந்தபடியே வீசி வீசி ஆடிக் கொண்டும் பாடிக் கொண்டுமிருந்தாள். அந்த அழகியின் பாட்டிலும் அழகிலும் மனத்தைப் பறிகொடுத்தான் பிரபாகரன். அவள் பாட்டு முடிந்ததும் அவனையுமறியாமல் அவன் வாய் "சபாஷ்" என்றது. அந்தப் பெண் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். ஒரு ஆடவன் நின்று கொண்டிருந்ததைப் பார்த்து அவள் திடுக்கிட்டாள். ஆனால் அடுத்த நிமிஷமே சமாளித்துக் கொண்டு, "நீங்கள் யார்!" என்று கேட்டாள்.

"சுப்பலக்ஷ்மி அம்மாளின் வீடு இதுதானே!" என்று கேட்டான் பிரபாகரன்.

"ஆமாம், அம்மா கோவிலுக்குப் போயிருக்கிறாள். இதோ வந்து விடுவாள். நீங்கள் யார் என்று சொல்லவில்லையே! நான் சுப்பலக்ஷ்மி அம்மாளின் பெண் மாலதி" என்றாள் அந்தப் பெண்.

"உங்கள் மாமா மானேஜராயிருக்கும் திருச்சி பாங்கில் நான் ஒரு குமாஸ்தா. இங்கே பாங்கு வேலையாக வந்தேன். அப்படியே உங்களை எல்லாம் பார்த்துவிட்டு வரச் சொன்னார்" என்றான்.



"ரொம்ப சந்தோஷம். உள்ளே வந்து ஊஞ்சலில் உட்காருங்கள். அம்மா வந்து விடுவாள்" என்றாள் மாலதி.

அவள் சொல்லி முடிப்பதற்கும் கோவிலுக்குப் போன அவள் தாயார் திரும்பி வருவதற்கும் சரியாயிருந்தது.

"அம்மா! திருச்சியிலிருந்து மாமா இவரை அனுப்பியிருக்கிறார். இவர், மாமா ஆபீஸில் குமாஸ்தாவாம்!" என்று பிரபாகரனைத் தன் தாயாருக்கு அறிமுகப்படுத்தினாள் மாலதி.

"வா அப்பா, திருச்சியில் எல்லோரும் சௌக்கியமா!" இப்படி ஆரம்பித்த பேச்சு வளர்ந்தது. அன்று இரவு பிரபாகரனுக்கு அவர்கள் வீட்டிலேயே சாப்பாடு படுக்கையெல்லாம். மாலதி, மாலதியின் தாயார் இருவருடைய உபசாரமும் பலமாயிருந்தது. மறுநாள் காலை பிரபாகரன் வேலைக்குத் திரும்ப வேண்டும். ஆனால் அவனுக்கு மாலதியை விட்டுப் பிரிவதற்கு மனமில்லை.

எனவே, தனக்குத் திடீரென உடம்பு அசௌக்கியமாயிருப்பதாய்ச் சொல்லி இரண்டு நாள் லீவுக்கு

எழுதிப் போட்டான். மங்கம்மா சத்திரத்துக்குப் போவதாகக் கிளம்புவதுபோல் நடித்தான். "இந்த உடம்போடு போவானேன்! இங்கேயே இரேன்! கொஞ்சம் ரசம் சாதமாவது சாப்பிடலாம்" என்றாள் மாலதியின் தாயார். அந்த இரண்டு நாள் பிரபாகரன் இந்த உலக சிந்தனையே இல்லாமல் கனவு உலகத்தில் இன்பமாகச் சஞ்சரித்தான். மறுநாள் பிரியா விடையுடன் பிரிந்தான்.

* * *

"என்ன பிரபாகரன், நீர் அங்குபோய் லீவு போட்டு விட்டீரே! வேலை அதிகமாயிருக்கும் போது இப்படிச் செய்யலாமா! என் சகோதரியைப் பார்த்தீரா!" என்று கேட்டார் மானேஜர்.

"ஊருக்கு வரும்போது அப்படியே ஒரு நிமிடம் போய் விசாரித்து விட்டு வந்தேன். எல்லோரும் சௌக்கியம்" என்றான். அவன் அங்கு இரண்டு நாள் தங்கியதைக் கேட்டால் பருவ வயது வந்த மருமாள் இருக்கும் போது இந்தப் பிரம்மச்சாரி இரண்டு நாள் ஏன் தங்கினான் என்று அவர் சந்தேகப்பட்டால் அப்புறம் அவன் மாலதியை அடைய முடியாது அல்லவா!

"என் மருமானுக்கு ஏதோ உடம்பு சரியில்லை என்று என் சகோதரி எழுதியிருந்தாளே! அவன் எப்படியிருக்கிறான்!" என்று கேட்டார் மானேஜர். அவன் மாலதியைப் பார்த்தானா என்று நேரடியாகக் கேட்பதை விரும்பாமல் அவர் அப்படி ஜாடையாய்ச் சொன்னார்.

தான் அவளைப் பார்த்ததாகச் சொன்னால் அவர் ஏதாவது தப்பாக நினைக்கப் போகிறாரோ என்று எண்ணி அவன், "நான் போனபோது உங்கள் மருமான் டாக்டர் வீட்டுக்குப் போயிருப்பதாக உங்கள் சகோதரி சொன்னாள். நான் அவசரத்தில் வந்து விட்டதால் அவளைப் பார்க்க முடியவில்லை" என்று ஒரு முழுப் பொய்யைச் சொன்னான்.

அதன் பிறகு பதினைந்து நாட்களாயின. பிரபாகரனுக்கு இருப்புக் கொள்ளவில்லை. ஒரு தடவை மதுரை போய்விட்டு வர எண்ணினான். மதுரை போவதாகச் சொன்னால் மானேஜர் கோபிப்பார் என்று எண்ணி மதராஸ் போகவேண்டிய அவசர வேலை என்று சொல்லி லீவு வாங்கிக் கொண்டுமதுரைக்குப் போனான். நேராகத் திருப்பரங்குன்றம் போய் ஒரு அர்ச்சனை செய்துகொண்டு மதுரைக்குப் போனான். "வா அப்பா! எப்போ வந்தாய்!" என்று கேட்டாள் மாலதியின் தாயார்.

"இந்தாங்கோ விபூதிப் பிரசாதம். ரொம்ப நாளாகத் திருப்பரங்குன்றம் பிரார்த்தனை. வரவே முடியவில்லை. இரண்டு நாளைக்கு முன் ஒரு கெட்ட சொப்பனம் கண்டேன். ஸ்வாமிக்கு வேண்டிக் கொண்டு பிரார்த்தனை செய்யாத குற்றம் என்று தெரிந்தது. அதற்காகத்தான் புறப்பட்டு வந்தேன். அப்படியே உங்களையும் பார்த்துப் போகலாமென்று வந்தேன்" என்றான் பிரபாகரன்.

"என் தம்பி ஏதாவது சொல்லியனுப்பினானா!" என்று கேட்டாள்.

"ஐயையோ! உங்க தம்பி ரொம்பவும் கடுமையான பேர்வழி. லீவே கொடுக்க மாட்டார். நான் வந்ததே அவருக்குத் தெரியாது. பட்டணத்தில் யாருக்கோ உடம்பு சரியில்லை என்று சொல்லி லீவில் வந்தேன். நீங்களும் சொல்லிவிடாதீங்கோ. தெரிந்தால் கோவிச்சுக்குவாரென்று லீவு எடுத்துப் போய்விட்டால் ஆபீஸ் வேலையை யார் செய்வது என்று கோபிப்பார்" என்றான் பிரபாகரன்.

அந்த இரண்டு நாளும் அவன் அங்கே தங்கியிருந்து விட்டு மறுபடி ஊருக்குத் திரும்பினான்.

* * *

"என்ன பிரபாகரன்! மதராஸிலே வெய்யில் ரொம்ப அதிகமோ!" என்று கேட்டார் காரியாலய மானேஜர்.

"ரொம்ப வெய்யில் என்று சொல்ல முடியாது. ஒரு வாரமாக இருந்ததை விட நேற்று வெய்யில் குறைச்சல். ஊட்டி மாதிரி இருந்தது" என்றான் பிரபாகரன். ஆனால் அடுத்த நாள் பத்திரிகையில் சென்னையில் முதல்நாள் உஷ்ணம் கடந்த பத்து வருடங்களை விட அன்று மிக அதிகமாகி விட்டதாயும் சென்னையில் உஷ்ணக் காற்று வீசியதாயும் செய்தி வந்திருந்தது!

அதற்கப்புறம் மறுபடி ஒரு தடவை ஆபீஸ் விஷயமாகப் பிரபாகரன் திருச்சியிலிருந்து மதுரை போனான். மாலதிக்குத் தகப்பனார் இல்லை என்றும் மாலதிக்கு வரன் பார்த்துக் கொண்டிருப்பதாயும் கேள்விப்பட்டதுடன், தன்னை மாலதிக்கு மணம் முடிக்க அவள் தாயார் ஆவலாயிருப்பதாகவும் தெரிந்து கொண்டு இன்ப உலகத்தில் சஞ்சரித்தான்.

அதன் பிறகு பாங்கியில் சேர்ந்தாற்போல் ஒரு வார லீவு வந்தது. அவன் மதுரைக்கு வந்தான். இரண்டு தினம் இருந்துவிட்டு அன்று வெளியே



போய் விட்டுத் திரும்பி வந்தபோது உள்ளே பேச்சுக் குரல் கேட்டுத் திடுக்கிட்டான். உள்ளே மானேஜர் பேசிக் கொண்டிருந்தார். தன்னை அவர் இங்கே பார்த்தால் அல்லது தான் இதற்கு முன்பெல்லாம் எவ்வெப்போது வந்தான் என்பதை மாலதியின் தாயார் அவரிடம் சொல்லிவிட்டால்...!

அவன் இப்படி எண்ணிப் பயந்து கொண்டிருக்கும் பொழுதே உள்ளிருந்து வந்த பேச்சுக் குரல் அவன் காதுகளில் தெளிவாக விழுந்தது.

"பிராப்தம் போல்தான் நடக்கும், 'அக்கா! இப்படியெல்லாம் நடக்கும் என்று யார் கண்டார்கள்! நீ எதற்கும் ஆரம்பத்திலேயே கொஞ்சம் கண்டிப்பாக நடந்திருந்தால் இப்படியெல்லாம் வந்திருக்காது. எதற்கும் நான் அவனைப் பார்த்துக் கண்டிக்கிறேன்" என்று மானேஜர் சொல்லிக் கொண்டிருந்தார்.

பிரபாகரனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. மானேஜருக்கு விஷயங்கள் தெரிந்து விட்டன. இனி நாம் தப்ப முடியாது என்று வந்த சுவடே தெரியாமல் போய் விட்டான்.

லீவு கழிந்த மறுதினம் பாங்குக்குப் போனான். சாயங்காலம் வரை மானேஜர் கூப்பிடவில்லை. அவன் மனம் திடுக்கிட்டது. வீட்டுக்குக் கிளம்பும் போது மானேஜரிடம் போய்த் தனக்கு ஒரு மாத லீவு வேண்டி விரும்புவதாயும் தனக்குக் கலியாணம் நிச்சயமாகி இருப்பதாயும் சொன்னான்.

"இதென்ன பிரபாகர்! நீ செய்வது ஒன்றும் நன்றாயில்லை" என்றார் மானேஜர்.

பிரபாகரன் திடுக்கிட்டான். மானேஜர் பழைய விஷயத்தைக் கிளப்புவதாக அவனுக்குப் பட்டது.

"நான் ஒன்றும் செய்யவில்லையே!" என்று மென்று விழுங்கினான்.

"நீர் ஒன்று இரண்டாகச் செய்யவில்லை. ஏராளமாகச் செய்திருக்கிறீர். உம்மிடம் நான் நம்பிக்கை வைத்திருந்தேன். எனக்கே துரோகம் செய்வீர் என்று நம்பவில்லை." பிரபாகரன் திடுக்கிட்டான்.

"நான் ஒன்றும் நம்பிக்கைத் துரோகம் செய்யவில்லை. ஒரு நாளும் செய்யவும் மாட்டேன்."

"இப்போது நீர் செய்திருக்கிற காரியம் நம்பிக்கைத் துரோகமில்லாமல் என்ன!"

"நான் என்ன சார் செய்தேன்!"

"இன்னும் நீர் என்ன செய்யவில்லை. நீர் மிகவும் நல்ல குணமாயிருக்கிறீர் என்று என் சகோதரியின் பெண் மாலதியை உமக்குக் கொடுக்கலாமென்று நான் நிச்சயம் செய்துவிட்டேன். இப்போது வந்து வேறிடத்தில் கலியாணம் செய்து கொள்ளப் போவதாகச் சொல்லுகிறீரே! உம்மை இந்த ஆபீஸ் உதவி மானேஜராகப் போடும்படி தலைமை ஆபீஸிற்குக்கூடச் சிபார்சு செய்திருக்கிறேனே!" என்றார் மானேஜர்.

பிரபாகரன் ஆச்சரியத்தால் சிலைபோல் நின்று விட்டான். நாம் என்ன எண்ணினோம்! இவர் என்ன என்னுகிறார்! "ஸார், நீங்கள் கவலைப் படவேண்டாம். உங்கள் எண்ணத்துக்கு மாறாக நான் நடக்க மாட்டேன்" என்றான் பிரபாகர்.

அடுத்த மாதம் கலியாணம் நடந்தது.

அன்று ஊர்வலத்தின் போது "மதுரையில் உன் மாமா அன்று உங்கம்மாவிடம் ஏதோ கண்டிக்கிறேன் என்றாரே, என்ன அது!" என்று மாலதியிடம் கேட்டான் பிரபாகரன்.

"அதுவா! எங்கம்மாவின் சித்தப்பா பிள்ளை ஒருவர், அதாவது என் ஒன்றுவிட்ட மாமா ஒருவர் மதுரையிலேயே இருக்கிறார். அவர் பிள்ளைக்கு என்னைக் கொடுப்பதாகக் குழந்தையாயிருக்கும் போது எங்கம்மா சொன்னாளாம். அதேமாதிரி கொடுக்கும்படி அவர் எங்கம்மாவைக் கேட்டார். பையனுக்கு ஆஸ்துமா வியாதி. அம்மாவுக்கு இஷ்டமில்லை. 'இஷ்டமில்லை என்று ஆதியிலேயே சொல்வதுதானே! இவ்வளவு நாளாக ஆசை வார்த்தை காட்டுவானேன்' என்று அந்த ஒன்றுவிட்ட மாமா கன்னா பின்னா என்று பேசி விட்டார். அதற்காகத்தான் எங்கள் மாமா சொன்னார்" என்றாள் மாலதி.

அப்பொழுதுதான் அவன் மனத்தை அழுத்திக் கொண்டிருந்த கனம் இறங்கியது.

## சோஷலிஸக் கட்டுரைப் போட்டி

சோஷலிஸக் கட்டுரைப் போட்டி எதிர்பார்த்ததற்கு மேல் வெற்றியளித்திருக்கிறது. இருநூற்றுத் தொண்ணூற்று நான்கு கட்டுரைகள் வந்துள்ளன. எல்லாக் கட்டுரைகளையும் பரிசீலனை செய்து செப்டம்பர் முதல் வாரத்தில் பரிசு பெற்றவர்களின் பெயர்கள் அறிவிக்கப்படும்.

# இரும்புத் திரைக்குள் மந்திராலோசனை

ஜெயமணி

இரும்புத் திரை என்ற தலைப்பின் கீழ் "கல்கி"யில் கட்டுரைத் தொடர் ஆரம்பமான பிறகு, இரும்புத் திரைக்கு உட்பட்ட பிரதேசங்களில் திடுக்கிடத்தக்க பல சம்பவங்கள் நிகழ்ந்துள்ளன.

மேற்படி சம்பவங்கள் இரும்புத் திரையைக் கலகலக்கும்படி செய்து விட்டன. எனவே அச்சம்பவங்கள் அகில உலகத்தின் கவனத்தையும் ஆகர்ஷித்திருப்பதைக் குறித்து ஆச்சரியப் படுவதற்கில்லை.

ருஷ்யாவின் தலைநகரான மாஸ்கோவுக்கு மேற்கே எழுபது மைல் தூரத்தில் பெரோடினோ என்ற ஒரு கிராமம் இருக்கிறது. ருஷ்யாவில் அந்தக் கிராமம் மிகவும் பிரசித்தி பெற்று விளங்குகிறது.

1812-ம் ஆண்டிலே நடந்த போரில் நெப்போலியன் ருஷ்யத் தலைநகருக்கு வர முடியாமல் ருஷ்யத் துருப்புகள் வெற்றிகரமாகத் தடுத்தது அவ்விடத்தில்தான்.

இரண்டாவது உலக மகா யுத்தத்திலும் ஹிட்லர் துருப்புகள் அந்தக் கிராமம் வரையில் முன்னேறி வந்தன. ஆனால் நாஜித் துருப்புகளை, மேற்கொண்டு ருஷ்யாவில் படையெடுக்க முடியாதபடி ருஷ்யத் துருப்புகள் தடுத்த அற்புத சம்பவம் அந்தக் கிராமத்தில்தான் நிகழ்ந்தது.

எனவே, ருஷ்யாவின் வெற்றிச் சின்னமாக விளங்கும் அந்தக் கிராமத்திலே சென்ற மாதத்தில் உயர்தர ருஷ்யத் தலைவர்கள் கூடி இரும்புத் திரைக்குள் நிகழ்ந்த சம்பவங்களைப் பற்றி ஆலோசிக்க முற்பட்டார்கள்.

அவ்வாறு ருஷ்யத் தலைவர்களைக் கலங்க வைத்துள்ள சம்பவங்கள் என்ன என்பதைப் பார்க்கலாம்.

இரண்டாவது உலக மகா யுத்தம் முடிந்ததிலிருந்து கிழக்கு ஜெர்மனி ருஷ்யாவின் ஆதிக்கத்தில் இருந்து வருகிறது அல்லவா? அங்கு ருஷ்யர்களின் ஆட்சியை எதிர்த்துச் சமீபத்தில் பெரும் கலகங்கள் ஏற்பட்டன.

ஜெர்மானியர்கள் ஆரம்பித்த மேற்படி கலகங்களை அடக்க ருஷ்யத் துருப்புகளும் டாங்கிகளும் ஓடி வரும்படி ஆயிற்று. அதிலிருந்து அங்கு எத்தகைய மோசமான நிலைமை உண்டாகியிருக்க வேண்டும் என்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

அதைத் தவிர, இரும்புத் திரைக்கு உள்ளே இருக்கும் போலந்து, ஹங்கேரி, செக்கோஸ்லோவேகியா, ஜார்ஜியா, லட்வியா, யுக்ரேன் முதலிய பிரதேசங்களில் பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டிருப்பதாகச் செய்திகள் கூறுகின்றன.

போதாக் குறைக்கு ருஷ்யாவிலும் தலைவர்களிடையே அதிகாரப் போட்டி ஏற்பட்டுக் குழப்பத்தை உண்டாக்கியிருக்கிறது. உதவிப் பிரதம மந்திரி முதல் பல தலைவர்கள் பதவிகளிலிருந்து விலக்கப்பட்டுள்ளனர்.

இரும்புத் திரைக்கு உட்பட்ட நாடுகளில் ஏற்பட்டுள்ள கவலைக்கு இடமான நிலைமையே ருஷ்யாவின் சமாதான தோரணைக்குக் காரணம் என்றும் கூறப்படுகிறது.

* * *

இதுவரையில், இரும்புத் திரைக்கு உட்பட்ட அல்பேனியா, பல்கேரியா, ருமேனியா, ஹங்கேரி, செக்கோஸ்லோவேகியா முதலிய ஐந்து நாடுகளையும் சுற்றிக் கொண்டு இப்போது போலந்துக்கு வந்துள்ளோம்.

பால்டிக் கடற் கரையில் அமைந்துள்ள போலந்து தேசத்தின் சரித்திரம் மிகவும் விசித்திரமானது.

ஒரு காலத்தில் பெரிய நாடாக இருந்த போலந்து இன்று உருவத்தில் சிறியதாகி விட்டது. பூகோள படத்திலிருந்து போலந்து அடியோடு மறைந்துகிடந்த காலமும் உண்டு!

போலந்தின் ஒரு பாதியை ருஷ்யாவும் மற்றொரு பாதியை ஜெர்மனியும் கைப்பற்றிக் கொண்டதால், பல ஆண்டுகள் வரையில் போலந்து என்ற தேசமே படத்திலிருந்து மறைந்து போய்விட்டது!

எனினும் போலந்து மக்களின் தேச பக்தியையும் மன உறுதியையும் அந்த வல்லரசுகளால் சிதைக்க முடியவில்லை. தங்கள் நாடு அன்னியர்களிடம் அடிமைப் பட்டதைச் சகிக்க முடியாமல், லட்சக் கணக்கான போலந்து மக்கள் வெளி நாடுகளுக்குச் சென்றனர். அவ்வாறு சென்றவர்களில் நாற்பது லட்சம் போலந்து மக்கள் இன்றும் அமெரிக்காவில் வசித்து வருகிறார்கள்.

அவர்களில் பலர் அமெரிக்கப் பிரஜைகள் ஆகிவிட்டனர். எனினும் அவர்கள் தங்களுடைய சொந்த நாட்டையோ, தங்களுடைய பரம்பரைப் பழக்க வழக்கங்களையோ கைவிட்டு விடவில்லை.

* * *

பால்டிக் கடலில் சேரும் விஸ்டுலா, வார்த்தா, ஓடர் என்ற மூன்று நதிகளை அடுத்துள்ள பிராந்தியத்தில் வசித்து வந்த பல்வேறு மலை ஜாதியினர் ஒன்று சேர்ந்ததன் பயனாகவே பல நூற்றாண்டுகளுக்கு முன் போலந்து நாடு உருவாயிற்று.

கிறிஸ்துவ சகாப்தம் 966-ம் வருஷத்தில் தான் போலந்து மக்கள் கிறிஸ்துவ அரசர்களின் ஆட்சியில் கிறிஸ்துவ மதத்துக்கு மாற்றப்பட்டனர்.

பதினைந்து பதினாறும் நூற்றாண்டுகளில் ஐரோப்பாவில் செல்வாக்குடன் விளங்கிய போலந்தின் உருவம் பதினேழு, பதி










ணெட்டாம் நூற்றாண்டுகளில் சிறிது சிறிதாகக் குன்றத் தொடங்கியது.

1771-ம் ஆண்டில் போலந்து நாடு எவ்வளவு தூரம் பரந்திருந்தது என்பதை இந்தப் பக்கத்தில் பிரசுரமாகியுள்ள முதலாவது படம் காட்டுகிறது.

பிறகு 1772-ல் போலந்தைச் சேர்ந்த சில பிரதேசங்களை ருஷ்யாவும் ப்ரஷ்யாவும் ஆஸ்திரியாவும் பங்கு போட்டுக் கொண்டன.

1795-ம் வருஷத்திலே ஐரோப்பாவின் பூகோள படத்தில் போலந்து நாடே இராமல் மறைந்து விட்டது. — இந்த உண்மையை இரண்டாவது படம் காட்டுகிறது.

மூன்றாவது படம்தான் இன்றுள்ள போலந்து தேசம் ஆகும்.

1807-ல் பழைய போலந்தின் ஒரு பகுதியை நெப்போலியன் ஒரு சுதந்திர நாடாகப் பிரகடனம் செய்தான். ஆனால் அது அதிக காலம் நீடிக்கவில்லை. அதன் பின் பல ஏற்றத் தாழ்வுகளுக்குப் போலந்து இலக்காயிற்று. பிறகு முதலாவது மகா யுத்தம் முடிந்ததும், 1918-ம் வருஷத்தில் போலந்தின் சுதந்திரம் பிரகடனம் செய்யப்பட்டது. வர்செயில்ஸ் உடன்படிக்கைக்கு இணங்க, போலந்து நாட்டின் எல்லைகள் நிர்ணயம் செய்யப்பட்டன.

அதன் பிறகு கூடப் போலந்து மக்கள் நிம்மதியாக இருக்க முடியவில்லை. நாலு ஆண்டுகள் வரையில் நடந்த யுத்தம் போலந்தில் பல பிரச்னைகளை எழுப்பி விட்டிருந்தன. எங்கு பார்த்தாலும் பஞ்சமும் பிணியும் அமைதியின்மையும் அந்த நாட்டை அல்லல் படுத்திக் கொண்டிருந்தன.

நிர்வாகத்திலோ, தொழில் துறைகளிலோ அனுபவம் வாய்ந்த தலைவர்கள் இராததால் போலந்து மக்கள் பெற்ற சுதந்திரத்தைப் பேண முடியாமல் கஷ்டப்பட்டனர்.

எனவே, புதிதாகப் போலந்தைச் சிருஷ்டிக்க வேண்டிய மாபெரும் பொறுப்பை அவர்கள் ஏற்க வேண்டியிருந்தது.

முதலில் போலந்து தேசத் தலைவர்கள், பிரஞ்சுக் குடியரசையும் ஸ்பானிஷ் குடியரசையும் தழுவித் தங்களுடைய அரசியல் திட்டத்தைத் தயாரித்தார்கள். மேற்படி திட்டத்தில் போற்றத்தக்க பல ஜனநாயக அம்சங்கள் இருந்தன. எனினும் அந்த நாட்டில் பல கட்சிகள் தேர்தலில் பங்கு எடுத்துக் கொண்டு வெற்றி பெற்றதால், சர்க்கார் நிர்வாகம் சரிவர நடைபெற முடியவில்லை. சர்க்காருக்கோ, ஜனாதிபதிக்கோ உண்மையான அதிகாரம் இருக்கவில்லை.

கட்சித் தலைவர்கள் தேச நலன்களை மறந்து போட்டியிலும் சூழ்ச்சியிலும் இறங்கினார்கள். அதனால் சீர்திருத்த முறைகள் அமுலுக்கு வர முடியாமற் போயின.

அதன் காரணமாக வர்த்தகம் குன்றியது; வேலையில்லாக் கஷ்டம் அதிகமாயிற்று; எங்கு பார்த்தாலும் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்யத் தொடங்கினர்.

P. 6466

# அன்றாடம் 2 நிமிஷங்கள் செல வழித்தால் போதும் .... நீங்கள் பூரண எழிலுடன் திகழலாம்



பிரதி இரவிலும் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமை உங்கள் சருமத்தில் தடவி நன்கு தேயுங்கள்—ஒரே ஒரு நிமிஷம் தான் ஆகும். அதிலுள்ள எண்ணெய்கள் சருமத்தில் ஊடுருவிச்சென்று, மயிர்க் கால்களில் படிந்திருக்கும் சிறு சிறு தூசியையும் அழுக்கையும் வெளியேற்றி விடுகிறது. சருமத்தை மெதுவாகத் துடைத்து, அது எவ்வளவு பரிசுத்தமாக விளங்குகிறதென்பதைப் பாருங்கள்.

இவ்வற்புத க்ரீமை இன்னும் கொஞ்சம் எடுத்து முகத்திலும் கழுத்திலும் பூசிக்கொள்ளுங்கள். இரவு முழுவதும் அது அப்படியே இருக்கட்டும். காலையில் எழுந்தவுடன் உங்கள் மேனி மிக துல்லியமாயும் பூரண பொலிவுடனும் விளங்குவதைக் கண்டு அதிசயிப்பீர்கள்.

பிரதிதினம் காலையிலும் ஒரு நிமிஷம் உங்கள் முகத்தில் பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை மெதுவாகத் தடவுங்கள். அது பூரணமாக மறைந்துவிடும். சருமம் பட்டுப்போன்று மழமழப்பாகவும் அற்புத சோபையுடனும் விளங்கும்.



கண்ணுக்குப் புலப்படாத வகையில் முகத்தில் மறைந்துள்ள இந்த பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் திரைப்படலம் பகல் முழுவதிலும் உங்கள் எழிலைப் பாதுகாக்கும். உங்கள் மிருதுவான சருமத்திற்கு இந்த பாதுகாப்பு அவசியம்—முக்கியமாக வரட்சைக் காற்றிலும் சூரிய கிரணங்களின் வெப்பத்தாலும் சருமம் துவண்டு போகாமல் காப்பாற்றி வர அத்யாவசியம்.

உங்கள் சருமத்திற்கு இவ்விரட்டைப் பராமரிப்பு ஒவ்வொரு நாளும் தேவை. பாண்ட்ஸ் க்ரீம்கள் இரண்டையும் அன்றாடம் தவறாமல் உபயோகித்து உங்கள் அழகிற்கு அழகு ஊட்டுங்கள்!




உலகில் எங்குமே பெண்மணிகள் தங்கள் எழிலை புதுமை குன்றாமல் பாதுகாக்க பாண்ட்ஸ் க்ரீம்கள் இரண்டையுமே உபயோகிக்கின்றனர். அவர்கள் இயற்கை அழகின் இரகசியம் அதுதான்.

முக சிங்காரிப்புக்குரித்தான், பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் தடவிக்கொண்டால் அதன் மேல் பௌடர் பூசுவது மிக எளிது—அழகாயுமிருக்கும், ஞாபகமிருக்கட்டும்.

## பாண்ட்ஸ்




## 4. நந்தகுமாரன்

பிரபாவதி, அவன் பெயரைச் சொல்லும்படி கேட்டுக் கொண்டாள் அல்லவா?

ஆனால் அந்த இளைஞன் உடனே தன் பெயரைச் சொல்லவில்லை. அதற்குப் பதில் "என் பெயரைச் சொல்லித்தான் ஆக வேண்டுமா?" என்று கேட்டான்.

பிரபாவுக்குக் கோபம் வந்து விட்டது. "சொல்லா விட்டால், போயேன்! யாருக்கு என்ன வந்தது? நான் போகிறேன்" என்று கூறி விட்டு விடு விடென்று போக முற்பட்டாள் பிரபாவதி.

"பிரபா, பிரபா! போகாதே! என் பெயரைச் சொல்லுகிறேன். என்னைப் பற்றி யெல்லாம் சொல்லுகிறேன். அதற்குள் இவ்வளவு கோபப் படுகிறாயே!" என்றான் அந்த இளைஞன்.

"சரி, அப்படியானால் சொல்!" என்றாள்.

அந்த இளைஞன் தன் வரலாற்றை நீட்டி முழக்கி, பெரிய தொடர் கதையைப் போலச் சொன்னான். அதைக் கேட்டுக் கொண்டு வந்த பிரபா 'உம்' கொட்ட வேண்டிய இடத்தில் உம் கொட்டியும், 'ஆகா! ஆகா!' என்று வியக்க வேண்டிய இடத்தில் வியந்தும், 'ச்ஸோ ச்ஸோ' என்று அனுதாபம் தெரிவிக்க வேண்டிய இடத்தில் அனுதாபம் தெரிவித்தும் கேட்டு வந்தாள். ஆனால் நாம் இங்கே வெகு சுருக்கமாக இளைஞனின் வரலாற்றைத் தெரிந்து கொள்ளுவோம்.

அந்த இளைஞனின் பெயர் நந்தகுமாரன். அவன் ஒரு அரச குடும்பத்தில் பிறந்தவன். அவனுக்குத் தக்க வயசு வந்ததும் குதிரை ஏற்றம், யானை ஏற்றம், வாள் போர், மற்போர் முதலிய வித்தைகளைப் பழக்குவித்தனர். ஆனால் அவனுக்கு இதில் எல்லாம் புத்தி செல்லவில்லை. எப்போது பார்த்தாலும் பாட்டுப் பாடிக் கொண்டும், ராக ஆலாபனம் செய்து கொண்டும் இருந்தான். ஒரு நாள் நந்தகுமாரன் சாதாரண உடையில், நகரில் சுற்றி வந்த போது ஒரு வீட்டிலிருந்து இனிய புல்லாங்குழலோசை வந்து கொண்டிருந்தது. ராஜகுமாரன் மெய் மறந்து கேட்டுக் கொண்டிருந்தான். சற்று நேரத்துக் கெல்லாம் குழலோசை நின்றது. இத்தனை நேரம் குழலூதிக் கொண்டிருந்தவர், அந்த வீட்டிலிருந்து வெளியே வந்தார். உடனே நந்தகுமாரன் அவர் கரங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, "எனக்குப் புல்லாங்குழல் சொல்லிக் கொடுக்கிறீர்களா?" என்று கேட்டான்.

அந்தக் குழல் வித்துவானுக்கு, அந்தச் சிறுவன் யார் என்று புரியவில்லை. மேலும் அவன் யார் என்று அறிந்து கொள்ளவும் அவர் விரும்பவில்லை. அதற்குமாறாக, ஒரு சின்னஞ்சிறு பாலகன் தன்னிடம் இவ்வளவு பிரியமாகப் புல்லாங்குழல் கற்றுக் கொள்ள ஆசைப் படுகிறானே என்ற பெருமிதமும் பெரு மகிழ்ச்சியும்தான் அவர் உள்ளத்தில் நிறைந்திருந்தது. ஆகவே, "பேஷாகச் சொல்லித் தருகிறேன்! தினம் காலையில் இங்கு வா!" என்று சொன்னார்.

"சரி, வருகிறேன்" என்று சொல்லி விட்டுப் போய் விட்டான்.

பிறகு ஆறுமாத காலம், இளவரசன் நந்தகுமாரன் புல்லாங் குழல் வித்துவான் வீட்டுக்குச் சென்று குழல் ஊதப் பழகி வந்தான். குழல் வித்துவானும் தன்னிடம் பயிலும் மாணவன் யார் என்று தெரிந்து கொள்ளாமலே பயிற்றி வந்தார். கடைசியில் ஒரு நாள் மகாராஜா, இளவரசனுக்கு வில், வாள், வேல் முதலியவைகளைப் பயிற்சியளிக்கும் ஆசிரியரிடம், இளவரசரின் பயிற்சியைப் பற்றி விசாரித்தார். "மகாராஜா, இளவரசர் இங்கு வித்தைகள் பயில வருவதே இல்லை" என்றார்.

"அப்படியா! பின் தினம் காலை எங்கே போகிறான்?" என்று விசாரித்தார்.

அந்த ஆசிரியர் "எனக்குத் தெரியாது" என்று கூறி விட்டார்.

பிறகு மறு நாள் காலை நந்தகுமாரன் வெளியே சென்றபோது, அவனுக்குத் தெரியாமல் ஓர் ஒற்றன் அவன் பின்னால் செல்ல ஏவப்பட்டான்.

அதற்கு மறு நாள் நந்தகுமாரன், தனது குருநாதர் வீட்டுக்குப் போனான். அங்கு பெரியதோர் ஆச்சரியம் காத்திருந்தது. அதாவது குருநாதர் வீட்டில் பெரிய பூட்டு தொங்கியது.

"ஏன்? குருநாதர் எங்கே போய் விட்டார்?" என்று அக்கம் பக்கத்தில் விசாரித்தான். யாருமே பதில் சொல்ல வில்லை. எல்லாரும் பயந்து ஒதுங்கினர். இதிலிருந்து தான் இன்னார் என்பது அவர்களுக்குத் தெரிந்து விட்டது என்பதை ஊகித்துக் கொண்டான்.

பிறகு விசாரித்ததில், மகாராஜாவின் உத்தரவின் பேரில் புல்லாங்குழல் வித்வான் கைது செய்யப்பட்டார் என்பதை அறிந்து கொண்டான். உடனே, தன் தந்தையிடம் சென்று, புல்லாங்குழல் வித்வானை விடுதலை செய்யும்படி இறைஞ்சினான். மகாராஜா கண்டிப்பாக மறுத்து விட்டார். "நாளை, சிங்காதனம் ஏறி அரசாட்சி புரியவேண்டிய ராஜகுமாரனை, வில் வேல் வாள் முதலிய அரசனுக்கு ஏற்ற பயிற்சிகளைப் பெறப் போக விடாமல், சங்கீதம் கற்றுக் கொடுத்த குற்றத்திற்காகத் தண்டிக்கப் பட்டிருக்கிறார். நந்தகுமாரா, நீ இதில் எல்லாம் தலையிடாதே!" என்றார்.

"அப்பா, அவருக்கு நான் ராஜகுமாரன் என்ற விஷயமே தெரியாதே!" என்றான்.

"தெரிந்து செய்தாலும் சரி, தெரியாமற் செய்தாலும் சரி, குற்றம் குற்றமே! அதற்குத் தண்டனை அவர் அனுபவித்தே ஆகவேண்டும்" என்றார் மகாராஜா.

இதைக் கேட்ட நந்தகுமாரன் மனசு ரொம்பவும் வருத்தப்பட்டது. 'நம்மால் அல்லவா குருநாதருக்கு இந்தத் தண்டனை ஏற்பட்டது? நான் பண்ணிய தவறுக்காக, பாவம் அவர் கஷ்டப்படுகிறார். இதற்கெல்லாம் காரணம், நான் நாளை அரசனாக வேண்டும் என்ற எண்ணமே அல்லவா? நான் பட்டத்தை ஏற்றுக் கொள்ளா விட்டால், இவர்கள் என்ன செய்ய முடியும்? பலாத்காரமாக வற்புறுத்தி முடி சூட்டலாம். ஆனால் நான் இந்த அரண்மனையில் வசித்தால் அல்லவா அவர்கள் எனக்கு முடிசூட்டுவார்கள். நான் இந்த அரண்மனையை விட்டே ரொம்ப ரொம்ப தூரம் போய் விடுகிறேன். இன்றே போய் விடுகிறேன்; பின்னர் யாரால் என்ன செய்ய முடியும்?' என்று தீர்மானித்தான். அன்றிரவே நந்தகுமாரன் அரண்மனையை விட்டுப் புறப்பட்டு வந்து விட்டான்!

இப்பொழுது வருஷம் நான்கு ஆகிறது. அவனை யாரும் கண்டு பிடிக்கவே இல்லை.

இந்த வரலாற்றைக் கேட்டு வந்தபோது பிரபாவதிக்கு ராஜகுமாரன் மீது அளவு கடந்த அநுதாபம் ஏற்பட்டது. தனது புல்லாங்குழல் வித்துவான் சிறையில் அடைக்கப் பட்டதற்காக அரண்மனை வாழ்வையும் துறந்துவிட்டு வந்திருக்கிறானே என்று எண்ணி வியந்தாள். ஆனால் நந்தகுமாரன் தன் கதையைக் கூறி முடித்தாலும் இன்னும் ஏதாகிலும் பிரபாவதியோடு பேசிக் கொண்டிருக்க வேண்டும் போல் தோன்றியது.

இந்தச் சமயத்தில் சூரியன் மேல் திசையில் வெகு வேகமாக அஸ்தமிக்கத் தொடங்கினான்.

பிரபாவினால் இருப்புக் கொள்ள வில்லை. "ராஜகுமாரா! என் தாத்தா வரும் நேரமாகி விட்டது. மீதிக் கதையை நாளை வந்து கேட்கிறேன். நாளையும் இதே இடத்தில் சந்திப்போம்! இப்போது நான் போய் வரட்டுமா?" என்றாள் பிரபா.

"பிரபா, நாளை நான் இதே இடத்தில் வந்து உட்கார்ந்து குழல் ஊதுகிறேன். அக் குழலோசையைக் கேட்டு நீ வருவாயா?" என்று கேட்டான்.

"ஆகட்டும்!" என்றாள் பிரபா. (தொடரும்)



# தில்லையாடியில் ராஜாஜி!



ராஜாஜியின் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்து நிற்கும் ஜனக் கூட்டம்.

காந்தி மகாத்மா தம் வாழ்நாளில் பல இயக்கங்களை ஆரம்பித்தார்; பல அரிய நிர்மாணத் திட்டங்களை வகுத்தார். மக்கள் குலத்தின் நல்வாழ்வுக்காகப் பாடுபட்டார்.

காந்தி மகானைக் கோடிக் கணக்கான மக்கள் போற்றினார்கள்; லக்ஷக்கணக்கான மக்கள் அவர் தலைமை வகித்து நடத்திய அரசியல் சுதந்திர இயக்கங்களில் ஈடுபட்டார்கள்; ஆயிரமாயிரம் மக்கள் அவருடைய சொல்லைக் கேட்டு அரும்பெரும் தியாகங்களைச் செய்தார்கள்.

ஆனால் மகாத்மாவின் உண்மைச் சீடர்களாய் வாழ்க்கையில் எல்லாத் துறைகளிலும் அவரைப் பின் பற்றியவர் மிகச் சிலரே யாவர்.

அந்த மிகச் சில பாக்கியவான்களில் தஞ்சை மாவட்டம், தில்லையாடி என்னும் சிற்றூரில் பிறந்த திரு தி. அ. சுப்பிரமணிய ஆச்சாரியார் ஒருவர்.

"திரைகட லோடியும் திரவியம் தேடு" என்னும் மூதுரைக்கு இணங்கத் திரு சுப்பிரமணிய ஆச்சாரியார் பொருளீட்டுவதற்காகத் தென் ஆப்பிரிக்காவுக்குச் சென்றார். அங்கு இந்தியர்களுக்கு இழைத்த இன்னல்களைக் களைய அண்ணல் காந்தியடிகள் நடத்திய உரிமைப் போராட்டத்தில் பங்கு கொண்டு காந்தி மகானுக்குப் பக்க பலமாய் நின்று பாடுபட்டார்.

தென்னாப்பிரிக்காவிலிருந்து திரும்பி வந்த பிறகு இந்தியாவின் சுதந்திரப் போரிலும் ஈடுபடும் பேறு அவருக்குக் கிடைத்தது. 1942-ம் ஆண்டு காந்தி மகான் நடத்திய சரித்திரப் பிரசித்தி பெற்ற தனி நபர் சத்தியாக்கிரகப் போரில் சேர்ந்து பணியாற்றும் போது இம் மண்ணுலகை விட்டு மறைந்தார்.

ஸ்ரீ சுப்பிரமணிய ஆச்சாரியாரின் அழைப்புக்கு இணங்க 1911-ம் ஆண்டு காந்தி மகான் அவர் பிறந்த சின்னஞ் சிறு ஊராகிய தில்லையாடிக்குச் சென்று சில நாட்கள் தங்கி யிருந்தார்.



திரு தி. அ. சுப்பிரமணிய ஆச்சாரியார்

அதே ஊருக்குத் திரு சுப்பிரமணிய ஆச்சாரியார் அவர்களின் திரு உருவப் படத்தைத் திறந்து வைப்பதற்காகச் சென்ற ஜூன் மாதம் ராஜாஜி அவர்கள் விஜயம் செய்தார்கள்.

ராஜாஜி தில்லையாடிக்கு விஜயம் செய்வதற்குக் காரணமா யிருந்தவர் சுவாமி விவேகானந்தா மாணவர் இல்லத்தின் தலைவர் ஸ்ரீ சாது சங்கரானந்தா அவர்கள்.

ஸ்ரீ சாது சங்கரானந்தா கல்லூரிப் பட்டம் பெற்றவர். தெய்வ பக்தியும் தேச பக்தியும் கொண்டவர். கிராமத்தில் வாழும் ஏழைக் குழந்தைகள் எழுத்தறிவு பெற முடியாமல் கஷ்டப் படுவதைப் பார்த்தார். தாமே அந்த ஏழைக் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டத் தீர்மானித்தார். தில்லையாடியில் சுவாமி விவேகானந்தா மாணவர் இல்லம், அருணாசலக் கவிராயர் கல்விக் கழகம் என்ற ஸ்தாபனங்களை ஆரம்பித்தார்.

சென்ற 1942-ம் ஆண்டு ஆரம்பித்த மேற்படி ஸ்தாபனங்களைப் பதினொரு ஆண்டுகளாகத் திறம்பட நடத்திவருகிறார். பகல் எல்லாம் இல்லத்தின் வளர்ச்சிக்குப் பாடுபடுகிறார். இரவில் அந்த இல்லத்தின் எதிர்காலத்தைப்



சுவாமி விவேகானந்தா மாணவர் இல்லத் தலைவர் சாது சங்கரானந்தரும் ராஜாஜியும்.

பற்றிக் கனவு காணுகிறார். அவருடைய முயற்சிகள் காரணமாக முப்பத்திரண்டு ஏழை மாணவர்கள் சுவாமி விவேகானந்தா மாணவர் இல்லத்தில் இலவச உடை, உணவு, கல்வி வசதி பெற்று வருகிறார்கள்.

தில்லையாடியில் இது போன்ற இல்லத்தை ஆரம்பிக்க வேண்டுமென்று அந்த நாளிலேயே திரு சுப்பிரமணிய ஆச்சாரியார் முயற்சி செய்தாராம். அவருடைய கனவை ஸ்ரீ சாது சங்கரானந்தா நனவாக்கியுள்ளார்.

திரு சுப்பிரமணிய ஆச்சாரியாரின் ஞாபகார்த்தமாக மேற்படி விவேகானந்தா மாணவர் இல்லத்தில் அவருடைய உருவப் படத்தைத் திறந்து வைக்க வேண்டும் என்று ஸ்ரீ சாது சங்கரானந்தா தீர்மானித்தார். பெரிய அளவில் திரு ஆச்சாரியார் அவர்களின் உருவப்படம் ஒன்றைத் தயாரித்து அதை ஸ்ரீ ராஜாஜி அவர்களைக் கொண்டு சென்ற ஜூன் மாதம் இருபத்தாறும் தேதி திறந்து வைக்கும்படி செய்து பெரிய திரு விழாவாகக் கொண்டாடினார்.

திரு சுப்பிரமண்ய ஆச்சாரியாரின் திரு உருவப் படத்தைத் திறந்து வைத்துப் பேசிய ராஜாஜி அவர்கள் 1912-ம் ஆண்டில் ஸ்ரீ சுப்பிரமண்ய ஆச்சாரியார் அவர்களைத் தாம் சந்தித்த விவரத்தைச் சொன்னார்:

"நான் சுப்ரமண்ய ஆச்சாரியாரைக் கண்டது ஒரு முறைதான். அது 1912-ம் ஆண்டு. தற்போது ஆந்திரர்களின் தலைநகராகப் பொறுக்கி எடுக்கப்பட்டிருக்கும் கர்நூலில் முதன் முறை கண்டேன். தென்னாப்பிரிக்காவிலிருந்து ஒரு கும்பலாகத் துரத்தப்பட்ட இந்தியர்கள் (தமிழர்கள் உள்பட) கர்நூலில் வரவேற்கப் பட்டனர். அங்கொரு பெரிய மகாநாடு நடந்தது. நானும் அங்கு போய்ச் சேர்ந்தேன். அப்போது காந்தியடிகளின் காரியங்களில் அக்கறை காட்டித் தொண்டாற்றிய சுப்ரமணிய ஆச்சாரியாரைக் கண்டேன். 1912-ம் ஆண்டு, அதாவது ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பமாவதற்கு 7 அல்லது 8 ஆண்டுகளுக்கு முன்பதாகும். சுப்பிரமணிய ஆச்சாரியாரும் நானும் பேசிக் கொண்டிருந்தோம். காந்தியடிகள் எழுதிய Hind Swaraj என்னும் புத்தகத்தைப் பற்றி அவர் கூறினார். அப் புத்தகம் எழுதியது காந்தியடிகள் செய்த தொண்டில் ஒன்றாகும். பின்னர் அதற்கு Indian Home Rule என்று மறு பெயரிடப் பட்டது. ஆங்கில அரசாங்கத்தாரால் அப் புத்தகம் தடை செய்யப் பட்டது. கிடைத்தற்கரிய அப் புத்தகத்தின் பிரதிகள் மிகக் குறைவு. 1919-ம் ஆண்டில் ஒத்துழையாமை இயக்க சமயத்தில் அப் புத்தகத்தைப் பெருவாரியாக அச்சிட்டுப் பிரசுரித்தோம்" என்றார்.

பிறகு தில்லையாடியில் நடந்து வரும் சுவாமி விவேகானந்தா மாணவர் இல்லத்தைப் பாராட்டினார்.

காந்தியடிகள் பாரதநாடு முன்னேற்றத்துக்குக் கிராம முன்னேற்றம் மிகவும் அவசியம் என்று காலம் எல்லாம் வற்புறுத்தி வந்தார். கிராமம் முன்னேற வேண்டுமானால் கிராமத்து மக்கள் கல்வி அறிவு உள்ளவர்களாக இருக்க வேண்டும்.

தில்லையாடி என்ற இந்தச் சிறு கிராமத்தில் சுவாமி விவேகானந்தா மாணவர் இல்லம் அமைத்துக் கிராம மக்களின் கல்வி அபிவிருத்திக்குப் பாடுபட்டு வருகிறார் சாது சங்கரானந்தா. இந்த இல்லம் மேலும் வளர்ந்து ஏழைக் குழந்தைகளின் எழுத்தறிவைப் பெருக்குவதற்குப் பாடுபட வள்ளல் குணம் படைத்த தஞ்சை மாவட்ட மக்கள் உதவி புரியுமாறு கேட்டுக் கொள்கிறோம். வாழ்க, சுவாமி விவேகானந்தா மாணவர் இல்லம்!



# அருமைத் தங்கை

பூவை

"பூரணி!" என்று கூப்பிட்டுக் கொண்டு வந்த மாணிக்கம், தோள் மீது கிடந்த ஏர்க் கலப்பையைப் பிடிப்பிலிருந்த செவலைக் காளைகள் இரண்டையும் தொழுவத்தில் கட்டினான். வேலை யெல்லாம் முடிந்தமாதிரி ஒரு வகை நிம்மதி கனிந்த மனதுடன், தொட்டியில் கழுநீர் ஊற்றி அத்துடன் பிண்ணாக்கையும் போட்டு, பிறகு மாடுகளுக்குத் தண்ணீர் காட்டினான்.

"மச்சான், கை கால அலம்பிக்கிட்டு வாங்க கஞ்சி குடிக்க. அப்பாலே அது ஆறிப்போயிடப் போவுது பச்சைத் தண்ணியாட்டம்......" என்று அழைத்தாள் கொண்டவள்.

"ஏலே பூரணி, பார்த்தியா மறந்துப்பிட்டேன். அடுத்தவாரம் ஆடிப் பதினெட்டுல்லியா, அதுக்கு என் தங்கச்சி பூவம்மாவையும் அது புருசன் செல்லையாவையும் பதினெட்டாம் பெருக்குக்கு நம்ப வீட்டுக்கு அழைக்க வேணும். நேத்துச் சந்தையிலே காய்கறி வியாபாரத்திலே கிடைச்ச லாபப் பணம் இருபதையும் பத்திரமா வச்சிருக்கேன். விருந்தாளிங்க ரெண்டு பேருக்கும் விருந்து வைக்கிறதுக்கு. தங்கச்சியும் அது மச்சானும் வந்துட்டா அப்புறம் வீடே ஒரே குஷாலாத் திமிலோகப்பட்டுப் போயிடும்......" என்று நிறைவுப் பெருக்குடன் சொல்லிக் கொண்டு வந்த மாணிக்கம், தலையை நிமிர்த்திப் பூரணியைப் பார்த்தான். கணப்பொழுது அவன் திகைத்துப் போனான்.

"மச்சான்......" என்று ஏதோ பதில் சொல்ல வாயெடுத்த அவள் மீண்டும் பேசாமடந்தையானாள். அவள் கண்களின் விளிம்பில் பனித் திரை லேசாகப் படர்ந்தது.

"பூரணி, எதுக்கு இந்த நீலி வேஷமெல்லாம்!" என்று கர்ஜித்தான் மாணிக்கம். மனைவியின் மௌனத்திற்கு அவன் தப்பான அர்த்தத்தை மனதில் கொண்டு விட்டான். – அதாவது தன் மனைவி, தன் தங்கை-மச்சான் இருவரையும் ஆடிப் பெருக்கிற்கு அழைப்பதற்கு இணங்கவில்லை என்று.

"மச்சான், என்னைப்பத்தி ஏதாவது தப்பா எண்ணிப்பிட்டீங்களா! உங்க, தங்கச்சியையும் அது புருசனையும் ஆசையோடே வரவேற்கிறதிலே உங்களை விட எனக்குத்தான் ரொம்பவும் சந்தோசம். ஆனா, நம்ப ஆசை எண்ணம் ஈடேறத்தான் வழிகிடைக்கல்லே. உங்க தங்கச்சியை அது புருசன் நேத்து இரவு அடிச்சுப்போட்டு வீட்டை விட்டுத் துரத்திப்பிடுச்சாம். நீங்க காலம்பற வீட்டை விட்டு வயல் கரைக்குப் போனதும் பூவம்மா இங்கே வந்துச்சு, கண்ணீரும் கம்பலையுமாக. வயலிலேருந்து களைச்சுப்போய் வந்ததும் வராததுமா இந்தச் சங்கதியை உங்க கிட்டேச் சொன்னா அப்புறம் சோறு கூடக் குடிக்க மாட்டீங்களென்னு இப்பத்தான் காதிலே போடச் சொன்னது நம்ப பூவம்மா. அதை எப்படிச் சொல்லுறதன்னு புரியாமத்தான் நான் முழிச்சுக்கிட்டு நின்னேன்......மச்சான்......" என்று கலக்கத்தோடு கூறினாள் பூரணி.

நின்ற இடம் விட்டு பெயர்ந்து விட்டாற்போல நடுங்கிப் போனான் மாணிக்கம். "ஆசையோடே தங்கச்சியை அழைத்து வரத் திட்டம் போட்ட எனக்கு இதுவும் ஒரு சோதனை போலே. தெய்வமே......" என்று மனம் நொந்தான்.

"பூவம்மா" என்று அலறிக் கொண்டு உள்ளே ஓடினான் மாணிக்கம். அடித்து வைத்த தங்கச் சிலையாக, அவன் தங்கை பூவம்மா கன்னங்களில் பூங்கரம் புதைத்தவளாக அமர்ந்திருந்தாள்.

"தங்கச்சி!"

"அண்ணாச்சி!"

"பூவம்மா, எதுக்கு உன்னைத் துரத்திப்பிட்டான் மச்சான்! நீ ஏதாச்சும் தப்புத் தண்டாவாப் பேசினியா மச்சான்கிட்டே!" என்றான் மாணிக்கம்.

"அண்ணாச்சி, நம்ப குலதெய்வத்துமேலே ஆணை வச்சுச் சொல்லுறேன். நான் கடுகத்தனை தப்பு கூடச் செய்யல்லே. மச்சான்தான் இருந்திருந் தாப்பிலே ஒண்ணு ரெண்டுன்னு ரூபா சதா வந்து கேட்கும். நானும் மறு பேச்சுப்பேசாமல் கையிலே மடியிலே வச்சிருக்கிறதை மறைக்காமக் கொடுத்துப்பிடுவேன். இப்படி தினமும் அதுக்கு பணம் தேவைப்படுகிறது எதுக்குன்னு யோசிக்கலிட்டிருக்கிறப்போ தான் எனக்கு துப்பு துலங்குச்சு. மச்சான் சோடா கம்பெனியிலே பார்க்கிற வேலை

யையும் விட்டுப்பிட்டு. ஊர்க் கோடி அரசமரத் தடியிலே சீட்டுப் போடுதாமிங்கிற ரகசியத்தையும் ஒருத்தி மூலம் அறிஞ்சேன். நேத்திக்குப் பொழுது சாய்ந்ததும் வந்து "பூவம்மா, அவசரமா பணம் கொஞ்சம் தேவைப்படுது. உன் கழுத்துச் சங்கிலியைக் கொஞ்சம் கொடு. அடகு வச்சுப் பணம் வாங்கிக்கிறேன். மறுபடியும் சங்கிலியைப் பிறக்கிற மாசத்துக்குள்ளாற மீட்டுப்பிடறேன்" என்று தாஜாப் பண்ணுச்சு. நான் மாட்டேன்னேன், அவ்வளவுதான்!" என்று விக்கலுக்கும் விம்மலுக்கும் மத்தியில் ஒருவாறு தன் 'கதை'யைக் கூறி நிறுத்தினாள் பூவம்மா,

"பூவம்மா, கண்கலங்காதே. இந்த மாணிக்கமும் என் காணி நிலமும் இருக்கிறமட்டும் உனக்குக் கவலையே வேண்டாம். இங்கேயே இருந்துடு. அந்தப் பயல் செல்லையா வந்து உன்னைத் திரும்ப அழைச்சுக்கிட்டுப் போக வந்தாலொழிய நீ உன் மச்சானைப் பத்திக் கனவிலே கூட எண்ணாதே" என்று வாய்விட்டு உறுமினான் மாணிக்கம்.

பூவம்மா வாய் திறவாமல் ஏனோ அப்படியே ஸ்தம்பித்து நின்றாள்!

மாங்குடியிலிருந்து அழகான கூட்டு வண்டி ஒன்று 'ஜல் ஜல்' என்று சதங்கைப் பண்பாட பூவத்தகுடி ராக்காச்சி கோவில் பொட்டலை அடைந்தது. பொட்டல் அப்பொழுது மக்கள் திரளில் கலகலத்தது. ராக்காச்சி அம்மன் கோவிலுக்கு முன் கூட்டு வண்டி நின்றது; அதிலிருந்து மாணிக்கம், அவன் மனைவி பூரணி, அவன் சகோதரி பூவம்மா மூவரும் இறங்கினார்கள்.

இளஞ்சூரியன் இளமை மாறிக் கொண்டிருக்கிறான். அம்மனைத் தரிசித்தார்கள்; அர்ச்சனையும் நடந்தது. கட்டுச் சோற்றை' 'மூவருமாக ஒரு கை' பார்த்தார்கள். "உன் மச்சானும் இந்தத் திருநாளுக்கு நம்மளோடே இருந்திருந்தா எம்மாம் சந்தோசமா இருக்கும், பூவம்மா" என்றாள் பூரணி. பூவம்மாவும் அதைப் பற்றித்தானே நினைந்து மனம் புழுங்கிக் கொண்டிருந்தாள் எந்நேரம் பார்த்தாலும்!

வானதிர வெடித்த ஜனங்களின் ஆரவாரக் கூச்சல் கேட்டது. பூவம்மா திரும்பினாள். எதிரே பார்த்தாள். கொஞ்ச தூரத்தில் கூட்டம் நெரிசல் பட்டது. அங்கு சிலம்பம் விளையாட்டுப் போட்டி நடந்து கொண்டிருந்தது.

பூவம்மா அங்கு நடந்து கொண்டிருக்கும் சிலம்ப ஆட்டத்தில் நாட்டம் காட்டவில்லை. அவள்



நினைவு முன்பு என்றைக்கோ நடந்த சிலம்ப விளையாட்டில் கட்டுண்டிருந்தது. ஆம்; அது தான் அவளை அவள் மச்சான் செல்லையாவிடம் பிணைந்து விட்ட சம்பவங்கூட!

இதேபோல, திருவிழாவில்தான் அன்றைக்கு மாணிக்கமும் செல்லையாவும் சந்தித்தார்கள், கைகளில் தாங்கிய நீண்ட மூங்கில் கழிகளுடன். அங்கு பூவம்மாவும் இருந்தாள். காளைகள் இருவருக்கும் பந்தயம் மூண்டது. ஆட்டம் துவங்கியது. செல்லையாவுக்கு ஏற்கனவே பூவம்மாவைத் தெரியும். அவனுக்கு அவள்பேரில் காதல் கண்டு. அவர்களிருவருக்குள் நடந்த போட்டிப் பந்தயம் தன் காதலை நிர்ணயிக்கும் ஒரு பரீட்சையாக வாய்க்குமென்ற உண்மையை அப்பொழுது செல்லையா அறியவே இல்லை. சிலம்பம் முழங்கியது. இரு ஜோடிக் கம்புகளும் சந்தித்தன; பிரிந்தன; பின் கூடின. கூட்டத்தில் கை தட்டல் கடைசியில் வெற்றிக்கு முடிவு கூறியது. மாணிக்கம் வெற்றி பெற்றான். வெற்றி பெற்றவன், தோற்ற செல்லையாவைத் தோளில் அலக்காகத் தூக்கி வைத்துக் கொண்டு கூத்தாடினான்.

"செல்லையா மச்சான், நான் இன்னிக்கு ஜெயிச்சதே உன்னாலேதான். என் தங்கச்சி உன்னையே விழுங்கிடறாப்பிலே பார்க்கப் போக, நீயும் பொம்பளைக் குட்டிக்கு இந்த ஆண்பிள்ளை சளைக்கலாமாங்கிற பவிசிலே அதையே வச்ச கண் எடுக்காமப் பார்க்கப் போய்த்தானே ஐயா ஜெயிச்சாரு! நியாயமாப் பார்த்தாக்க நான் உனக்கும் தங்கச்சி பூவம்மாவுக்கும் ரொம்பவும் கடமைப்பட்டவன், இல்லையா மச்சான்......" என்று வெகுநாள் தோளோடு தோள் பழகியவன் போலப் பேசித் 'தமாஷ்' பண்ணினான் மாணிக்கம். பூவம்மாவும் செல்லையாவும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள்;

அன்றைக்குச் சந்தித்த பூவம்மா—செல்லையா இருவரையும் இரும்பவும் மணவறையில் கொட்டு மேளம் முழங்கக் கோலாகலமாகச் சந்திக்கச் செய்த பெருமை மாணிக்கத்தைத்தான் முழுக்க முழுக்கச் சேர்ந்தது. அழகும் அழகும் சேர்ந்தது; இதயமும் இதயமும் சேர்ந்தது.

"தங்கச்சி!" என்று குரல் கொடுத்துக் கொண்டே உள்ளே நுழைந்தான் மாணிக்கம். தலைமீது வைத்திருந்த மூட்டையைக் கீழே வைத்து. அதைப் பிரித்தான். அதற்குள் அவன் மனைவி பூரணி அங்கு தோன்றி அவனுக்கு ஒத்தாசை பண்ணினாள்.

"தங்கச்சி......!" என்று அழைக்கத் துவங்கிய மாணிக்கம், மறு கணம் என்னவோ நினைத்துக் கொண்டவன் மாதிரி சலனமற்று அப்படியே நின்றான்.

"பூவம்மா, உனக்குச் சேதி தெரியுமா! உன் புருசன் காலம்பற சந்தையிலே கண்டு உன்னை அங்கே கூட்டி வந்து விடுறியா இல்லையான்னு சவடால் பண்ணினான். அவன் திமிருப் பேச்சுக்கு இந்த மாணிக்கமா மசிஞ்சு கொடுப்பான்! ஆத்திரம் கொண்டமட்டும் பேசித் தீர்த்தேன். அவனும் பேசினான். கடைசியாக எங்களுக்குள்ளே பேச்சு முத்திக் கைகலப்பு ஏற்பட்டுவிட்டது. செல்லையாப் பயலுக்குச் செம்மையான அடி. மூச்சுப் பேச்சில்லே. பாவம், யாரோ அவனுக்குத் தெரிஞ்சவங்க வண்டியிலே வச்சு தில்லா போர்டு ஆஸ்பத்திரிக்குத் தூக்கிப் போயிருக்காங்க. உன் மச்சானுக்கு இப்பவாவது புத்தி வந்திருக்கும். என்ன தங்கச்சி, என்னை அன்னிக்கு அவன் கைநீட்டி அடிச்ச வீட்டை விட்டுத் துரத்தினதுக்கு, இப்போ அவனுக்கு நல்ல பாடம் வந்திருக்கும். ஊம்......" என்று சொல்லி வீறாப்புடன் அட்டகாசச் சிரிப்பொன்று சிரித்தான் மாணிக்கம்.

"ஐயோ!" என்று அலறியவாறு அடிசாய்ந்த மரமாக மூர்ச்சித்து விழுந்தாள் பூவம்மா.

"தங்கச்சி!" என்று ஓடிய மாணிக்கம் அவளைத் தாங்கிக் கொண்டான் கைப்பிடிப்பாக. கட்டிலில் அவளைப் படுக்க வைத்தான். மூடிய கண்கள் மூடியவாறிருந்தன; அவளுக்குப் பேச்சு மூச்சில்லை; நினைவு திரும்பவில்லை.

மாணிக்கத்துக்குக் கண்களில் கண்ணீர் முட்டி நின்றது. "பூரணி, தங்கச்சியை ஜாக்கிரதையாப் பார்த்துக்க. கொடியிலே ஓடிப் போய் வைத்தியரைக் கையோடே கூட்டியாந்திடுறேன்" என்று சொல்லிவிட்டு, ஓட்டமும் நடையுமாகக் கிளம்பினான் மாணிக்கம்.

"பூவம்மா! பூவம்மா!"

பூரணி அழகான அவள் முகத்தை வருடிக் கொண்டே மெல்ல அழைத்தாள்.

"அண்ணி!" என்று அழைத்துக் கொண்டே மெல்லப் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள் பூவம்மா. "அண்ணி, அண்ணாச்சி எங்கே காணோம்!" என்று மறுபடியும் வினவினாள். பூரணி விவரத்தைச் சொன்னாள்.

"அண்ணி, எனக்கு நீங்க ஒரு உதவி செய்வீங்களா! என்ன இருந்தாலும், என்னதான் என்னை அநியாயமா அடிச்சு வீட்டை விட்டுத்தான் துரத்திப்பிட்டாலுங்கூட என் மச்சான் என் புருசன்தானே! கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருசன்னு சொல்லுவாங்களே தெரிஞ்சவங்க! அன்னிக்கு என் மச்சான் என் சங்கிலியைக் கேட்டதுக்கு அப்பவே அதைக் கழற்றிக் கொடுத்திருந்தால், ஏன் இத்தனை தொந்தரவு வரப்போகிறது! என் கழுத்துச் சங்கிலி இதோ இருக்குது. இதை அடகு வச்சுப் பணத்துக்கு ஏற்பாடு பண்ணுங்க. மச்சான் என்ன பாடுபடுமோ ஒண்டியாக. அதுக்குச் சமயத்துக்குப் பிரயோசனப் படாத என் சங்கிலி எதுக்கு என் கிட்டே இருக்க வேணும்! இப்பவே என் ஆசை மச்சானைப் பார்த்தாத்தான் என் உயிர் என் மேனியிலே தங்கும், அண்ணி!" என்று ஒரே மூச்சில் சொன்னாள் பூவம்மா.

பூரணி, மின்வெட்டுப்போல ஏதோ யோசித்து விட்டு அவளை ஊன்றிப் பார்த்தபடி, "பூவம்மா! உடம்பை அலட்டிக்காதே, அம்மா! உன் சங்கிலியை எடுத்துக்கிட்டு இப்பவே பணம் வாங்கி வருகிறேன். பேசாமத் தூங்கு! விடிஞ்சதும் 'அவர்' வந்ததும் உன்னைக் கொண்டுபோய் உன் புருசன் கிட்டே விடச் சொல்லுறேன். கூட்டு வண்டியிலே வைத்தியர் குரல் மாதிரி கேட்குதே...!" என்று சொல்லித் தன் பேச்சுக்கு முற்றுப் புள்ளி யிட்டாள்.

அங்கு வந்த வைத்தியர், ஹரிக்கேன் விளக்கைத் திண்ணையில் வைத்துவிட்டு, பூவம்மாவை நாடி பிடித்துப் பார்த்தார்; ஏதோ ஒன்றைச் சொன்னார் ரகசியமாயப் பூரணியிடம். அவள் புன்னகை பூத்தாள்.

"பூரணி, சொல்ல மறந்து விட்டேன். உன் புருசன் அவசரமா டவுனுக்குப் போயிருக்கணும். பூவம்மாவைப் பத்திரமாகக் கவனிக்கச் சொன்னான் படிச்சுப் படிச்சு. பூவம்மா, போயிட்டு காலைக்கு வருகிறேன் அம்மா... இனி உனக்கு நல்ல வேளைதான்... சிரிச்சுக்கிட்டு இரு!" என்று சொல்லிச் சென்றார் வைத்தியர். அவர் காதுடன் காதாகத் தன்னிடம் சொன்ன ஒரு சொல் அவளை இன்பலோகத்திற்குப் புஷ்பக விமானத்தில் வைத்துத் தூக்கிச் சென்றது.

"அண்ணி, இந்தாங்க சங்கிலி... போய்வாங்க..." என்று தன் கழுத்துச் சங்கிலியைக் கழற்றி அவளிடம் கொடுத்தாள் பூவம்மா.



★

விடிந்தது பொழுது; உதய ஒளியின் முதற் கதிர் கோலம் பரப்பி யிருந்தது கண்ட இடமெங்கும்.

பூவம்மா வாசலிலேயே உட்கார்ந்து விட்டாள். கூடப் பூரணியும் இருந்தாள். தன் கணவன் இரவு முழுதும் வீடு திரும்பாதது புதிராகத்தான் தோன்றியது பூரணிக்கு.

அன்றுதானே பதினெட்டாம் பெருக்கு! எட்டிப் பிடிக்கும் தொலைவில் ஓடிக் கொண்டிருந்த காவேரியில் குளித்து முழுகிக் கும்பிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தார்கள் பெண்கள். மற்றப் பண்டிகைகள் மாதிரி அன்றும் ஒரு சுதினம்! விருந்துக்கும் வேடிக்கைக்கும் அன்று பஞ்சமிராது.

"அண்ணி, இன்னமும் அண்ணாச்சியைக் காண லியே. அங்கே ஆஸ்பத்திரியிலே மச்சான் மட்டும் என்ன பாடுபடுதோ! எப்படிப் புழுவாத் துடிக்குதோ! எனக்கு ராத்திரி முழுவதும் கண்ணோடு கண் பொருந்தவே இல்லே. ஒரு நாள் பணம் கிடைச்சதும் வந்து சங்கிலியை மீட்டுக்கிடுறேன். அண்ணி, அண்ணாச்சி வந்ததும் சேதியைச் சொல்லுங்க, நான் என் மச்சானைக் காணப் புறப்படுறேன்......" என்று சொல்லிய பூவம்மா தன் அண்ணியிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்படப் போனாள்.

அதே சமயம்......

"தங்கச்சி..." என்று அழைத்துக் கொண்டே அப்பொழுது மாணிக்கம் அங்கு தோன்றினான்.

"அண்ணாச்சி" என்றவாறு தமையனிடம் துள்ளி ஓடிவந்தாள் பூவம்மா.

இந்தச் சமயம் பூவம்மா கொஞ்சமும் எதிர்பாராத ஒரு சம்பவம் அங்கே நிகழ்ந்தது. அந்தக் காட்சியைப் பார்த்த பூவம்மாளின் முகம் மகிழ்ச்சியினால் மலர்ந்தது. வைத்த கண் வாங்காமல் வாசற் புறத்தையே பார்த்துக் கொண்டிருந்த பூவம்மாளால் ஒன்றும் பேச முடியவில்லை.

வாசலில் வந்து நின்ற ரேக்ளா வண்டியிலிருந்து செல்லையா—பூவம்மாவின் கணவன் இறங்கினான். பூவம்மாவுக்குத் திக்கும் புரியவில்லை; திசையும் புரியவில்லை. பூரணி வாயில் விரலை வைத்து நின்றுவிட்டாள். இவர்களது ஆச்சரியத்துக்கும் அதிசயத்துக்கும் காரணம் செல்லையா வந்தது மட்டுமல்ல: அவன் மாப்பிள்ளை போல 'ஜம்'மென்று இருந்தான். அடிபட்டு ஆஸ்பத்திரியில் கிடந்தவனாகக் கொஞ்சங்கூடத் தோன்றவில்லையே...! அப்படியென்றால்...!

பூவம்மாவைப் பார்த்து மாணிக்கம் கட கடவென்று சிரித்தான். ஆஸ்பத்திரியிலே கிடப்பதாகக் கூறப்பட்ட தன் கணவன் இப்பொழுது எப்படி ஒரு காயங்கூட இல்லாமல் தன் எதிரில் வந்து நிற்கிறான் என்று பூவம்மா ஆச்சரியத்தினால் அயர்ந்து போயிருந்தாள். தான் காண்பது கனவா கனவா என்று அவளுக்குச் சந்தேகம் தோன்ற ஆரம்பித்தது. மாணிக்கம் தங்கையை ஆதரவோடு பார்த்தான்.

"தங்கச்சி, எல்லாம் ஒரே விடுகதை கணக்கிலே உனக்குத் தோணுதோ! அண்ணிக்கு உங்கிட்டே நான் மச்சானை அடிக்கப் போட்டதாச் சொன்னதெல்லாம் கத்தப் புளுகு! ஆனா நான் அப்படிச் சொல்லி நிறுத்தினதும் உனக்கு மயக்கம் வந்தது. எனக்குப் பயமாய்ப் போய்விட்டது. மயக்கம் இல்லேன்னா உங்கிட்டே அப்பவே நிஜத்தைச் சொல்லியிருப்பேன். விளையாட்டுக் காட்டித் தமாஷ் பண்ண நினைச்சேன், அது வினையாக முடிந்துவிட்டது. நீ இப்படி திடுதிப்பின்னு உன் வீட்டுக்குப் புறப்படுவேங்கிறதையும் நான் யோசித்துக் கிட்டுத்தான், வைத்தியரை வரச் சொன்ன கையோடே உன் மச்சானைத் தேடிப் போனேன், பண்டிகைக்கு அழைக்க. தங்கச்சி, ஆனாலும் உனக்கு இத்தனை பதட்டமும் படபடப்பும் கூடாது. மச்சானைப் பத்தி யாரோ ஒருத்தன் தாறுமாறாத் தப்பாச் சொன்னதை நீயும் நம்பப் போக எவ்வளவு சிரமம் வரப் பார்த்துச்சு, கண்டியா! பழைய சோடா கம்பெனி ஒண்ணு மெஷின் வகையறாவோடே குறைச்ச விலைக்கு வந்துச்சாம். அதுக்காகத்தான் உங்கிட்டே அப்பப்ப கொஞ்சம் கொஞ்சம் பணம் கேட்டுச்சாம். கடைசியாச் செலவை யெல்லாம் சரிக்கட்டத்தான் உன்னுடைய சங்கிலியையும் கேட்டுச்சாம்.

"மச்சான்..." என்று மேலே தொடர முடியாதவளாக நின்றாள் பூவம்மா. அவள் கண்கள் ஆனந்தக் கண்ணீரைச் சிந்தின போலும்.

"பூவம்மா தன் மச்சானைக் காணத் துடிக்கக் கடைசியா அது சங்கிலியைக்கூட அடகு வைக்கப் பிடுச்சு, பாவம்..." என்றாள் பூரணி.

"பூரணி, எவ்வளவு பணம்! இப்பவே நான் தருகிறேன். போய் நகையைத் திருப்பிக்கிட்டு வா. பெருக்கும் அதுவுமா மூளிக்கழுத்தோடேயா இருக்கிறது... !" என்று மாணிக்கம் முடிப்பதற்குள் பூரணி குறுக்கிட்டு, "மச்சான், நீங்க ஒண்ணும் சிரமப்படாதீங்க. நானே யோசனை செஞ்சு தான் நகையை வச்சுக்கிட்டு என் பணத்தைப் பூவம்மாகிட்டே கொடுத்தேன். இந்தா பூவம்மா, போட்டுக்கொள் நகையை..." என்று சொல்லிச் சங்கிலியையும் அவளிடம் நீட்டினாள்.

"அண்ணி, இத்தனை அன்பையும் நான் ஏழேழு பிறப்புக்கும் மறக்கவே மாட்டேன். இந்தாங்க ஒங்க பணம்..." என்றாள் பூவம்மா.

"பூவம்மா, அந்தப் பணம் உன்னோடேயே இருக்கட்டும். அண்ணிக்கு வைத்தியர் ஐயா சொல்லலியா, உனக்கு இனி நல்ல காலந்தானு! எங்கிட்டேகூட காதோடு சொன்னாரே! உனக்குப் பிறக்கப் போகிற பிள்ளைக்கு எங்க வீட்டு 'மொய்ப் பணமா'க என் பணம் உங்கிட்டேயே இருக்கட்டும். நீ நல்லபடியாப் பெத்துப் பிழைக்க வேணும். ராக்காச்சி அம்மன்தான் கருணை செய்ய வேணும்......" என்றாள் பூரணி, பூரிப்பும் புளகிதமும் கமழ்ந்தோட.

பூவம்மாளின் முகம் நாணத்தால் குபீரென்று சிவந்தது. போதாக் குறைக்கு அவள் கணவன் வேறு அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். மாணிக்கத்தின் முகத்திலும் பூரணியின் முகத்திலும் பொங்கிய பெருமிதத்துக்கு எல்லையில்லை.

அன்றையப் பண்டிகை புன்னகையும் புதுநிலவுமாக விளங்கக் கேட்கவா வேண்டும்!


CBG/12R
அருணோதயம் முதல்
நட்சத்திரம் உதிக்கும்
வரையில்-நாள்முழுவதும்
இனிய வாசனையோடிருப்பீராக
டால்கம் பவுடர்
பள பளவென்று
ஜொலிக்கும் புதுமைக்கு
காஷ்மீர் புக்கே டால்கம்
பவுடரை உங்கள் மேல் தாரா
ளமாகத் தூவுங்கள். அது அதிக
க்கசிவை உறிஞ்சுகிறது . . . எரிச்சலையும் அறிப்பை
யும் அடங்கச் செய்கிறது . . . உங்களைக் குளிமை
யுடனும் இனிய வாசனையுடனும், நாள்முழுவதும்
புதுமையுடனும் இருக்கச் செய்கிறது.
காஷ்மீர் புக்கே
மாணிடர்கள் விரும்பும் பரிமளத்துடன்
1806லிருந்து கோல்கேட் உயர்ந்த ரகத்திற்குப் பெயர்போனது.

# யாருக்குக் கலியாணம்?

சம்பந்தம்

உள் குரலில் இனிமையான ஒரு ஹிந்தி 'டியூனை' இசைத்துக் கொண்டே, தான் எடுத்திருந்த புகைப்படங்கள் அத்தனையையும் ரகவாரியாகப் பிரித்து, அப்போதுதான் வாங்கி வந்த அந்தப் புது 'ஆல்ப'த்தில் அழகுற ஒட்டிக் கொண்டிருந்தாள் பிரேமா. அப்பொழுது முன் ஹாலிலிருந்த நிசப்தத்தைக் கடியாரப் பெண்டுலம் மிகைப்படுத்திக் காட்டியது. உள்ளே மதுராம்பாள் சமையலுக்கு நேரமாகி விட்டதென்று அவசர அவசரமாய் உருளைக் கிழங்கைச் சீவிக் கொண்டிருந்தாள்.

பாதி சாத்தி யிருந்த வாசல் கதவை யாரோ மரியாதையாக 'டக்டக்'கென்று தட்டும் சத்தம் கேட்டு "யாரது?" என்று இரைந்து கேட்டுக் கொண்டே கையில் புகைப்படங்களுடன் ஓடினாள் பிரேமா. "அப்பா இல்லையா?" என்று கேட்டுக் கொண்டே அங்கு சுந்தரேசன் நின்று கொண்டிருந்தான். நேர்த்தியான நீல நிற 'டை'யுடன் வெகு 'டீக்'காக உடுத்திக் கொண்டிருந்தான். அவன் தோளில் தோல் வாரினால் கட்டப்பட்ட 'காமிரா' ஒன்று அழகாய்த் தொங்கிக் கொண்டிருந்தது. அவனைப் பார்த்ததும் அப்படியே பிரமித்து நின்றுவிட்டாள் பிரேமா. தட்டுத் தடுமாறி "உள்ளே வந்து உட்காருங்களேன்!" என்ற வார்த்தைகளை மிக்க சிரமத்துடன் உதிர்த்து விட்டு, இரண்டே தாண்டில் பின் கட்டுக்கு ஓடி வந்து விட்டாள்.

மதுராம்பாளுக்குக் கையும் ஓடவில்லை; காலும் ஓடவில்லை. அவசர அவசரமாய்க் கைவிரல்களினாலேயே தலை மயிரை ஒழுங்கு படுத்திக் கொண்டு தொங்கின முந்தானையை யெடுத்து இடுப்பில் செருகிக் கொண்டே முன் ஹாலுக்கு வந்து, "வாங்கோ! தாத்தா சொல்லி யிருந்தாரே அவர்தானே?" என்றாள். "ஆமாம்! இரண்டு பேரும் பஸ்ஸிலே ஏறினோம். ஏறின பிறகு ஒருத்தருக்குத்தான் இடமிருக்கு என்றான். அவர் அடுத்த பஸ்ஸில் வந்து விடுவார்" என்றான் அவன். "சரி! இந்தாருங்கள், பேப்பர்! பார்த்துக் கொண்டிருப்பதற்குள் அவரும் வந்து விடுவார்!" என்று அன்றைய தினசரியைக் கொடுத்து விட்டு உள்ளே வந்துவிட்டாள்.

"உம்! விசாலத்துக்குச் சங்கீதம், நாட்டியம் எல்லாம் கற்றுக்கொடுத்திருந்தும் வரனுக்கு எத்தனை சிரமப்பட வேண்டி யிருக்கிறது! நீதான் எதுவும் வேண்டாம் என்று பெரிய படிப்பு படிக்கப் போய்விட்டாய்! உனக்கு வரன் தேட எத்தனை சிரமப்படப் போகிறேனோ அப்பா!" என்று சற்றுப் பலமாய் முணுமுணுத்துக் கொண்டே மதுராம்பாள் அன்றையச் சமையல் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

"நான்தான் கலியாணமே பண்ணிக் கொள்ளப் போவதில்லையே!" என்று சொல்லிக்கொண்டே, "யாரம்மா, அது?" என்று பரபரப்புடன் கேட்டாள் பிரேமா.

"நேற்று தாத்தா சொல்லி யிருந்தாரே அந்த வரனா யிருக்கும். அக்காளைப் பார்க்க வந்திருக்கிறார்கள்!"

"காமிராவைத் தோளில் மாட்டிக் கொண்டு வந்திருக்கிறாரே, ஏன்?"

"அவர் எடுக்கும் போட்டோக்கள்தான் 'அனுமதேயம்' என்ற பெயரிலே பிரசுரமாகிறதாம்! எல்லாப் படப் போட்டியிலும் அவருக்குத்தான் முதற் பரிசாம்!"

"என்ன, என்ன? அந்த அனுமதேயமா இவர்!"—ஆச்சரியத்தால் பிரேமாவின் கண்கள் அகல விரிந்தன. சற்று முன்னால் ஓடி மறுபடியும் அவனை ஒருமுறை பார்த்தாள்.

பிரேமாதான் ஒரு போட்டோ பித்து பிடித்தவளாயிற்றே. அவள் ஈடுபட்டிருந்த போட்டோ படப் போட்டிகள் அனைத்திலும் 'அனுமதேய'த்திற்குத்தான் முதற் பரிசு. அவனுடைய போட்டோ படங்களை ரசித்தது போலவே 'அனுமதேய'த்தைப் பற்றியும் எப்படி யெப்படியோ கற்பனை பண்ணிக் கொண்டு 'காணாமலே காதல்' கொண்டிருந்தாள் பிரேமா. அதே அனுமதேயம் இப்பொழுது அக்காளைப் பார்க்க வந்திருக்கிறான் என்றால் அவளுக்கு எப்படி யிருக்கும்? எண்ணாத எண்ணங்கள் எண்ணினாள்.



தகப்பனார் :—எத்தனை வருஷம் நீ வைத்தியக் கலாசாலையில் படிக்கிறாய், போதாக்குறைக்கு ஒரு வருஷம் பரீட்சையில் வேறு தவறிவிட்டாய்!

மகன் :—கோபித்துக் கொள்ளாதீர்கள், அப்பா! அதிக வருஷம் காலேஜில் படித்தால் அதிக அநுபவம் பெற்ற டாக்டர் என்று எனக்குப் பெயர் கிடைக்கும்!

அன்று பக்கத்துத் தெருவில் விசாலத்தின் சிநேகிதிக்கு நிச்சயதார்த்தம். அதற்கு அவளே நேரில் வந்து விசாலத்தை அழைத்துப் போயிருந்தாள். அவளோடு அவள் தகப்பனாரும் போயிருந்தார்.

அந்த வேளை பார்த்துத்தானா சுந்தரேசன் வரவேண்டும்? மதுராம்பாள் அங்கு மிங்கும் ஓடினாள். எப்படியாவது அவர்களை உடனே அழைத்து வரவேண்டு மல்லவா? கடைசியில் பக்கத்து வீட்டு அம்பியைப் பிடித்து அனுப்பலாம் என்று வெளியில் வந்தாள். அதற்குள் அவர்களே வந்து விட்டார்கள். சுந்தரேசனைப் பார்த்த அவர் "வாருங்கள், வாருங்கள்!" என்று வரவேற்றார். விசாலமும் தன் சிநேகிதி வீட்டுக்கு அலங்கரித்துக் கொண்டுதானே சென்றிருந்தாள்? அதனால் அவள் முன் ஹால் பக்கமாக உள்ளே வந்ததில் எவ்வித ஆட்சேபணையு மில்லாமற் போயிற்று. அப்பொழுதுதான் மதுராம்பாளுக்கு மலையை இறக்கிக் கீழே வைத்தாற் போலிருந்தது.

அதுவரையும் பிரேமா பக்கத்துக் கதவிடுக்கின் வழியாக அந்த அனுபவத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். ஆகா! அந்த மெல்லிய விரல்களினால்தானே அவர் அந்தக் காமிராவைத் தட்டியிருப்பார். சென்ற வாரத்தில் முதற் பரிசு பெற்ற போட்டோவைக்கூட அந்தக் காமிராதானே எடுத்திருக்கும் என்றெல்லாம் அவள் மனம் எண்ணியது. நீண்ட பெருமூச்சும் விட்டுக் கொண்டாள்.

பிரேமா, பெற்றோரையிழந்த ஒரு அனாதையாய் இருந்தும் அவளுக்குச் சொத்து ஏராளமாக இருந்தது. விசாலத்தின் அப்பா அவளுக்கு எட்டாங்காலில் உறவு. அவரைப் பெரியப்பா என்று அழைத்துக் கொண்டிருந்தாள் பிரேமா. தற்சமயம் அவள் சொத்துக்களனைத்தும் அவருடைய மேற்பார்வையில்தான் இருந்தது. பிரேமா மேல் படிப்புக்கு ஆசைப்பட்டுப் பட்டணத்தில் 'இண்டர்' வாசித்துக் கொண்டிருந்தாள். கிறிஸ்துமஸ் விடுமுறைக்கு இங்கு வந்திருந்தாள்.

"என்னடி பிரேமா, அப்படிப் பார்க்கிறாய்?" என்று விசாலம் குரல் கொடுத்த பிறகுதான் பிரேமா திடுக்கிட்டுச் சுய உணர்ச்சி பெற்றுத் திரும்பினாள். "அக்கா! நீ ஒரு அதிர்ஷ்டக்காரிதான்! அவர் பிரபல போட்டோக்காரர், தெரியுமோ? நீ காட்டியமாடும் ஒவ்வொரு கோணத்தையும் அழகு அழகாகப் போட்டோ எடுத்து மாட்டப் போகிறார், பாரேன்!" என்று விசாலத்தின் தோள்களைக் குலுக்கிக் கொண்டே சொன்னாள் பிரேமா. ஆனால் அவள் வார்த்தைகளில் குமிழியிட்ட சந்தோஷம் அவள் முகத்தில் இல்லவே இல்லை. அவளையறியாத ஒரு சோகத் திரைதான் அவள் முகவிதானத்தில் அப்பொழுது தாங்கிற்று. அகத்தின் அழகு முகத்தில் தெரியாமலா யிருக்கும்?

பிரேமாவின் இன்ப வார்த்தைகளைக் கேட்டு, விசாலங்கூட எவ்வித பரபரப்புமடையவில்லை. "உம். நிறைய போட்டோ பிடிப்பார் போலிருக்கு!" என்று நீண்ட பெருமூச்சுதான் விட்டுக் கொண்டாள்.

சென்ற மாத இறுதியில் தன்னைப் பார்த்து விட்டுப் போன மாப்பிள்ளை மகாலிங்கத்தின் மேல் அவள் ஞாபகம் சென்றது. அவன் ஒரு கலா ரசிகன். விசாலத்தின் பாட்டையும் நாட்டியத்தையும் அவன் எப்படி எப்படியோ ரசித்தானே! யாருக்கும் அறியாமல் இருவரும் புன்முறுவல் கூடப் பரிவர்த்தனை புரிந்து கொண் டிருந்தார்கள். அந்தக் கல்யாணமும் ஏதோ முடிந்தாற்போல்தா னிருந்தது. கடைசியில் பணத் தகராறில் வந்து முடிந்தது. அப்புறம் அந்த மாப்பிள்ளையின் பெரியப்பா கூட வந்தார். கல்யாணம் முறிந்து போனதாக எண்ணுகிறீர்கள். உங்களைக் கலந்து கொண்டு போகத் தான் வந்தேன். நான் தம்பியைச் சரி பண்



ணிச் சீக்கிரத்தில் நல்ல தகவலாகவே அனுப்பி வைக்கிறேன் என்றெல்லாங் கூடச் சொல்லிச் சென்றார். அதை நம்பி விசாலங் கூட அவனைக் கனவு கண்டு கொண்டிருந்தாள். அப்பா அம்மாவும் கூட அந்த வரனை ரொம்பவும் எதிர்பார்த்தார்கள்! ஆனால் இது வரையில் பதிலொன்றையுமே காணோமே!

அப்பொழுதுதான் தாத்தா "என்ன மாப்பிள்ளை, பெண் பார்த்தாச்சா?" என்று கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தார்.

"நன்றாயிருக்கு! நீங்கள் வராமலா!" என்றார் அப்பா. சுந்தரேசன் புன்முறுவல் பூத்துக் கொண்டான். உடனே "விசாலம்! வீணையை யெடுத்துக் கொண்டு வாயேன்" என்று இரைந்தார் அப்பா. அவளுக்கு அடிக்கடி இதுமாதிரி நாடகம் நடத்தி வெறுப்புத் தட்டி யிருந்தது. என்ன செய்வது? வீணையுடன் தலை குனிந்து கொண்டு வந்தாள். உடனே சுருதி கூட்டிப் பாடவும் ஆரம்பித்தாள். 'சிம்மேந்திர மத்யமம்' ஆலாபனையில் மேல் ஸ்தாயி சஞ்சாரம் ஜிலு ஜிலு வென்றிருந்தது. சுந்தரேசன் மயங்கியே போய் விட்டான். சபாஷ்! என்று வாய் விட்டே சொன்னான். மறைவிலிருந்த பிரேமாவுக்கு அந்த ரசிக வார்த்தைகள் அவள் அடி வயிற்றில் அப்படியே நெருப்பை யள்ளிக் கொட்டினாற்போ லிருந்தது. கண்களை இறுக மூடித் திறந்து கொண்டாள்.



முதற் பாட்டை முடித்து, இரண்டாவது பாட்டு ஆரம்பித்தாள் விசாலம். 'பந்துவராளி'யை வெகு சுகமாக எடுத்தாள். அதற்குள் சுந்தரேசன் பார்வை அங்கிருந்த 'போட்டோ' ஆல்பத்தின் மீது சென்றது. ஆவலாய் அதை எடுத்துப் பார்த்தான். ஆகா! எத்தனை நேர்த்தியான படங்கள்! "இதெல்லாம் யார் எடுத்தது?" என்று கேட்டான். நடுவில் பேசவே, தன் பாட்டை அவன் அசட்டை செய்ததாகவே எண்ணினாள் விசாலம். உடனே வீணையை வைத்து விட்டு வெடுக்கென்று எழுந்து வெளியே வந்து விட்டாள்.

"எல்லாம் எங்கள் பிரேமா எடுத்த படங்கள்" என்றார் அப்பா. "இன்னும் இது மாதிரி 'ஆல்பம்' வேறு இருக்கா?" என்று கேட்டான் சுந்தரேசன்.

"பிரேமா! நீ படித்த பெண்தானே! ஏன் இப்படி உள்ளே ஒளிந்து கொண்டிருக்கிறாய்? சிறுசா, லட்சணமா இப்படி வந்து இவர் கேட்கிறதுக்குப் பதில் சொல்லேன்" என்று அங்கிருந்தேபேசினார் அப்பா. பிரேமாவுக்கு ஒருவித துன்பமும், இன்பமும் கலந்த உணர்ச்சி பிறந்தது. மெதுவாய் வெளியே வந்தாள். தலை குனிந்து, தன் படங்களையெல்லாம் எடுத்துச் சுந்தரேசனுக்குக் காட்டினாள். அவளுடைய ஒவ்வொரு படத்தையும் ரொம்பவும் சிலாகித்தான் அவன். "உம், நீங்கள் எடுக்கும் படங்களைவிடவா இவைகள் உயர்ந்தவை!" என்றாள் பிரேமா. "அப்படி யென்றால் என் படத்தை யெல்லாம்......"

"ஓ! பார்த்திருக்கேனே 'அனுமதேயம்' என்ற பெயரில் சென்ற படப் போட்டியில் கூட நீங்கள் முதற் பரிசு வாங்கியிருந்தீர்களே!"

"ஓ!" என்று பிரமித்து வியந்தான். இருவர் கண்களும் சந்தித்துக் கொண்டன. பிரேமாவின் முகம் குப்பென்று சிவந்தது. அப்பொழு தெல்லாம் தாத்தாவின் கூர்மையான கண்கள் சுற்றிச் சுழன்றன.

அதற்குள் "என்ன தாத்தா, ஒரு பாட்டோடு நிறுத்தி விட்டார்களே! பந்துவராளி எடுப்பு வெகு ஜோராயிருந்ததே!" என்று திரும்பினான் சுந்தரேசன். அதைக் கேட்ட பிரேமாவுக்குத் தன் முதுகில் யாரோ சவுக்கால் 'பளீர்' என்றடித்தது போ லிருந்தது. விடுவிடென்று தன் அறைக்கு வந்தாள்; படுக்கையில் குப்புற விழுந்தாள். அழுகை அமோகமாய் வந்தது. அவள் உடம்பும் குலுங்கிற்று.



மேற்கு மாம்பலம் சங்கர மடம் கட்டிட நிதிக்காக மேற்கு மாம்பல அமெச்சூர் குழுவினர் "ராம பாதம்" என்னும் நாடகத்தைச் சங்கர மடம் கட்ட விருக்கும் மைதானத்தில் அமைக்கப்பெற்ற திறந்த வெளி அரங்கில் ஜூலை மாதம் 12ந் தேதி நடித்தனர். இந்த நாடகத்துக்கு ராஜாஜி அவர்கள் தலைமை வகித்தார்கள். மேற்படி நாடகத்தில் பங்கு பற்றியவர்களை மேலே படத்தில் காணலாம்.

மறுபடியும் உள்ளே யிருந்த விசாலத்தை யழைப்பதற்குள், வாசலில் 'டிரிங் டிரிங்' என்று சைக்கிள் மணி சப்தங்கேட்டது. 'ஒரு தந்தி சார்' என்று கொடுத்துக் கையெழுத்து வாங்கிப் போனான் தந்திப் பியூன். அவசர அவசரமாய் அப்பா தந்தியைப் பிரித்துப் படித்தார். அவர் முகம் மாறிற்று. தாத்தா விடம் ஏதோ குசு குசுவென்று பேசினார். சுந்தரேசன் எதையும் கவனிக்க வில்லை. பிரேமாவின் போட்டோக்களைப் புரட்டவே சரியா யிருந்தது அவனுக்கு. சரியாய்ச் சொல்லவேண்டுமானால் சுந்தரேசன் இந்த உலகத்திலேயே இல்லை. கந்தர்வ உலகத்து இன்பப் பாதையில் 'ஜிவ்'வென்று பறந்து கொண்டிருந்தான். அவன் மனதில் இப் பொழுது பதிந்திருந்த எண்ணமெல்லாம் பிரேமாவைப் பற்றித்தான். கைவிரல்கள் போட்டோ ஆல்பத்தைப் பக்கம் பக்கமாகத் தள்ளிக் கொண்டிருந்தன. ஆனால் அவன் கண்கள் போட்டோப் படங்களிலும் கூடத் தில் அங்கும் இங்குமாகச் சஞ்சரித்துக் கொண்டிருந்தன.

சுந்தரேசனை இந்தப் பூவுலக நினைவுக்குக் கொண்டு வரும் முயற்சியைத் தாத்தா எடுத்துக் கொண்டார்.

"என்ன மாப்பிள்ளை ஸார்! அதைத் திருப்பித் திருப்பிப் புரட்டுவதைவிட, அந்தப் பிரேமாவையே தான் கல்யாணம் பண்ணிக் கொள்ளுங்களேன்" என்றார் தாத்தா.

"என்ன! உண்மையாகவா?" என்று எக்களிப்படைந்தான் சுந்தரேசன்.

"பின்னே உங்களிடம் விளையாடுகிறேனா, என்ன? எங்கள் மனதில் உதித்த அபிப்பிரா யத்தைத்தான் உங்களிடம் வெளியிட்டேன். உங்கள் அபிப்பிராயம் ஒருமாதிரி எனக்குத் தெரிந்து விட்டது. இருந்தாலும் ..." என்றார் தாத்தா மிகவும் சாமர்த்தியமாக.

"...உம். கரும்பு தின்னக் கூலியா?" என்றான் சுந்தரேசன் அவனையும் அறியாமல் அவன் மனதில் எழுந்த ஆனந்த மிகுதியில். தாத்தா அவனைக் கவனித்துப் பார்த்தார்.

அதற்குள் அப்பா உள்ளே ஓடிவந்தார். மதுராம்பாளிடம் ஏதோ குசுகுசு வென்று பேசினார். உடனே அவள் 'பிரேமா, பிரேமா!' என்று கூப்பிட்டுக் கொண்டே அவள் அறைக்குச் சென்றாள்.

"என்னடி இது! இப்படி உருண்டு கிடக்கிறே? அந்த மாப்பிள்ளை உன்னையேதான் கட்டிப்பேன் என்கிறான். நீதான் போட்டோக்களைக் காட்டி மயக்கி விட்டாயே அவரை. இந்தா, காப்பியைக் கொண்டு போய்க் கொடு, அவருக்கு!" என்றாள் மதுராம்பாள்.

"நிஜமாகவா, அம்மா!" என்று வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தாள் பிரேமா. மதுராம்பாளின் வார்த்தைகள் அவளுக்கு இன்பப் போதையை ஊட்டின. உடனே அவசர அவசரமாய் முகம் கழுவி, பொட்டிட்டு, காப்பியுங் கையுமாக மந்தகாசத் துடன் சுந்தரேசனிடம் புறப்பட்டாள் பிரேமா. ஏதோ ஆழ்ந்த யோசனையிலிருந்த விசாலத்திற்கு ஒன்றுமே விளங்கவில்லை. 'இந்தாம்மா விசாலம், இதைப் படித்துப் பார்!" என்று தந்தியைக் கொடுத்தார் அவள் தந்தை. முன்பு விசாலத்தைப் பார்த்து விட்டுப் போன மாப்பிள்ளை மகாலிங்கத்தின் பெரியப்பா 'சம்மதம்' என்று தந்தி யடித்திருந்தார். அந்த ஒரே ஒரு வார்த்தையை ஒரு தடவைக்கு நூறு தடவையாக வாசித்து உள்ளம் பூரித்தாள் விசாலம்.

# 14 நாட்களில் மக்ளீன்ஸ் உதவியால் அதிக வெண்மையான பற்கள்



இந்த 14-தின பரீக்ஷையை செய்து பாருங்கள்

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை எவ்விதம் பற்களை அதிக வெண்மையாக்குகிறது என்பதை, நீங்களும் உபயோகித்து உணருங்கள். இதை உறுதியாகக் கொள்ளுங்கள்—பிரதிதினமும்—தினசரி இருமுறை உங்கள் பற்களை நன்றாக மக்ளீன் செய்யுங்கள். ஆரம்பமுதலே, மக்ளீனிலுள்ள விசேஷ பொருள்கள், மிருதுவாகவும், அபாயமின்றியும், உங்கள் பற்களில் உள்ள அவலட்சணமான கறைகளை போக்கி, அவைகள் இயற்கையான ஒளி வீசச்செய்வதைக் காண்பீர். 14 நாட்களுக்குள் — அல்லது அதற்கும் குறைவாகவே கூட—நீங்கள் பெருமைப் படக்கூடிய பற்களை அடைவீர்கள்—மக்ளீன் வெண்மையான பற்கள், ஆரோக்கியமான பற்கள்.

**க்ளோரோபில் சேர்த்ததும் கிடைக்கும்.**

பற்களை வெண்மையாக்குவதில் உலகில் மிகச் சிறந்த மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை — இப்போது அதிக குளிர்ச்சி தரும் க்ளோரோபில் சேர்த்தும் கிடைக்கும்.




MTY. 28-TAM.

## மக்ளீன்ஸ்

பெராக்ஸைட் பற்பசை

*பற்களை அதிக வெண்மையாக்குகிறது*

வியாபார விவரங்களுக்கு

ஜே. எல். மார்ஸன் ஸன் & ஜென்கின்ஸ் (இந்தியா) லிமிடெட்.

தபால் பெட்டி 6527, பம்பாய் 26. தபால் பெட்டி 387, கல்கத்தா.

தபால் பெட்டி 1370, சென்னை.




## காட்சி—1

[கணபதி சர்மா வீடு. காலை மணி ஆறு. படுக்கையில் தூங்கிக் கொண்டிருக்கும் சர்மாவை அவரது மனைவி காமாட்சி யம்மாள் எழுப்புகிறாள்.]

காமாட்சி:—என்ன, நன்றாகத் தூங்குகிறீர்கள்! மணி ஏழடிக்கப் போகிறது. எழுந்திருங்கோ!

சர்மா (கொட்டாவி விட்டுக் கொண்டே எழுந்திருக்கிறார்):—அப்பாடி....! இந்த ராஜகோபாலன் ராத்திரி அகாலத்திலே வந்தானோ இல்லையோ...! சரியாகத் தூக்கமே இல்லை......கண்ணெல்லாம் ஒரே எரிச்சல்!

காமாட்சி (ஆச்சரியத்துடன்):—ராஜகோபாலனா!

சர்மா:—ஆமாம், எங்கே அவன்! காலங்காத்தாலே எங்கேயாவது உலாத்தப் போயிட்டானா!

காமாட்சி (திகைப்புடன்):—நீங்க என்ன சொல்லுகிறீர்கள்!......எந்த ராஜகோபாலன்!

சர்மா:—என்னடி உலகத்தையே மறந்தவள் மாதிரி கேட்கிறாயே!.........ராத்திரி வந்தானே உன் அண்ணன் ராஜகோபாலன் அவனைத் தான் சொல்லுகிறேன்!

காமாட்சி (மேலும் ஆச்சரியத்துடன்):—கம்ப ராஜாவா! ......எப்போ வந்தான்!... நீங்க எங்கே பார்த்தேள் அவனை!

சர்மா (எரிச்சலோடு):—என்னடி பார்த்தேனும் கருத்தேனும்!......ராத்திரி வந்த ஆசாமி எங்கே போயிருக்கிறான் என்றால்......!

காமாட்சி:—உங்களுக்கு என்ன காலங்காத்தாலே பைத்தியம் பிடித்தியம்......

சர்மா:—ஆமாம், எனக்குப் பித்தியம் தான் பிடிச்சிருக்கு! இதோ பார் காமூ. உனக்கு எப்போ விளையாடணும் எப்போ 'ஸீரியஸா' இருக்கணும் என்கிறது தெரியறதில்லை!......அந்த மண்டு! நான் போய்ப் பல்லைத் தேய்த்து விட்டு வருகிறேன், அதற்குள்ளே அந்த நூறு ரூபாயை எடுத்துவை! காப்பியைக் குடிச்சு விட்டு நான் போய்ப் புது வீட்டுக்கு 'அட்வான்ஸ்' கொடுத்து விடுகிறேன்!



காமாட்சி (திகைப்புடன்):—எது ரூபாய்!...

சர்மா:—இதோ பார், திரும்பவும் விளையாடினால் எனக்கு மகா கோபம் வரும்!...நான் புது வீட்டுக்கு 'அட்வான்ஸ்' கொடுக்கப் பணமில்லை, நீதான் கடனாகக் கொடுத்து ஒத்தாசை பண்ணவேண்டுமென்று அவனுக்குக் கெஞ்சாத குறையாகக் கடிதாசு எழுதினேன். அவனே பாதி ராத்திரியில் வந்து பணத்தைக் கொடுத்தான்! நீ என்ன, உன் அண்ணன் அதை உன் செலவுக்கு இனாமாகக் கொடுத்தான் என்று நினைச்சுட்டாயா!

காமாட்சி:—அட, கஷ்ட காலமே!......ஏன் உங்களுக்கு இப்படி மூளை புரண்டு போச்சு!...நன்றாக இருக்கு கதை!... ராஜா வந்தானாம்! பணம் கொடுத்தானாம்! ராத்திரி பூராவும் ஏதாவது கனவு கண்டேளா!

சர்மா:—நானா கனவு கண்டேன்!......பணத்தை வாங்கிப் பெட்டியிலே வைச்சுப் பூட்டி விட்டு யாரை ஏய்க்கப் பார்க்கிறாய்!

காமாட்சி (இடுப்பிலிருந்த சாவிக் கொத்தை எடுத்து வீசி எறிந்து):— இந்தாங்கோ சாவி! பெட்டியிலே பணம் இருந்தால் தாராளமாக எடுத்துக் கொள்ளுங்கள்!

சர்மா:—அப்படியானால் பெட்டியிலே இல்லையா! அதற்குள் எங்கே எடுத்து ஒளிச்சு வைச்சுட்டே! கஷ்ட காலம்! பொழுது விடிஞ்சதும் விடியாததுமாக இது என்ன தகராறு வேண்டிக் கிடக்கிறது காமூ!

[வாசலில் குதிரை வண்டி வந்து நிற்கிறது. சர்மாவின் மைத்துனன் ராஜகோபாலன் உண்மையிலேயே வண்டியிலிருந்து இறங்குகிறான். வண்டிக்காரன் பெட்டி படுக்கைகளைத் திண்ணை மீது எடுத்து வைக்கிறான்.]

ராஜா (உள்ளே வந்து கொண்டே):—என்ன மாப்பிள்ளே ஸார்!......இப்போதுதான் தூங்கி எழுந்தேளா!......

சாமா (காமாட்சியைப் பார்த்து):—ஏய் தடிக் கழுதை!......என்னைப் பைத்தியமாக்கிறயே,...... இதோ பார் உன் அண்ணன்! இப்போதாவது ஒத்துக் கொள்கிறயா!......

காமாட்சி (ஒன்றும் புரியாதவளாய்):—என்ன அண்ணு!......நீ ஊரிலிருந்து எப்போ வந்தாய்!... நேற்று ராத்திரியா!......

ராஜா (திகைத்து):— இல்லையே!...இதோ இப்போதுதானே ரயிலடியிலிருந்து வருகிறேன்!

காமாட்சி:—உங்க மாப்பிள்ளே சொல்கிறரே! நீ நேற்று ராத்திரி வந்தாயாம், என்னிடம் ஐந்நூறு ரூபாய் கொடுத்தாயாம்!......அதைக் கொண்டு வான்னு ரகளை பண்ணுகிறர்!

சாமா:—ஏண்டி! இப்படிப் பேசினல் ராஜா உனக்காகப் பொய் சொல்லுவான் என்று பார்க்கிறயா! இதோ பார் ராஜா, புது வீட்டுக்கு அட்வான்ஸ் கொடுப்பதற்காக நீ கடனுகக் கொடுத்தாய் பார், அந்தப் பணத்தை எடுத்து வைத்துக் கொண்டு உன் தங்கை......

ராஜா (சிரிக்கிறன்):—நானு பணம் கொடுத்தேன்! நல்ல கூத்து!......என்ன மாப்பிள்ளே!...

சாமா:—மாப்பிள்ளையாவது! மரப் பிள்ளையாவது! நீயும் அவளோடு சேர்ந்து விட்டாயா! ...எனக்கென்ன, கொடுத்ததை இல்லை என்றல் பிறகு உனக்கே நாமம்தான்!

ராஜா:—ஏதேது, நான் இல்லை என்றல் கூட விட மாட்டீர்கள் போலிருக்கே!

[வீதியில் வண்டிக்காரன் சத்தம் போடுகிறன்]

வண்டிக்காரன்:—ஏ சாமி, என்ன! கூலி கூடக் கொடுக்காதே உம் பாட்டிலே கதை பேசிக்கிட்டிருக்கிறயே!......

ராஜா:—பெட்டி படுக்கை யெல்லாம் உள்ளே கொண்டு வந்து வையப்பா!......

வண்டி:—நீ பேசின வாடகை என் வண்டிக்குத் தான். உன் மூட்டை தூக்கறத்துக்கில்லே! பொட்டியைக் கொண்டாந்து உள்ளே வைக்கனுமானு ரெண்டணு 'எக்ஸ்ட்ரா' தரணும், தெரியுமா!

சாமா:—என்னடா அதிகப் பிரசங்கியாய் இருக்கே!......உம்!

வண்டி:—சாமி, நீ சும்மா இரு!...பாவம் உனக்குத் தூக்கக் கலக்கம்!...இப்பத்தான் ரயிலிலிருந்து வர ஆசாமியைப் போய் ராத்திரி வந்தவர்னு சொல்றே!......எங்கிட்டே வேறே வம்பு வாணும்!

[ராஜா கூலியைக் கொடுத்தனுப்புகிறன்]

சாமா:—என்னடா ராஜா, அப்படியானல்...... நீ இப்போது தான் வருகிறயா!

ராஜா (சிரித்துக் கொண்டே):—வண்டிக்காரன் கூடச் சாட்சி சொன்னனே!

சாமா (தமக்குள் முணு முணுக்கிறர்):—உம்!... பின்னே ராத்திரியே வந்த மாதிரி யிருக்கிறதே!... நான் கனவுதான் கண்டேனு!......

காமு:—இவர் எப்பவுமே இப்படித் தாண்டா ராஜா! ராத்திரி யெல்லாம் ஏதாவது சொப்பனம் கண்டு விட்டுக் காலையில் என்னை வம்புக் கிழுக்கிறர்! ... இதோடு மூன்றுவது தடவை!—ஒவ்வொரு தரமும், இவர் கண்டது உண்மையில்லை, கனவுதான் என்று இவரைச் சமாதானப் படுத்து வதற்குள் என்பாடு போதும் போதுமென்று ஆகி விடுகிறது!

சாமா:—நீ மாத்திரம் என்னவாம்! நானுவது கனவு கண்டதை உண்மையாக்குமென்று நம்புகிறேன்! நீ உண்மையாக நடந்ததை யெல்லாமே "கனவு கனவு!" என்று கத்துகிறயே!...அதனுல் தான் உன் பேச்சில் எனக்கு நம்பிக்கையே ஏற்பட மாட்டேன் என்கிறது!

பத்மா-ராகவன் — குமுதா-சீனிவாச கோபாலன்



ஸ்ரீ டி. ஏ. ராமன் (சீப் இந்தியன் ஆபீஸர், யு. என். செகரட்டேரியட், நியூயார்க்) அவர்களின் செல்வப் புதல்விகளும், தஞ்சை கிரிமினல் லாயர் ஸ்ரீ எம். கே. ரங்காச்சாரியார் அவர்களின் பேத்திகளுமான சௌ. பத்மாவுக்கும், சௌ. குமுதாவுக்கும் ஜூலை 8, 13, தேதிகளில் தஞ்சையில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. சௌ. பத்மா, அடிஸன் கம்பெனியைச் சேர்ந்த ஸ்ரீ டி. எஸ். ராகவனையும், சௌ. குமுதா ஓய்வு பெற்ற உதவி விவசாய டைரக்டரான ஸ்ரீ கே. ராகவாச்சாரியார் குமாரன் ஸ்ரீ சீனிவாச கோபாலனையும் வாழ்க்கைத் துணைவராகக் கொண்டார்கள். மேற்படி திருமணங்களுக்கும், திருமணத்தன்று மாலை நடந்த விருந்துக்கும் பல பிரமுகர்கள் விஜயம் செய்து சிறப்பித்தனர். வாழ்க மணமக்கள்!

ராஜா:—(நகைத்துக் கொண்டே) இரண்டு பேரும் நல்ல சரியான ஜோடிதான்!

சாமா:— இல்லேடா ராஜா! ராத்திரி என்னவோ அத்தனை நிஜம் போல் இருந்தது. அதைக் கனவு என்று சந்தேகிக்கவே முடியவில்லை!

ராஜா:—சரி, சரி! எனக்கு வேலை இருக்கிறது. ஓர் இடத்தில் இரண்டாயிரம் ரூபாய் வரவேண்டும்! அதை வசூல் பண்ணி உங்களிடம் ஐந்நூறு ரூபாய் கொடுத்து விட்டுச் சாயங்காலவண்டிக்கே திரும்பிப் போக வேண்டுமென்று வந்தேன்!... இங்கே உங்களைப் பார்த்த பிறகு எனக்கு உள்ளூறப் பயமாகத் தான் இருக்கிறது!

காமாட்சி:— ஏன் அண்ணு!

ராஜா:—ஏனு! இவர் என்னிடம் கடன் வாங்

சர்மா :—இன்னும் கேளுமைய்யா !...நமது மானேஜரைக் கோயமுத்தூர் பிராஞ்சுக்கு மாற்றுவதற்குத் தலைமை ஆபீஸிலிருந்து உத்தரவு வந்ததாகக் கனவு கண்டேன் !...பார்த்துக் கொண்டே இரும், பலிக்கிறதா இல்லையா என்று !

கோபால் :—(கட கடவென்று சிரிக்கிறார்) சர்மா, சரியான பேர் வழியய்யா நீர் ! எனக்கு ஒன்றுமே விஷயம் தெரியாதென்று நினைத்தீரா !

சர்மா :—(திகைத்து) என்ன !



னை மாதிரி கனவு கண்டார் !...எனக்கும் பணம் கொடுக்க வேண்டிய ஆசாமி அதைத் திருப்பிக் கொடுத்துவிட்ட மாதிரி கனவு கண்டு விட்டிருந்தால் என்பாடு ஆபத்துதானே !

[மூவரும் சிரிக்கின்றனர்.]

## காட்சி—2

இடம் :—சர்மாவின் ஆபீஸ்.

[சர்மாவும் அவரது சக குமாஸ்தா கோபால் ராவும்.]

கோபால்ராவ் :—என்ன சர்மா, நேற்று ராத்திரி ஒரு கனவு கண்டேன் பாருங்கோ !...அடா அடா...என்ன பயங்கரம் தெரியுமா !...நான் தெருவோடு போய்க் கொண்டிருக்கிறபோது ஒரு பெரிய லாரி வந்தது !...

சர்மா :—என்னது ! லாரியா !

கோபால் :—ஆமா, ஒரு பெரிய லாரி வந்து என் மேலே மூட்டி,...என்னை அப்படியே அரைத்து...

கணபதி :—ஐயையோ !...எந்த நேர மணிக்குக் கனுக் கண்டீர்கள், ஸார் !

கோபால் :—விடியற்காலை நாலு மணி இருக்கும்.

சர்மா :—இதோ பாரும் கோபால்ராவ், நீர் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்கணும் ! இது அனேகமாக ஒரு மாசத்துக்குள் பலித்து விடும் !...

கோபால் :—(மெதுவாகச் சிரித்து) போமய்யா போம் ! எனக்கு இந்தக் கனவு சாஸ்திரத்திலேயே நம்பிக்கை கிடையாது !

சர்மா :—எனக்கும்தான் அப்படியிருந்தது. ஸ்வாமி ! இதோ பாரும் ! விடியற் காலையில் என் மைத்துனன் வந்து ஐந்நூறு ரூபாய் கொடுத்ததாகக் கனவு கண்டேன். தூங்கி எழுந்தேன் !... என் மைத்துனன் உண்மையிலேயே வந்து நிற்கிறான் !...இதோ, சாயங்காலம் பணமும் கொடுக்கப் போகிறான் !...இதற்கென்ன சொல்லுகிறீர் !

கோபால் :—உண்மையாகவா !......நீர் ரொம்ப அதிர்ஷ்டக்காரரய்யா !

கோபால் :—என்னவா !...மூர்த்தாநாள் மானேஜர் என்னெதிரில்தானே, நமக்கு மாற்றல் உத்தரவு வந்ததைப் பற்றி உம்மிடம் சொல்லிக் கொண்டிருந்தார் ! அது எனக்குத் தெரியாதென்று நினைத்துக்கொண்டு "கனவு கண்டேன் ! பலிக்கப் போகிறது பார் !" என்று கயிறு திரிக்கிறீரே !... எத்தனை நாளாக இதுமாதிரி !...

சர்மா :—(மேலும் திகைத்தவராய்) மானேஜர் சொன்னாரா !...என்னிடமா !...ஞாபகமில்லையே !... கனவு கண்டது போல் அல்லவா இருக்கிறது !... என்ன கஷ்டம் !...

[பியூன் வருகிறான்]

பியூன் :—ஸார் ! மானேஜர் கூப்பிடறாங்க.

[சர்மா மானேஜரின் அறைக்குப் போகிறார்.]

மானேஜர் :—என்ன சர்மா, அந்தப் பெல்லாரி ஆசாமிக்குக் கடிதம் எழுத வேண்டுமென்று போன வாரமே சொன்னேனே ! ஏன் எழுதவில்லை !...

சர்மா :—அதுதான் அந்த ஆசாமி இங்கே வந்திருந்தபோது விஷயத்தை நேரிலேயே சொல்லி விட்டோமே, ஸார் !

மானேஜர் :—(வியப்புடன்) ஆசாமி நேரில் வந்தாரா ! எப்போது வந்தார் !...என்னிடம் சொல்லவே இல்லையே !

சர்மா :—இரண்டு நாளைக்குமுன் வந்தாரே, ஸார் ! நீங்கள்தானே பதில் சொல்லி அனுப்பினீர்கள் ! கோபால்ராவ்கூட....

மானேஜர் :—என்னய்யா ஆச்சரியமாக இருக்கிறதே ! நானா பதில் சொன்னேன் ! (மணியைத் தட்டி) கோபால்ராவ் !...

[கோபால்ராவ் வருகிறார்.]

கோபால் :—ஸார் !...

மானேஜர் :—கோபால் ராவ் ! அந்தப் பெல்லாரி ஆசாமி இங்கே வந்திருந்தாரா !

கோபால் :—இல்லையே ஸார் !

மானேஜர் :—மூர்த்தாநாள் வந்தாராம், என்னிடம் பேசினாராமே !...சர்மா சொல்லுகிறாரே !

கோபால் :—வரவே யில்லையே, ஸார் !

மானேஜர் :—ஏனய்யா சர்மா! ஏதாவது கனவு கண்டீரா! நீர் சொன்னதைக் கேட்டு எனக்கே பல்லவா சந்தேகமாய்ப் போய் விட்டது!...ஏன் வர வர இப்படி ஆகிவிட்டீர்! போமையா! போய் உடனே லெட்டர் எழுதும்!

[இரு குமாஸ்தாக்களும் வெளியே வரு கின்றனர்.]

சர்மா :—வரவர எனக்குக் கனவுக்கும் நனவுக்கும் வித்தியாசமே தெரியமாட்டே னென்கிறதே, கோபால் ராவ்! உண்மைகள் கனவு போலவும், கனவுகள் உண்மை போலவும் தோன்றி ஒரே குளறுபடியாகி...

[சர்மாவின் மைத்துனன் ராஜு வருகிறன்.]

சர்மா :— என்ன, ராஜு! பணம் கிடைத்ததா!

ராஜு :—இரண்டாயிரம் வரவேண்டிய இடத் தில் ஆயிரந்தான் வசூலாயிற்று. காமுவிடம் ஐந்நூறு ரூபாய் கொடுத்திருக்கிறேன்...வண்டிக்கு நேரமாயிற்று. உங்களிடம் சொல்லிக் கொண்டு போகலாமென்று வந்தேன்.

சர்மா :—மகாராஜன்!... காமுவிடம் பணம் கொடுத்திருக்கிறு யல்லவா!

ராஜு :—ஏன் இதுவும் கனவோ என்று பயமா! ...பயப்படாதீர்கள்! உண்மையாகவே கொடுத் திருக்கிறேன்.

[சிரித்துக் கொண்டே போகிறன்.]

## காட்சி—3

[மறுநாள் காலை. சர்மா வீடு.]

காமாட்சி :—ஒருநாளைப் போல இப்படி ஏழு மணி வரையிலா தூக்கம்! காப்பி ஜில்லுன்னு ஆறிப்போச்சே!

சர்மா :—(எழுந்து கொண்டே) காமு!...காமு!... ஒரு சின்ன சந்தேகம்!

காமாட்சி :—தூங்கி எழுந்திருக்கும்போதே என்ன சந்தேகம் வந்துவிட்டதாம்!...இன்னிக்கும் ஏதா வது சொப்பனமா!

சர்மா :—(அசட்டுச் சிரிப்புடன்) அதை ஏன் கேட்கிறாய் போ!...அத்தனை தத்ரூபமான கனவு!

காமாட்சி :—போய்ப் பல்லைத் தேயுங்கோ! பொழுது விடிஞ்சால் உங்கள் கனவுப் புராணத் தைக் கேட்டு என் காது புளிச்சுப் போச்சு!

சர்மா :—கனவென்றால் அத்தனை அலட்சியமா! ...மனித வாழ்க்கையே நிர்வாகமாகின் ஒரு நெடுங் கனவு என்கிருர்கள் யோகிகள்!

காமாட்சி :—போதுமே, உங்கள் வேதாந்தம்! அடுப்பில் பால் பொங்கப் போகிறது!

சர்மா :—என் கனவைக் கேட்டால் உனக்குச் சிரிப்பு பொங்கப் போகிறது! அத்தனை அற்புதம்! கனவுக்குள் கனவு!

காமாட்சி :—(குறும்பாக) ஏதேது! கதைக்குள் கதை என்கிருர்களே!...

சர்மா :—அதே மாதிரிதான்! விஷயத்தைக் கேள்!...இப்படி இதே இடத்தில்தான் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த மாதிரி இருந்தது. நீயும் அதோ அங்கே குறட்டை விட்டுப் புரண்டு கொண்டிருந்தாய்!...திடீரென்று யாரோ புழக் கடைப் பக்கத்திலிருந்து சுவரேறிக் குதித்து உள்ளே வந்தமாதிரி கனாக் கண்டேன்! வந்தவன் பூனைமாதிரி, அடிமேலடி வைச்சு நம்மை யெல் லாம் தாண்டிக் கொண்டு அதோ அந்த அறைக் குள்ளே போனான்.

காமாட்சி :— (பதட்டத்துடன்) என்ன!...அந்த அறைக்குள்ளேயா!...

சர்மா :—கனுத்தானேடி! கேளேன் முழுவதை யும்!...போனானா!...கொஞ்ச நேரத்துக் கெல் லாம் எதையோ மூட்டையாகத் துணியிலே கட்டிக்கொண்டு வெளியே வந்தான்!...அந்தத் திருடனைப் பிடிச்சுக் கட்டிவைத்து உதைக்க வேணு மென்று மனமும் உடம்பும் பதைத்தன! ஆனால் மறு நிமிஷம், சே! வெறும் கனவுதானே காண் கிறோம் என்று......

காமாட்சி :—என்ன சொல்றேள் நீங்க!

சர்மா :—அதாவது அந்தக் கனவிலேயே 'நான் கனவுதான் காண்கிறேன், உண்மையில்லை' என்கிற ஒரு உணர்ச்சி!...உடனே போர்வையைத் தலை வரையில் இழுத்துப் போர்த்திக் கொண்டு...

காமு :—இது என்ன கூத்து!...கொஞ்சம் இருங்கோ!

[அந்த அறையை நோக்கி ஓடுகிறள்.]

சர்மா :—அடிப் பயந்தாங்கொள்ளிப் பைத்தி யமே! நான் சொப்பனம் கண்டதைச் சொன்னால்......

[காமாட்சி அந்த அறையிலிருந்தும் சத்தம் போடுகிறாள்.]

காமாட்சி :—போச்சு!...போச்சு!...

சர்மா :—என்னடி போச்சு!

காமாட்சி :—நாசமற்றுப் போச்சு! இன்னும் என்ன போகணும்! பெட்டி திறந்து கிடக்கிறது! எல்லாம் காலி! உங்களால் திருடனை விரட்ட முடியல்லேன்னு என்னையாவது எழுப்பித் தொலைக்கக் கூடாதோ!

சர்மா :—எப்படியடி எழுப்ப முடியும்! நான் இப்போத் தானே முழிச்சுண்டேன்!... நான் கண்டது கனவுதானே!

காமாட்சி :—உங்கள் கனவும் நீங்களும்! உங்க ளுக்குக் கனவுக்கும் நனவுக்கும் வித்தியாசம் தெரிஞ்சால்தானே!...திருடன் வந்து வெள்ளிப் பாத்திரம், என் அண்ணு கொடுத்த ஐந்நூறு ரூபாய் எல்லாத்தையும் சுருட்டிக் கொண்டு போகிறவரைக்கும் நன்ருகத் துப்பட்டியாலே போர்த்திக் கொண்டு, கொட்டு கொட்டுன்னு முழித்துக் கொண்டிருந்து விட்டு, இப்போ வந்து 'கனவு கண்டேன்' என்கிறீர்களே! உட்கார்ந்து ஒரு குரல் அழுங்கோ!

சர்மா :—ஐயையோ! அத்தனையும் உண்மையா! கனவில்லையா!...... காமு, சரியாகப் பார்த்துச் சொல்லேன்! இப்போது நான் விழித்துக் கொண் டிருக்கிறேனு, கனவு காண்கிறேனு! (திரை)

### வருந்துகிறேம்

பல சங்கீத சதஸுகளிலும், சபாக்களிலும் இனிமையாகப் பாடிச் சங்கீத ரஸிகர் களின் பாராட்டுதலேயும் நன் மதிப்பையும் பெற்றிருந்த தஞ்சை ஸ்ரீ டி. பி. ராமநாத ஐயர் அவர்களின் புதல்வி குமாரி டி. ஆர். அம்புஜம் சென்ற ஜுலை மாதம் எட்டாம் தேதி அகால மரணமடைந்த செய்தியைக் கேட்டு, வருந்துகிறேம். அவருடைய குடும்பத்தாருக்கு எங்கள் மனமார்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறேம்.

# இனி
# போலி தயாரிப்புகளுக்கு வழியில்லை




எங்கள் பிரசித்தி பெற்ற டாய்லட் தயாரிப்புகளைப் போல் கள்ளத்தனமாகப் பல போலி சரக்குகள் துர்விநியோகம் செய்யப்பட்டு வருவதால், எங்கள் தயாரிப்புகளின் பாக்கிங்கை அடியோடு மாற்றி விட்டோம்.

மூடி கையாட முடியாதபடி உறுதி வாய்ந்தது. மூடி தளர்ந்தோ அல்லது உடைந்தோ இருக்கும் பாட்டில்களை வாங்காதீர்கள்.

லேபிள் சிறிது மாற்றப் பட்டுள்ளது. பாட்டிலில் உள்ள வாசனை ரகத்தின் பெயர் லேபிளின் மேல் அச்சிடப்பட்டுள்ளது. சுலபமாக கண்டு கொள்வதின் பொருட்டு "கலர் ஸ்கீம்" முன்பிருந்தபடியேதான் இருக்கிறது.

பாட்டில், மேல் பாகத்திலும் அடியிலும் வளையங்களுடன், தெளிவாக தெரியும்பொருட்டு விசேஷ வகையில் அமைக்கப்பட்டுள்ளது. வேறு எவரும் இதை உபயோகிக்காத வண்ணம் பேடண்ட் செய்யப்பட்டுமுள்ளது.



பாட்டிலின் அடியில் பேடண்ட் நம்பரும், 'டாம்கோ' என்ற பெயரும் இருக்கிறது.

நீங்கள் அடுத்த முறை வாங்கும் போது, இப் புதிய அம்சங்களைக் கவனமாகப் பார்த்து, போலிகளைத் தவிருங்கள்.

## டாம்கோ

தேங்காயெண்ணை ஷாம்பூ
பரிமள காஸ்டர் கேச தைலம்
பரிமள கூந்தல் தேங்காயெண்ணை

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்


மில்க் ஆப் மக்னீஷியா
மற்றுமொரு
ஐ. டி. எல். தயாரிப்பு.
வயிற்றிலுள்ள புளிப்பைப் போக்கி
மலசுத்தியை அளிக்கும்.
தயாரிப்பவர்கள்:
தி மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங்
லேபரேட்டரி லிட்., மல்லேஸ்வரம், பெங்களூர்.
விற்பனை ஏஜண்டுகள்:
பெஸ்ட் & கோ. லிமிடெட்.,
தபால் பெட்டி நெ. 63
சென்னை
MILK OF MAGNESIA


புண்படுத்தும் உஷ்ணத்தின் தொல்லையை ஒழிக்க
COLGATE
PRICKLY HEAT POWDER
கால்கேட் பிரிக்லி ஹீட் பவுடரை உபயோகியுங்கள் அதில் சேர்ந்துள்ள அற்புதமான சக்தி வாய்ந்த ஒரு பொருள்
1. புண்படுத்தும் உஷ்ணத்தால் அரிச்சல் ஏற்படாமல் தடுக்கிறது; ஏற்பட்டாலும் உடனே குணப்படுத்துகிறது
2. சருமத்திற்கு இதமும் குளிர்ச்சியும் அளிக்கிறது
3. குழந்தைகள், பேபிகளுக்குக்கூட பத்திரமானது, பயன் தருவது!
கால்கேட்
பிரிக்லி ஹீட் பவுடர்
இன்றே ஒரு டப்பா வாங்கி நாளையே இதம் பெறுக!



ரமண்லால் வஸந்தலால் தேசாய்

மொழிபெயர்ப்பு : ரா. வீ.

## 8. இதென்ன கோரம்?

தூரத்தே தூரத்தே எரிந்து கொண்டிருந்த விளக்குகள் வெளிச்சத்தைப் பரப்புவதைக் காட்டிலும் இருட்டைத்தான் அதிகமாக்கிக் காட்டிக் கொண்டிருந்தன. தெரு வழியே போய்க் கொண்டிருந்த இரண்டொரு வழிப்போக்கர்கள் அடங்கிப் போயிருந்த ஜனச் சந்தடிக்குப் பயங்கர உருவம் கொடுத்துக் கொண்டிருந்தனர். கட்டிடங்கள் எல்லாம் இருளில் கலந்து மூழ்கி இருளோடு இருளாகக் காட்சி அளித்துக் கொண்டிருந்தன. அந்தக் கட்டிடங்களில் அப்பொழுது என்ன நடந்து கொண்டிருந்தது என்பது யாருக்கு என்ன தெரியும்?

ஏதோ விசித்திரமான வழியே போய்க் கொண்டிருப்பது போன்ற உணர்ச்சி சுதாகருக்குத் தோன்றியது. தெரு வழியே போய்க் கொண்டிருந்த சுதாகரின் கண்களில் இரண்டு கட்டிடங்கள் கலக்குமிடத்தே ஒரு மூலையில் ஏதோ பளிச்சிட்டது. அடுத்த கணம் யாரோ ஆள் அவர்களை நோக்கி வருவதுபோலத் தோன்றியது. கையில் கத்தியுடன் நான்கு பேர் நின்று கொண்டிருப்பதாகச் சிறிது நேரத்துக்கு முந்தித்தானே யாரோ வந்து பரமானந்தரிடம் கூறிச் சென்றான்! அந்த விஷயம் நினைவு வரவே, சுதாகரைத் திகில் பற்றிக் கொண்டது. அப்பொழுது பரமானந்தரை நோக்கி ஒருவன் பாய்ந்து வந்து கொண்டிருந்தான். அதைக் கண்ட சுதாகர் சட்டென்று பரமானந்தருக்கும் அந்தப் புதிய ஆளுக்கும் இடையே போய் நின்று கொண்டான்.

சுதாகர் உள்ளத்தில் உதித்த திகிலையெல்லாம் உதறி யெறிந்து விட்டு உணர்வு பெற்றான். அவன் கொண்டிருந்த பயம் ஓடி ஒளிந்து விட்டது. அதே சமயம், வந்த ஆள் பரமானந்தரின் மீது கத்தியை ஓங்கினான். பரமானந்தர்மீது விழப்போன அந்தக் கத்திக் குத்தைக் கன லாகவமாகத் தடுத்து நிறுத்தி விட்டான் சுதாகர். அந்த ஆள் மறுபடியும் குத்தக் கையை ஓங்கினான். அப்பொழுதும் சுதாகர் அவனுக்குக் குத்த இடங் கொடுக்கவில்லை. அவன் கத்தியை ஓங்கியது பயனற்றதாகத்தான் முடிந்தது.

சுதாகர் ஆபத்தில் சிக்கிக் கொண்டிருப்பதைக் கண்டார் பரமானந்தர். சுதாகர் ஒரு கையினால் தாக்குபவனின் கத்தி பிடித்திருந்த கையை இறுகப் பிடித்துக் கொண்டு, அவனுடன் சண்டையிட்டுக் கொண்டிருந்தான்; உயிருக்கு மல்லாடிக் கொண்டிருந்தான்.

“விடு, கையை விடு!” என்று தாக்க வந்தவன் கத்தினான். அவன் கதறலில் பரமானந்தரைத் தாக்கித் தலை சாய்க்கச் செய்ய முடியவில்லையே என்ற ஏக்கம் தெளிவாகத் தொனித்தது. அவன் இன்னொரு கையைச் சுதாகரின் கழுத்தில் வைத்தான். அடுத்த கணம் சுதாகரின் கழுத்து வகையாக மாட்டிக் கொள்ளவே, அவன் தன் இரும்புக் கரங்களால் கழுத்தை நெரிக்கத் தொடங்கி விட்டான். சுதாகரின் விழிகள் பிதுங்கத் தொடங்கின. கத்தி பிடித்திருந்த கையைப் பிடித்துக் கொண்டிருந்த சுதாகரின் கை தளரத் தொடங்கியது. எதிரி கழுத்தை நெரித்தோ கத்தியால் குத்தியோ தன் உயிரை வாங்கி விடுவான் என்று சுதாகருக்குத் தோன்றியது. சாகப் போகிறவன் எதற்கும் துணிவது இயல்பே அல்லவா? எனவே, சுதாகர் தன் கடைசிக் காலம் நெருங்கி விட்டது என்பதை உணர்ந்து, தன் உடல் பலம் முழுவதையும் பிரயோகித்தான். ஆயினும் அவனுக்குத் தன் சக்தி அனைத்தும் குன்றி விட்டது போலவே தோன்றியது.

ஆனால் திடீரென்று நெரிபட்டுக் கொண்டிருந்த அவன் தொண்டை தளர்ந்து கொடுத்தது. அவன் தன்னிலை அடைந்து தயாராவதற்குள், எதிரி கத்தியால் குத்தக் கையை ஓங்கி விட்டான். ஆனால் நல்ல வேளை, அதே சமயம் பரமானந்தர் தாக்கிக் கொண்டிருந்தவனை முஷ்டியை மடக்கிக் கொண்டு ஓங்கி ஒரு குத்துக் குத்தினார். அவன் தலை சுழன்று பொத்தென்று கீழே விழுந்தான். விழும் பொழுது கத்தியைச் சுதாகரின் கையில் பாய்ச்சி விட்டுத்தான் அவன் கீழே விழுந்தான்.

“போக்கிரிப் பயலே! இன்னும் என் கைப் பலத்தை நீ அறியவில்லை!” என்று கருவினார் பரமானந்தர்.

அதே சமயம் ஒரு வீட்டின் வாசற் கதவு திறந்தது. நடுத்தர வயதுள்ள ஒரு பெண்மணி கையில் லாந்தரை எடுத்துக் கொண்டு வெளியே வந்தாள். அவளுடைய முகம் அழகாகவும் கவர்ச்சிகரமாகவும் இருந்தது.

“பலமான காயம் பட்டுவிட்டதா, என்ன?” என்று மிகப் பரிவுடன் சுதாகரை நெருங்கிக் கேட்டார் பரமானந்தர்.

“இல்லை, பயப்படக்கூடிய காயம் ஒன்றும் இல்லை!” என்று பதில் அளித்தான் சுதாகர்.

அதற்குள் அவர்களைச் சமீபித்து விட்ட அந்தப் பெண்மணி, “என்ன ஆயிற்று?

"உள்ளே வாருங்கள். மறுபடியும் சண்டையா, என்ன?" என்றுகேட்டாள்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. ஈயினால் யாருக்கு என்ன கெடுதல் செய்ய முடியும்? கெடுதல் செய்ய முயன்றால், அது நசுங்கிச் சாக வேண்டியதுதானே? சுதாகர், உள்ளே, வா! காயத்துக்குக் கட்டுக் கட்டிக் கொள். அதற்குள் நமது இந்த நண்பனுக்கு மூர்ச்சை தெளிவிக்க முயற்சிக்கிறேன்!" என்றார் பரமானந்தர்.

ஆனால் சுதாகர் அங்கிருந்து நகரவில்லை. அடிபட்டு விழுந்தவனுக்கு மூர்ச்சை தெளிவிக்கும் முயற்சியில் ஈடுபட்ட பரமானந்தர் மூர்ச்சை தெளிந்து விட்டது என்பதைக் கண்டார். அவன் மறுபடியும் கத்தியால் குத்தி விட்டால் என்ன செய்வது என்று அவர் சிறிதும் கவலைப்படவில்லை. அவன் அருகில் சென்று கையைப் பிடித்துத் தூக்கி நிறுத்தினார். பிறகு 'தரதர' வென்று அவன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு, அந்தப் பெண்மணியின் வீட்டுக்குள் நுழைந்தார். சுதாகரும் மாலதி என்னும் அந்தப் பெண்மணியும் அவரைப் பின் தொடர்ந்து உள்ளே சென்றார்கள்.



வீடு சாதாரண முறையில்தான் அலங்கரிக்கப் பட்டிருந்தது. பரமானந்தர் பக்கத்திலிருந்த கட்டிலில் அந்த ஆசாமியை உட்கார வைத்தார். பிறகு சுதாகருடன் ஒரு பலகையில் உட்கார்ந்து கொண்டார்.

மாலதி உள்ளே சென்று சுத்தமான துணியும் ஒரு பாத்திரத்தில் தண்ணீரும் கொண்டு வந்தாள்.

"பெரிய காயம் போலிருக்கிறதே! ரத்தம் வந்து கொண்டிருக்கிறதே! வாருங்கள். நான் கட்டுக் கட்டிவிடுகிறேன்!" என்றாள் மாலதி சுதாகரிடம். அவளுடைய குரலில் மென்மை தாண்டவமாடியது.

அடிபட்டு விழுந்து மூர்ச்சை தெளிந்த மனிதன் நாற்புறமும் சுற்றிப் பார்க்கலானான். அவன் நல்ல ஆஜானுபாகுவாக அடியாளைப் போல் இருந்தான். அவன் பைஜாமாவும், உடலைப் பிடித்துக் கொண்டிருக்கும் அரைச் சட்டையும் போட்டுக் கொண்டிருந்தான். அவன் தலையிலே கம்பளித் தொப்பி ஒருபுறம் கோணலாகச் சாய்த்து வைத்திருந்தது. அவன் மார்பகம் அகன்று பலமே உருவாகக் காட்சி அளித்தது. அவன் கண்கள் பெரியவையாகவும் சிவந்தும் இருந்தன. அவன் அடர்ந்த கறுப்புத் தாடியும் மீசையும், அவனுடைய பயங்கர உருவத்துக்கு இன்னும் பயங்கரத் தன்மையை அளித்தன.

இவ்வளவு பலம்பொருந்திய மனிதனுடன் நாம் இத்தனை நேரம் எப்படி எதிர்த்து நின்றோம் என்பதை எண்ணும்பொழுது சுதாகருக்கே வியப்பாயிருந்தது. இருட்டில்லாமல் வெளிச்சமாக இருந்திருந்தால், ஒருதடவை பார்த்த பொழுதே சுதாகருக்கு அவனுடன் சண்டை போடும் துணிவு உண்டாகியிருந்திராது. குலை நடுக்கந்தான் எடுத்திருக்கும்.

"ஏன், ரஹ்மத்! செத்தே தீருவது என்று தீர்மானித்துக் கொண்டு வந்திருக்கிறாயா, என்ன? நீ செய்வதைப் பார்த்தால், சாகாமல் உனக்குச் சுகமோ, நிம்மதியோ சிறிதும் கிடைக்காது என்றல்லவா தோன்றுகிறது!" என்றார் பரமானந்தர்.

'அட! பரமானந்தருக்கு அவனுடைய பெயரும் தெரியும் போலிருக்கிறதே!' என்று மனத்துள் எண்ணினான் சுதாகர்.

ரஹ்மத் மண்டைக் கர்வத்துடன் தலையை நிமிர்த்தினான். அவன் கண்களிலே ரத்தம் குமிழியிட்டுக் கொப்புளித்துக் கொண்டிருந்தது. "நீ சாகாமல் நான் சாகமாட்டேன். தெரிந்ததா?" என்று கர்ஜித்தான் அவன்.

பரமானந்தர் 'கல கல' என்று சிரித்தார். அவருடைய அந்தச் சிரிப்பில் அலட்சிய பாவம் தொனித்தது. அது ரஹ்மத்தின் வார்த்தைக்கு மதிப்பில்லாமல் வெகு துச்சமாக்கி விட்டது. அதைக் கண்ட ரஹ்மத்துக்கு ஆத்திரம் தாளவில்லை.

"இந்த அறியாப் பையன் நடுவே குறுக்கிட்டு விட்டான். அதனால் நீ தப்பிவிட்டாய். ஆனால் இந்த ரஹ்மத்துக்கு வேறு வழிகளும் தெரியும் என்பது நினைவிருக்கட்டும்!" என்று அவருடைய அந்த அலட்சியச் சிரிப்புக்குப் பதில் அளித்தான் ரஹ்மத்.

"எதற்காக வார்த்தைகளை வீணில் கொட்டுகிறாய்? உனக்கும் எனக்கும் நடுவில் இப்படி யாராவது எப்பொழுதுமே வந்து கொண்டுதான் இருப்பார்கள்; குறுக்கிட்டுக் கொண்டுதான் இருப்பார்கள். இதற்கு முடிவு கிடையாது" என்றார் பரமானந்தர்.

இதே சமயம் கையில் பால் பாத்திரத்துடன் ஒரு பெண் அங்கே வந்தாள்.

"ஏன் ரஹ்மத்! பால் குடிக்கிறாயா? உனக்கு வேண்டிய போதை தரும் பானம் இங்கே கிடையாது!" என்றார் பரமானந்தர்.

ரஹ்மத் அதற்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை. ஆனால் அவன் முகம் கோபத்தின் காரணமாகக் குங்குமச் சிவப்பாகச் சிவந்திருந்தது. அந்தப் பெண் ஒரு கோப்பையைப் பரமானந்தருக் கெதிரே வைத்தாள். இன்னொன்றைச் சுதாகருக் கெதிரே வைத்தாள். மற்றொன்றை ரஹ்மத்துக்கெதிரே வைத்தாள்.

ரஹ்மத் கோபத்தினால் கொதித்தெழுந்து கோப்பையைக் காலால் ஓங்கி உதைத்தான். பால் கொட்டிக் கீழே ஓடியது. கோப்பை சுக்கு நூறாக உடைந்து சிதறியது.

சுதாகருக்கு ஒன்றும் புரியவில்லை. பரமானந்தரும் ரஹ்மத்தும் ஒருவரையொருவர் நன்றாக அறிந்திருக்கிறார்கள். அப்படியிருக்கும் எதற்காக இப்படி விரோதம் பாராட்டுகிறார்கள்? விரோதம் பாராட்டும் இந்தப் பரமானந்தர் வீணில் ரஹ்மத்தைப் பால் குடிக்கும்படி ஏன் நிர்ப்பந்தப் படுத்த வேண்டும்?

இதைப்பற்றி யோசிக்க யோசிக்கச் சுதாகரின் மூளை குழம்பித் தவித்தது.

பரமானந்தர் சாந்தமான குரலில், "கொட்டிப்போனால் பரவாயில்லை. இன்னொரு கோப்பைப் பால் கொண்டு வரச் சொல்கிறேன். கவலைப்படாதே! சாப்பிடு!" என்றார்.

அதைக் கேட்ட ரஹ்மத் 'நற நற' வென்று பல்லைக் கடித்தான். பிறகு சிறிது நேரம் கழித்து, "ஆமாம், எங்கள் வயிற்றில் எதற்காக அடிக்கிறாய்? அப்படி எங்கள் வயிற்றில் அடிப்பதனால் உனக்கு என்ன லாபம்?" என்று பரமானந்தரைக் கேட்டான்.

"என்றைக்காவது நீ பட்டினி கிடக்க நேர்ந்தால் என்னிடம் வந்து காசு வாங்கிப் போ. நான் இம்மாதிரி தீச் செயல்களுக்கு ஒரு நாளும் இடம் கொடுக்கச் சம்மதிக்க மாட்டேன்!"- இதைச் சொன்ன பரமானந்தரின் குரலில் அழுத்தம் தொனித்தது.

"நான் உன்னிடம் வந்து கை நீட்டிக் காசு வாங்குவதா? அதை விடப் பட்டினி கிடந்து பிராணனை விடுவது எத்தனையோ மேலாயிற்றே!" என்றான் ரஹ்மத்.

"சபாஷ், அப்படிச் சொல்லு!" என்று சொன்ன பரமானந்தர், "இவ்வளவு நெஞ்சுறுதி இருந்தால், என்றைக்காவது ஒரு நாள் கட்டாயம் நன்மை விளையும். நான் சொல்கிறபடி செய்வதாயிருந்தால், இன்றைக்கே உனக்கு ஒரு நல்ல வேலை வாங்கித்தரத் தயாராயிருக்கிறேன்!" என்றார்.

"நீ என் தொழிலை அல்லவா வேர் அறுக்கிறாய்!"

"அட! நன்றாகப் பேசிக் கொண்டிருந்தவன் மறுபடியும் உளறத் தொடங்கி விட்டாயே! வயிற்றுக் குறைந்த. விவரம் அறியாத பேதைப் பெண்களைப் பேச்சினால் மயக்கி, அவர்கள் மூலம் கிடைக்கும் சம்பாத்தியத்தைக் கொண்டு ஆனந்தம் அநுபவிக்கிறாயே! இது ஆண்மைக்கு இழுக்கு விளைவிக்கும் காரியம் அல்லவா? இப்படிப் பேடித்தனமான காரியங்கள் செய்யலாகுமா?"

"நாங்கள் யாரையும் பேசிப் பசப்பி மயக்குவதில்லை. நேருக்கு நேர் தெளிவாகச் சொல்



லித்தான் கேட்கிறோம். இஷ்டப்பட்டவர்கள் வருகிறார்கள். இஷ்டப்படாதவர்கள் போகிறார்கள்'' என்றான் ரஹ்மத்.

"காவாலித்தனம் செய்வதையும் செய்து விட்டுப் பொய்ப் பேச்சு வேறா? எனக்குத் தெரியாது என்ற எண்ணமா? அந்த ஆக்ராப் பெண்களை எப்படிக் கொண்டு வந்தாய்? சொல்லு!"—பரமானந்தரின் பேச்சில் கண்டிப்புத் தொனித்தது.

"நான் உன்னுடன் பேசப் பிரியப்படவில்லை!"—ரஹ்மத் அத்துடன் பேச்சைக் கத்தரிக்க எண்ணிப் பதில் சொன்னான்.

"நான் உன்னை உயிருடன் வெளியே விட மாட்டேன். ஜாக்கிரதை!"

"நீ என்னை என்ன செய்து விடுவாய்?" அதைச் சொல்லும் பொழுது ரஹ்மத்தின் கண்களில் ரத்தம் தெறித்தது.

"என்ன செய்வேனா? இங்கேயே கட்டித் தொங்கவிட்டு உயிருடன் கொளுத்தி விடுவேன். என்னை யார் என்று எண்ணினாய்?... டேய்! அங்கே யார்?" என்று உறுமினார் பரமானந்தர்.

கட்டுமஸ்தான தேகம் படைத்த ஆள் ஒருவனை அழைத்துக் கொண்டு மாலதி அங்கே வந்தாள்.

"கயிறு, கந்தல் துணிகள், எண்ணெய், தீப்பெட்டி..." பரமானந்தர் உறுதியான குரலில் வேண்டிய சாமான்களின் பெயரை அடுக்கிக் கொண்டே போனார். வந்த வேலைக்காரன் சற்றுத் தயங்கினான்.

"ஏய்! நான் சொல்வது காதில் விழவில்லை? செவிடாகி விட்டாயா, என்ன?" என்று அந்த வேலைக்காரனைக் கடிந்து கொண்டார் பரமானந்தர்.

அதைக் கேட்ட வேலைக்காரன் மறு மொழி ஒன்றும் கூறாமல் உத்தரவை நிறைவேற்ற உள்ளே சென்று விட்டான்.

சுதாகரும் மாலதியும் வாய் அடைத்துப் போய் என்ன பேசுவது என்று புரியாமல், அப்படியே ஸ்தம்பித்து நின்றனர்.

அப்பப்பா! இவ்வளவு படித்த மனிதர் — விஷயம் தெரிந்த மனிதர் இப்படிக் காட்டுமிராண்டித் தனமாக ஒரு மனிதனை எரித்து வதைத்துக் கொல்லத் துணிந்து விட்டாரே! அதை நினைக்கும் பொழுது சுதாகருக்குச் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது.

என்ன ஆச்சரியம்!

ரஹ்மத்துக்கும் தூக்கிவாரிப் போட்டது! அவன் அப்படியே அசந்து போய் உட்கார்ந்து விட்டான்.

மாலதியினால் பேசாமல் இருக்க முடியவில்லை. "போனால் போகட்டும். விட்டு விடுங்கள். அவன் பாவம் அவனைத் தின்னும். தாங்கள் எதற்காக இந்தக் கோரத் தண்டனை கொடுக்க வேண்டும்?" என்றாள்.

"அவன் பாவம் அவனைத் தின்னுமா? அவன் பாவம்கூட அவனை அணுகப் பயப்படுமே! இவனை நானேதான் தீர்த்துக்கட்ட வேண்டும். இவன் தீச்செயல்களை இந்த உலகம் இனித் தாங்காது, அவ்வளவு அதிகரித்து விட்டது!" என்றார் பரமானந்தர்.

சுதாகர் அதைக் கேட்டதும் சிலையாகச் சமைந்து விட்டான். அவனுக்கு என்ன செய்வது, என்ன சொல்வது என்று ஒன்றுமே புரியவில்லை. ஏன்? அவனுக்குத் தான் எங்கே இருக்கிறோம், எந்த நிலையில் இருக்கிறோம் என்பதேகூடப் புரியவில்லை. அவன் விழிகள் விழித்தது விழித்தபடி இமையாடாமல் குத்திட்டு நின்றன. அதைக் கண்ட பரமானந்தருக்கு, இவற்றையெல்லாம் கண்டு சுதாகர் திகைத்துத் திக்பிரமை பிடித்தவன் ஆகிவிட்டான் என்பதை உணர்ந்து கொள்ள அதிக நேரம் பிடிக்கவில்லை.

இரவின் இருள் கனத்தது. அதேபோல அந்தப் பயங்கர நிகழ்ச்சியின் பேயுருவமும் வலுத்துக் கனத்தது.

"மாலதி! சுதாகரை அழைத்துப் போய்த் தூங்கச் சொல். இவனுக்குக் காயம்பட்டிருக்கிறது. இப்படி உட்கார்ந்திருந்தால் உடம்புக்கு ஆகாது!" என்றார் பரமானந்தர்.

மனிதனைக் கொலை செய்வதற்குத் தயாராக நிற்கும் ராக்ஷஸப் போக்குள்ள இந்த மனிதர், இவ்வளவு அன்பு நிறைந்த வார்த்தைகளைச் சொல்கிறாரே! இவரால் எப்படி முடிகிறது? — இதை எண்ணிப் பார்த்த சுதாகருக்கு மனிதனுடைய மனம் மிகவும் விசித்திரப் போக்குள்ளது என்பது புலனாகியது. பரமானந்தர் காத்து ரக்ஷிக்கும் கோஷ்டியைச் சேர்ந்தவரா, அல்லது கொலைகாரக் கும்பலைச் சேர்ந்தவரா என்பது சுதாகருக்குப் பிடிபடவில்லை.

"எனக்கு இன்னும் தூக்கம் வரவில்லை. தங்களுடனேயே தூங்குகிறேன்!" என்றான் சுதாகர். அவன் சொல்லி முடிப்பதற்கும் வேலைக்காரன் கயிறு, கந்தல் துணி, எண்ணெய் முதலியன கொண்டு வருவதற்கும் சரியாக இருந்தது.

கொண்டு வந்தவற்றைக் கீழே வைத்தான் வேலைக்காரன். ரஹ்மத் பேசாமல் அவற்றையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"கயிற்றை உத்திரத்தில் தொங்கிக் கொண்டிருக்கும் கொக்கியில் மாட்டு. பிறகு உள்ளிருந்து ஆளைக் கூப்பிட்டு இவனை இறுக்கிக் கட்டு" என்று உத்தரவிட்டார் பரமானந்தர்.

வேலைக்காரன் வாய் திறவாமல் அவர் உத்தரவுப்படி கயிற்றை உத்திரத்துக் கொக்கியில் மாட்டிக் கட்டினான்.

மாலதியும் சுதாகரும் யோசனையில் ஆழ்ந்து விட்டார்கள். பரமானந்தர் பக்கத்திலிருந்த வெற்றிலைச் செல்லத்தை அருகில் இழுத்து வைத்துக் கொண்டு சாவதானமாக வெற்றிலை போட்டுக் கொள்ளலானார். அவர் செய்த அந்தக் காரியத்தைக் காண்பவர்கள் அங்கே எவ்விதமான விபரீத விசித்திர நிகழ்ச்சியும் நடக்கவில்லை என்றேதான் எண்ணுவார்கள்.



பம்பாய், அட்வர்டைஸிங் எக்ஸிகியூடிவ் ஸ்ரீ பி. எஸ். வி. ஜீலம் அவர்களின் குமாரத்தி சௌ. வி. ராஜலக்ஷ்மிக்கும், கொச்சின் திருப்புணித்துறை ஸ்ரீ எஸ். சங்கரநாராயணனுக்கும் சமீபத்தில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. வாழ்க மணமக்கள்.

“ஏன், ரஹ்மத்! நீ வெற்றிலை கிற்றிலை போட்டுக் கொள்கிறாயா?” என்று கேட்டார் பரமானந்தர் வெகு ஸௌஜன்யமாக.

ரஹ்மத் அதற்குப் பதில் சொல்லும் முறையில் பக்கத்தில் உடைந்து கிடந்த கோப்பைத் துண்டு ஒன்றை எடுத்து அவருடைய தலையை குறி பார்த்து வீசி யெறிந்தான். பரமானந்தர் தருணம் பார்த்துத் தலையைக் குனிந்து கொண்டார். அவன் குறி தவறிவிட்டது. பரமானந்தரின் அந்தச் செய்கையைப் பார்த்த பொழுது முக்காலம் உணர்ந்த ஞானியைப் போல அவனுடைய ஒவ்வொரு செய்கையையும் அவர் அறிந்திருந்தாரோ என்றே எண்ணத் தோன்றியது.

“பரவாயில்லை. கடைசிக் குறியும் வீணாகி விட்டது. இனி என்னைக் கொல்லுவதற்கு ரஹ்மத் உயிரோடு இருக்க மாட்டான். நினைத்தாலும் அவனால் இருக்க முடியாது!” என்றார் பரமானந்தர்.

இப்படிச் சொல்லிக் கொண்டிருந்தவர் சட்டென்று ஒரே தாவாகத் தாவி ரஹ்மத்தின் மேல் ஏறி உட்கார்ந்துவிட்டார். அப்பொழுது ரஹ்மத்தின் பயில்வான்தனம் எல்லாம் எங்குதான் போயிற்றோ, தெரியவில்லை. பரமானந்தர் கோபமுற்றிருப்பதைக் கண்ட எல்லோரும் நடுநடுங்கிப் போய் வாய் அடைத்து நின்று விட்டனர்.

அவர் ரஹ்மத்தின் கழுத்தில் கை கொடுத்துத் தூக்கி நிறுத்தினார். பயங்கரப் போருக்கு ஆயத்தம் நடப்பது போலத் தோன்றவே, பரமானந்தரின் உதவிக்காகச் சுதாகர் தயாராக எழுந்து நின்றான்.

அதைக் கண்ணுற்ற பரமானந்தர், “உன் உதவி தேவையே இல்லை!” என்று சொல்லி ரஹ்மத்தின் கழுத்தில் கையை வைத்துக் கயிறு கட்டியிருந்த பக்கமாக ஒரு கல்தா கொடுத்துத் தள்ளினார். கயிற்றின் அருகில் போய் விழப் போனவன் ஆடி நின்று சமாளித்துக் கொண்டான். “இவனைப்போல் எத்தனையோ பேரை நான் ஒருவனாகவே தீர்த்துக் கட்டி யிருக்கிறேன். இவன் எனக்கு எம்மாத்திரம்?” என்று சொல்லிக் கொண்டே துள்ளிக் குதித்து ரஹ்மத்தின் அருகில் போய் நின்று கொண்டார் பரமானந்தர்.

ரஹ்மத்தின் ரத்தம் சுண்டிவிட்டது.

“இந்தக் கிழவன் என்னைச் சுட்டெரித்து விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பான் போலிருக்கிறது! இந்த ஆபத்தான நிலைமையில் எனக்கு யார் உதவுவார்கள்?”—ரஹ்மத் மனத்துள் யோசிக்கத் தொடங்கி விட்டான்.

பரமானந்தர் ரஹ்மத்தைப் பிடித்துக் கயிற்றினால் கட்டத் தொடங்கினார். ரஹ்மத் இப்படிப் பேசாமல், தற்காப்பு முயற்சியும் செய்யாமல் பசுப்போல் பிராணனை விடத் தயாராகி விடுவான் என்று யாருமே எண்ணவில்லை. எல்லோரும் அந்தப் பயங்கரக் கோரக் கொலைக் காட்சியைக் காணத் தயாராகி விட்டனர்.

ரஹ்மத்தும் இன்று நமக்குச் சாவு நிச்சயம் என்று தீர்மானித்து விட்டான். மரண பயத்திலேயே அவன் கைகால்கள் சில்லிட்டு விட்டன. ஆனால் தன் மானம் காரணமாக அவன் வாய்திறந்து வார்த்தையாட வில்லை. அவன் உள்ளமும் உடலும் வெலவெலத்து விட்டன. அவன் நடுங்கியவாறே நின்றான்.

“இனி, கடவுளை வேண்டிக் கொள்ளவேண்டும் என்றால் சீக்கிரமாக வேண்டிக்கொண்டு விடு” என்றார் பரமானந்தர். ஆனால் அடுத்த கணமே, “நீ கடவுளைக் கூப்பிட்டாலும் வரமாட்டார். இருந்தாலும் கடைசிக் காலத்தில் வேண்டிக் கொள். அந்தக் குறை வைப்பானேன்?” என்றார்.

ரஹ்மத் பேசாமல் நின்றான்.

எண்ணெயில் துணியை நனைத்துக் கொண்டிருந்த வேலைக்காரனைப் பார்த்து, “தீப்பெட்டி எங்கே?” என்று கொடுமை தொனிக்கும் குரலில் கேட்டார் பரமானந்தர்.

“இதோ கொண்டு வருகிறேன், எஜமான்!” என்று சொல்லிவிட்டு வேலைக்காரன் தீப்பெட்டி எடுத்து வருவதற்காக வெகு வேகமாக உள்ளே சென்றான்.

“என்ன கவனக் குறைவு? சொன்னால் சொன்னபடி கேட்பதில்லை!” என்று உறுமினார் பரமானந்தர்.

ரஹ்மத் கயிற்றில் கட்டுண்டு நின்றான். தீ வைக்க வேண்டியதுதான் பாக்கி.

மாலதியும் சுதாகரும் வெட வெட வென்று நடுங்கியவாறு நின்றனர். அவர்களுடைய நடுக்கத்தை யாரும் பார்க்கலாம், அவ்வளவு தெரியக்கூடிய அளவு அவர்களுடைய உடல் நடுங்கிக் கொண்டிருந்தது.

பரமானந்தர் தீப்பெட்டியை எதிர் பார்த்தவாறு நின்று கொண்டிருந்தார். (தொடரும்)




# இந்தியர்கள் நன்கு அறிவர்

அன்றாட வாழ்க்கையில் தேனீர் பானத்தின் உற்சாக மூட்டும் சக்தியை அறிந்து பாராட்டுபவர்கள் இந்தியர்களைப்போல் யாருமில்லை. தேனீருடன் ஒரு தேக்கரண்டி நிறைய க்ளுகோவிடாவும் கலந்து பருகினால் இருமடங்கு உற்சாகம் பெறக்கூடும் என்பதும் இந்தியர்களுக்குத் தெரியும். க்ளுகோவிடா என்பது இயற்கை ஜீவசக்தி உணவெனக் கருதப்படும் க்ளுகோஸ்-D அதிக செழுமையாக்கப் பெற்றதுதான். அது நேராக உங்கள் ரத்தத்துடன் சேர்ந்து ஒன்றுபடுகிறது. க்ளுகோவிடா சோர்வை அகற்றி உடனே அதிகப்படி ஜீவசக்தியளிக்கிறது.

குடும்பத்தில் அனைவருக்குமாக, இன்றே ஒரு பெரிய டின் வாங்குங்கள்!

**க்ளுகோவிடா இரட்டிப்பு ஜீவசக்தி தருகிறது.**



**காரன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) லிமிடெட், பம்பாய்.**

# தமிழ்க் களஞ்சியம்

## டி.கே.சி

### 34. சபையில் உயிராபத்து இல்லையே!

1914ம் வருஷம் முதல் உலக மஹா யுத்தம் ஆரம்பித்தது. அந்தக் காலம் விமானத்திலிருந்து குண்டு போடுகிறது, அணுக்குண்டு போடுகிறது என்கிற காரியம் கிடையாது.

எதிரிகள் சேனை அணிவகுத்து நிற்கும் அல்லது பள்ளம் தோண்டிக் குழியில் இருந்து போர் செய்யும். அப்படியே தான் இந்தப் பக்கத்துச் சேனையும்.

இந்த விதமாகப் போர் செய்வதற்குப் படை படையாகச் சேனைகள் வேண்டும். இந்தியாவில் இருந்து எத்தனையோ படைகள் போயின. கிச்னர்மில்லியன் என்று பெயர் வைத்துப் பத்து லக்ஷம் பேர் போனார்கள். அவ்வளவு பேரும் அங்கே மடிந்து தொலைந்தார்கள். எல்லாரும் நம் ஊரைச் சுற்றிய அக்கம் பக்கத்திலுள்ள ஆட்கள்தான். அடுத்தாற்போல் ராபர்ட் மில்லியன் என்ற பெயரோடு பத்து லக்ஷம் பேர் போனார்கள். அவர்களும் மடிந்து போனார்கள் தான். யுத்தம் நீடித்திருந்தால் சரித்திரத்தில் வரும் கிளைவ், வாரன்ஹேஸ்டிங்ஸ், முதலானவர்கள் பெயரோடு படைகள் போயிருக்கும். நம்முடைய முன்னோர்கள் செய்த புண்ணிய வசத்தால் நின்று விட்டது போர். "மில்லியன்கள்" போகவில்லை. ஆனால் ஒன்று; ஒருவராவது கோழை என்று சொல்லும்படியாக நடந்து கொள்ளவில்லை. அத்தனை பேரும் வீரர்களாகவே மடிந்தார்கள்.

**பகையகத்துச் சாவார்**
**எளியர்**

• •

யுத்தத்தைக் கொஞ்சம் விட்டு விட்டு ஒரு சபைக்குப் போவோம். மகா மகா பண்டிதர்கள் இருப்பார்கள். ஆனால் அவர்களை மேடை மேல் ஏறி ஏதாவது ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசச் சொன்னால்போச்சு காரியம். பயந்து, திணறித் திண்டாடிப் போய் விடுவார்கள். இது நமக்குத் தெரியும் சாமான்ய உண்மை.

ஆங்கிலேயர் இதைப் பற்றி ரஸமான விவரங்கள் சொல்லியிருக்கிறார்கள். அடிசன் என்ற ஒரு பெரிய ஆசிரியர். ஆங்கில பாஷை அவர் முன் என்ன குட்டிக் கரணம் போட வேண்டும் என்றாலும் போடும். வாசிக்க வாசிக்க எளிமையாய்ச் சுகமாய் இருக்கும். இருபது பேர் இருக்கிற இடத்தில் ஒரு சமயம் எழுந்து நின்று பேசும்படி நேர்ந்து விட்டது ஆசிரியர் அடிசனுக்கு. சில நிமிஷம் ஒன்றும் ஓடவில்லை. பிறகு "நான் கருதுகிறேன்" என்று சொல்ல வந்தார். ஆங்கிலத்தில் 'கருக் கொள்ளுகிறேன்' என்ற உருவத்தில் விழுந்தது விஷயம் (கன்சீவ்). சிறிது நேரம் மௌனம். பிறகும் அந்த வார்த்தையையே சொன்னார். பிறகு மௌனம். மூன்றாவது தடவையும் அந்த வார்த்தையைச் சொன்னார். அப்படியே உட்கார்ந்து விட்டார்.

அங்கிருந்த பெண்மணி ஒருத்திக்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை. சொன்னாள், "நம்முடைய நண்பர் மூன்று தடவை கருக் கொண்டார். ஆனால் பெற்றெடுத்த பாடாக ஒன்றும் இல்லை."

இது மாதிரி பல விவரங்கள் ஆங்கிலப் புலவர்கள் சம்பந்தமாக அனுபவங்கள் எவ்வளவோ உண்டு.

சபையைக் கண்டு பயப்படாத காரியம் மிக அபூர்வம் என்பது தெரிகிறதல்லவா?

**பகையகத்துச் சாவார்**
**எளியர் : அரியர்**
**அவையகத்(து) அஞ்சா**
**தவர்.**

[பகையகத்துச் சாவார் எளியர் : எதிர்ப் படைக்கு முன் சாவார்—செத்தே போகிறவர்கள் சாமான்யம். ஆனால்—அரியர் அவையகத்து அஞ்சாதவர் : ரொம்ப அபூர்வம் சபையைக் கண்டு பயப்படாதவர்கள்]

ஒரு உண்மை எப்படிப் பரவிக் கிடக்கிறது இரண்டாயிரம் வருஷமாக!




2

ஜிமுலி என்னை விழித்து பார்த்தாள். "இது போன்ற காதலர்களைப் பற்றி நீ வேறு எப்போதாவது கேட்டிருக்கிறாயா?" என்று கேட்டாள். அப்பொழுது அவள் நன்றாகத் தலையைத் தூக்கி என்னைப் பார்த்துத் தன் பொக்கை வாய் தெரியச் சிரித்துக் கொண்டிருந்தாள்.

"இல்லை. இதைப் போன்ற காதலர்களைப் பற்றி நான் எங்குமே கேட்டதில்லை" என்றேன்.

"இனிமேலும் இது போன்ற காதலர்களைப் பற்றி உன்னால் கேட்க முடியாது. காதலே ஒரு புதுமையானது. அது ஒரு மனிதனுடைய தாடி மீசையைப் போன்றது. வெட்ட வெட்ட முன்னிலும் உறுதியாக வளரும் இயல்புடையது. இதைத் தெரிந்து கொள்ளாமல் சிலர் காதலர்களைப் பிரித்து வைக்க முயலுகிறார்கள். அதுவே அவர்கள் காதல் பயிர் வளருவதற்கு வேண்டிய உரமாகிறது. நான் இளமையாக இருக்கும்போது என்ன செய்தேன் தெரியுமா! பகலெல்லாம் வேலை செய்வேன். இரவு வந்து விட்டாலோ எத்தனையோ கட்டுக் காவலையும் மீறி நான் நேசித்த அன்பரிடம் ஓடி விடுவேன். அடாடா! அந்த நாட்களை நினைத்து விட்டால்......" என்று மேலே ஒன்றும் பேசாமல் நிறுத்தினாள் ஜிமுலி.

நான் அவள் முகத்தைப் பார்த்தேன். கருத்த அவள் கண்களில் பழைய இன்ப நினைவுகளினால் ஒரு தனியான பிரகாசம் தோன்றியது. சந்திரன் ஒளியிலே அவள் சுருங்கிய உதடுகளும் நரைத்த ஆனால் அடர்த்தியான தலை மயிருடன் கூடிய அகன்ற நெற்றியும், எடுப்பாக இருந்த அவள் மூக்கும் தெரிந்தது. முகம், கழுத்து, கைகள் எல்லாம் சுருக்கம் விழுந்து இருந்தன. அதையெல்லாம் பார்த்தபோது இளம் வயதில் இந்தச் ஜிமுலி உண்மையிலேயே மிகச் சிறந்த அழகியாக இருந்திருப்பாள் என்று நினைத்தேன்.

கரகரப்பான குரலில் ஜிமுலி மீண்டும் பேச ஆரம்பித்தாள். தன் மடியில் முகத்தை வைத்துக் கொண்டு விம்மி அழுத மோகினியை அன்போடு அணைத்துத் தூக்கித் தன் பக்கத்தில் வைத்துக் கொண்டு அவள் கண்ணீரை ஆதரவோடு துடைத்தாள் பெரிய தாயார்.

"மோகினி! ஏன் இப்படி வீணாக அழுது கொண்டிருக்கிறாய்? இப்பொழுது உனக்கு என்ன வந்து விட்டது!" என்று கேட்டாள்.

மோகினி பரிதாபகரமாக அடுத்த வீட்டு ஜன்னலைப் பார்த்தாள். ஒன்றும் புரியாமல் எதை எதையோ சொன்னாள்.

"மோகினி! நீ அந்த வாலிபனைக் காதலிக்கிறாய். அவனுக்கு ஏதோ ஆபத்து ஏற்பட்டு விட்டது என்றுதானே அழுகிறாய்!"

"ஆமாம்" என்று சொல்லுவதுபோல மோகினி தலையை ஆட்டினாள்.

"மோகினி! நான் சொல்லுகிறேனே என்று வருத்தப்படாதே. நீ கல்யாணம் செய்து கொள்ளாமல் இருக்க வேண்டும் என்றோ, நீ காதலிக்கும் வாலிபன் உனக்கு ஏற்றவன் இல்லை என்றோ நான் சொல்லப் போவதில்லை. இந்த உலகில் உள்ள மிகச் சிறந்த வாலிபன் யார் வந்தாலும் அவனுக்கு நீ ஏற்றவள்தான். ஆனால், மோகினி! இதனால் எல்லாம் என்ன பிரயோஜனம்! எங்கோ சிறிது நேரம் சந்தித்து மனம் குளிரப் பேசுவதாலும், இங்கிருந்தபடி கண்குளிரக் கடைக் கண்ணால் அவனைப் பார்ப்பதாலும் என்ன ஏற்பட்டுவிடப் போகிறது! கொஞ்சகாலம் சென்றால் அவன் வேறு யாரையாவது கல்யாணம் செய்து கொண்டு விடப் போகிறான். அப்புறம் உன்னைப் பார்த்ததாகக் கூட அவனுக்கு நினைவு வரப்போவதில்லை."

மோகினி மௌனமாகத் தலையை அசைத்தாள்.

"நான் சொல்லுவது போல் நடக்காது என்றுதானே சொல்லுகிறாய்!" என்றாள் பெரிய தாயார்.

"ஆமாம்" என்றாள் மோகினி.

"அதை எப்படிச் சொல்லுகிறாய்!"

"அவர் எனக்கு வாக்குக் கொடுத்திருக்கிறார். என்னையே கல்யாணம் செய்து கொள்ளப் போவதாக அவர் எனக்குச் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறார்" என்றாள்.

"ஓகோ! அப்படியா சமாசாரம்! மோகினி, இதையெல்லாம் நம்பாதே. எல்லாம் காற்றோடு காற்றாய்ப் பறந்து போய்விடும் வார்த்தைகள். வாலிப வயதில் பருவகால எழுச்சியில் ஏதோ ஒரு உணர்ச்சியின் வேகத்தில் சொல்லும் வாக்குறுதியும், அளிக்கும் சத்தியமும் நிலையற்றவை. அப்படியேதான் அவன் வாக்குக் கொடுத்ததாக இருந்தாலும் அது நிறைவேற வேண்டாமா! அது நிறைவேறும் என்பது என்ன நிச்சயம்! நீ தான் கடைசி வரையில் அவனையே காதலிக்கப் போகிறாயா! நானோ உன் தந்தை உனக்கு வேறு கணவனை

நிச்சயித்து விட்டால் அப்பொழுது உன்னுடைய மன நிலை எப்படி யிருக்குமோ!"

"நான் இனி மணந்தாலும் வேறு ஆண்மகனை நினைக்க மாட்டேன். அவர் இனிமேல் என்னை விரும்பினாலும் சரி, வெறுத்தாலும் சரி அவர்தான் என் கணவர்" என்றாள். அவள் குரலில் ஒரு அசைக்க முடியாத நம்பிக்கையும் குலைக்க முடியாத உறுதியும் கலந்திருந்தன.

"அப்படியானால் நிலைமை மிகவும் மோசமாகி விட்டது என்றுதான் சொல்ல வேண்டும். அவன் நாளைக்குத் தன் வாக்கையும், சத்தியத்தையும் மறந்து விட்டால் நீ என்ன செய்ய முடியும்! ஆண்கள் எல்லாம் எப்படிப்பட்டவர்கள் என்று தெரியுமா! அதிலும் அந்த வாலிபன் எப்படிப் பட்டவன் என்று உனக்குத் தெரியுமா!"

மோகினி சட்டென்று எழுந்திருந்தாள். தன் பெரிய தாயாருக்கு எதிரில் தலைநிமிர்ந்து நின்றாள். "பெரியம்மா! வேண்டாம் எனக்கு ஆண் பிள்ளைகளைப்பற்றித் தெரிய வேண்டாம். தெரிந்து கொள்ளவும் நான் விரும்பவில்லை. ஆனாலும் என்னை நேசித்த அவர் மிக உத்தமர். அதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை" என்றாள்.

அதற்கு மேல் அவளுடன் பேசுவதற்குப் பெரிய தாயாருக்கு இஷ்டமில்லை. "என்னவோ அம்மா! நம் குடும்பத்தின் நல்ல பெயர் உன்னுடைய ஒழுக்கத்தில்தான் இருக்கிறது. அதற்கு மேல் நான் உனக்கு ஒன்றும் சொல்ல விரும்பவில்லை" என்று சொல்லிவிட்டு மோகினியின் அறையை விட்டு வெளியே சென்றாள்.

பெரிய தாயார் வெளியே சென்றவுடன் மோகினி பிரமை பிடித்தவள் போல உட்கார்ந்து விட்டாள். அவளுடைய இளம் உள்ளம் என்ன என்னவோ எண்ணாத எண்ணங்களை யெல்லாம் எண்ணிக்கொண்டிருந்தது என்பதை அவளுடைய முகபாவம் எடுத்துக் காண்பித்தது.

இந்த இடத்தில் திடீரென்று கதை சொல்லுவதை நிறுத்தி விட்டுக் கிழவி மௌனமாக இருந்தாள். ஏதோ கேள்வி கேட்க விரும்புபவள்போல் என் முகத்தைப் பார்த்தாள். பின், முழங்கால்கள் மீது தலையை வைத்துக்கொண்டு சற்று நேரம் யோசனை பண்ணினாள். நானும் வாய் திறக்காமல் உட்கார்ந்திருந்தேன். அப்பொழுது அடித்த காற்று வேகத்தில் என்னுடைய வேஷ்டி முனை படபட வென்று அடித்துக் கொண்டது.

அந்த வேஷ்டியின் படபட என்ற சத்தத்தினால் தன் மௌனத்தைக் கலைத்துக்கொண்டு கிழவி மேலே கதை சொல்ல ஆரம்பித்தாள்:

முல்லைவனம் என்ற பெயர் கொண்ட மோகினியின் பெரிய வீட்டுக்குப் பின்னால் இயற்கையின் கவிதை அழகும், புத்துணர்ச்சியும், நம்பிக்கையும்



கட்டும் அற்புதமான சூழ்நிலையைக் கொண்ட ஒரு தோட்டம் இருந்தது. அங்கு பசுமரங்கள் சூழ்ந்த தாமரைக் குளம் ஒன்று இருந்தது. அந்தக் குளம் சிரித்துக்கொண்டிருந்தது. அதிலிருந்த பாதி மூடிய தாமரை மலர்கள் இளம் காற்றினால் சிலிர்த்தன; அந்த மலர்களின் அசைவினால் தண்ணீரில் எழுந்த சிற்றலைகள் வளர்ந்து சுழித்து பரந்தன. வானத்தில் மாலைச் சூரியன் ஆயிரமாயிரம் புன்னகைக் கதிர்களோடு வஞ்சக உலகைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தான்.



தாமரைக் குளத்தின் மிருதுவான கன்னத்தை இளங் காற்று அன்போடு தட்டிக் கொடுத்தது. இந்த இன்ப விளையாட்டில் தாமரைக் குளம் சொக்கிப் போய் அலை அலையாய்ப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தது.

தாமரைக் குளத்து ஓரமாகப் பசுமையுடன் இருந்த வேப்ப மரத்துக்கு அடியில் ஒரு சலவைக் கல் மேடையிருந்தது. அந்த மேடை மீது மோகினி உட்கார்ந்திருந்தாள். அடிக்கடி தாமரைக் குளத்தின் வடதிசையை உற்றுப் பார்த்த வண்ணம் உட்கார்ந்திருந்தாள். பொங்கி வரும் சந்தோஷ உணர்ச்சியுடன் அவள் புன்னகை புரிந்தாள். இதோ அவன் வந்துகொண்டிருக்கிறான். அவன் வருவான்; சிரிப்பான். அவன் பரந்த மார்பு ஆசையால் உயரும். உருண்டு திரண்ட தன் கைகளை நீட்டி அவள் மென்கரத்தைப் பற்றுவான். அதைக் கண்டு முல்லைவனத்துப் பூங்குயில்கள் எல்லாம் பாடும். இருவருமாகச் சேர்ந்து எதை யெல்லாம் பற்றியோ நீண்ட நேரம் பேசுவார்கள். பிறகு பிரிய மனமில்லாமல் பிரிந்து போவார்கள். இப்படித்தான் ஒவ்வொரு நாள் மாலையிலும் அவர்கள் நடப்பது வழக்கம்.

அன்றும் மோகினி அவன் வரவை எதிர்நோக்கித்தான் சலவைக் கல் மேடை மீது உட்கார்ந்திருந்தாள். அவன் வரும் வழியை ஆர்வத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாள். சூரியனோ வானத்தின் அடிவாரத்தை நோக்கி விரைந்து கொண்டிருந்தான். வழக்கமாக அவன் இந்த நேரத்துக்கு முன்பே வந்து விடுவான். ஏனோ தெரியவில்லை இன்று அவனைக் காணோம்.

இரண்டு குயில்கள் அவள் உட்கார்ந்திருந்த மேடைக்கு மேலிருந்த மரத்தில் சண்டை போட்டுக் கொண்டன. அதன் சிறகுகள் பிய்ந்து காற்றில் பறந்தன. அந்தப் பறவைகள் ஒன்றை ஒன்று கோபத்தினால் கொத்திக் கொண்டன; வலி தாங்க முடியாமல் விசித்திரமாகக் கத்தின.

இதையெல்லாம் மோகினி சிறிதும் கவனித்ததாகவே தெரியவில்லை.

"அவர் வர மாட்டாரோ! நேற்று நாம் ஜன்னலில் பார்த்ததும், பெரிய தாயார் சொன்னதும் எல்லாம் உண்மையாகி விடுமோ! நான் என்ன பண்ணுவேன்!" என்று வாய்விட்டுச் சொல்லிக் கொண்டாள் மோகினி.

இப்படி எண்ணிக்கொண்டே அந்த மேடைமீது காத்துக் கிடந்தாள் மோகினி. அவள் மனத்தில் தோன்றிய சந்தேகங்களை யெல்லாம் தனக்குள்ளாகவே மூடி வைத்து விட்டு மேடையை விட்டு இறங்கி இங்கு மங்கும் உலாவிக்கொண்டிருந்தாள். மாலை மறையும் நேரம் நெருங்கி விட்டது.

அவன் அன்று வரவேயில்லை.

மோகினி தன் நிலைமையை எண்ணி வருத்தப்பட்டுக் கொண்டே வீட்டை நோக்கித் திரும்பினாள். எங்கோ தூரத்தில் யாரோ ஓடி வருவது போன்ற சத்தம் கேட்டது. உடனே அந்தத் திசையை நோக்கிப் பார்த்தாள் மோகினி.

மோகினியை ஆட்டிப் படைத்து வந்த அந்த வாலிபனே வந்து கொண்டிருந்தான். அவள் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அந்தக் காதல் இளைஞனே வந்து கொண்டிருந்தான். மோகினி அவனைப் பார்த்தாள். அவன் கையிலிருந்த தாமரை மலரைப் பார்த்தாள். 'ஆமாம்! அவரே தான்! சுந்தரம்தான்!" என்றாள். அவனை நோக்கி விரைந்தாள். அவள் காதலித்த வாலிபனின் பெயர் தான் சுந்தரம். இந்தப் பெயரை அவள் சொன்ன போது அவளுடைய குரலின் குறைவற்ற சங்கீதம் முழுவதையும் அதில் இழைத்திருந்தாள்.

சுந்தரம் குபேர சம்பத்துடையவன். அவளுடைய மாமன் மகன். இவ்வளவுதான் மோகினி அவனைப் பற்றித் தெரிந்து கொண்டிருந்தாள். சுந்தரம் ஒல்லியாக உயரமாக இருந்தான். எலுமிச்சம்பழம் போன்ற நிறமும் ஒல்லியான அழகிய முகத் தோற்றமும் அவனுடைய பெருந்தன்மையைக் காட்டியது. சுருள் சுருளாகக் கருத்திருந்த தலை மயிரும் அகன்ற நெற்றியும் அவன் அழகை மேலும் மிகைப் படுத்திக் காட்டின. அவன் கண் விழிகள் தாமரைக் குளத்தின் தண்ணீரைப் போலக் கருநீல நிறமாயிருந்தன.

காலை குடிலில் மோகினி இருந்த இடத்துக்கு வந்தான் சுந்தரம். அவள் மலர்க் கரங்களைப் பற்றி அழைத்துக் கொண்டு சலவைக் கல் மேடைக்கு வந்தான். அவளை மேடை மீது உட்கார வைத்துவிட்டு அவன் பக்கத்தில் தாவி உட்கார்ந்தான். "எனக்காக ரொம்ப நேரம் காத்துக் கொண்டிருந்தாயோ!" என்றான்.

"அது இருக்கட்டும். நேற்று மாலை உங்களை யாரோ உங்கள் வீட்டில்......" என்று வார்த்தைகளை முடிக்காமலே இழுத்தாள். அவள் குரலிலே சோகம் தொனித்தது.

அவள் கேள்விக்குப் பதில் சொல்லாமல் சுந்தரம் அவளது அழகு நிறைந்த தோளை ஓரக்கண்ணால் பார்த்தான். அவள் உருண்டு திரண்ட கைகள், புதுமையும் பூரிப்பும் பெற்ற உடல், முல்லை மலரின் நறுமணம் கலந்த அவள் கருங்கூந்தல் எல்லாவற்றையும் பார்த்தான்.

"நீ என்ன கேட்டாய்! அதை நான் கவனிக்கவே இல்லை!" என்றான்.

"நேற்று உங்களை யாரோ கழுத்தைப் பிடித்துத் தள்ளினார்கள். அதைத் தொடர்ந்து 'ஐயையோ' என்று அலறும் குரல் கேட்டது. அதனால் நேற்று இரவு பூராவும் எனக்குத் தூக்கமே இல்லை. என்னமோ ஏதோ என்று கலங்கிப் போனேன். அதற்குத் தகுந்தாற்போல் நீங்கள் இன்று நேரம் கழித்து வேறு வந்திருக்கிறீர்கள்!" என்று கலங்கிய குரலில் சொன்னாள்.

"நீ இப்படிக் கலங்கிப் போவாய் என்று நினைத்திருந்தால் நேற்று அந்த நாடகமே நடந்திருக்காது. நீ என் மீது கொண்டுள்ள காதலை, அன்பைப் பரீட்சை செய்து பார்க்க வேண்டும் போல் தோன்றியது. ஏன் அப்படித் தோன்றியது என்பதை என்னால் விளக்க முடியாது. அதற்காக நீ என்னைப் பார்த்துக் கொண்டிருக்கும் சமயம் பார்த்து என் கழுத்தைப் பிடித்துத் தள்ளும்படி சொல்லி 'ஐயையோ' என்று பயங்கரமாகக் கூச்சல் போட்டேன்!" என்று சொல்லிக் கலகலவென்று சிரித்தான் சுந்தரம்.

"இந்த ஆண்களுக்கே எப்பொழுதும் சந்தேகம் தான். நேற்று அந்தக் காட்சியைப் பார்த்து என்ன பாடுபட்டு விட்டேன் தெரியுமா!" என்றாள். பிறகு அவன் முகத்தைக் களித்துக் கொண்டு சிரித்தாள். அப்பொழுது அவள் முகத்தில் கவலை நீங்கிய ஒரு தெளிவு நிறைந்திருந்தது.

"நான் நாளைய தினம் உங்கள் வீட்டுக்கு வரப் போகிறேன். உன் தந்தையைப் பார்த்துப் பேசப் போகிறேன். நம்முடைய பெரியவர்கள் இடையே தானே சண்டையும் சச்சரவும்! அவர் என்னை என்ன பண்ணிவிடப் போகிறார்!" என்றான்.

மோகினி திரும்பினாள். திரும்பிச் செம்மையும் குதூகலமும் நிறைந்த சுந்தரத்தின் முகத்தைப் பார்த்தாள். அந்த முகத்தில் அன்பு தவழ்ந்து கொண்டிருந்தது. காதல் கலந்த பார்வையும், குறும்புத்தனம் நிறைந்த புன்னகையும் தெரிந்தன.

"நீங்கள் அப்படி என் வீட்டுக்குத் தைரியமாக வந்து என் தந்தையிடம் பேச வேண்டும் என்று தான் நினைத்துக் கொண்டிருந்தேன். நீங்களே வருவதாகச் சொல்லி விட்டீர்கள். எனக்கு அதில் ரொம்ப சந்தோஷம்" என்றாள்.

"உங்கள் வீட்டில் எனக்கு எல்லோரும் ஆதரவாக இருப்பார்களா! என் வீட்டில் எனக்கு ஆதரவாக யாரும் இல்லை. ஆனால் உன்னை மணந்து கொள்ளக் கூடாது என்று ஒருவரும் இதுவரையில் தடை சொல்லவில்லை" என்றான்.

"எல்லாம் காலைக்குத் தெரிந்து போய்விடுகிறது" என்றாள் மோகினி.

இதற்குள் சூரியன் நன்றாக மறைந்து விட்டான். இரவின் மோகனம் அப்பொழுதுதான் ஆரம்பிக்கத் தொடங்கியது. அவர்கள் இருவரும் பிரிந்து சென்றார்கள். அவர்கள் சென்றவுடன் தாமரைக் குளமும், எல்லையற்றுப் பறந்து கிடந்த நீல வானமும், அதில் சிதறிக் கிடக்கும் தாரகைகளும்தான் மிஞ்சி நின்றன. இவற்றோடு சலவைக் கல் மேடையும், அந்தத் தோட்டத்துப் புதர்ச் செடிகளும், வானோங்கி வளர்ந்திருந்த பசுமையான மரங்களும் மிஞ்சியிருந்தன. இவற்றையெல்லாம் நீல வானத்து மின்னும் நட்சத்திரங்கள் மங்கிய ஒளியோடு பார்த்துக் கண்சிமிட்டிக் கொண்டிருந்தன.

மறு நாள். மோகினியின் வீடான 'முல்லை வனம்' அமைதியாகவே இருந்தது. அதில் மனிதர்கள் வசிப்பது போலவே தோன்றவில்லை. அவ்வளவு அமைதியாக இருந்தது. ஆனால் அந்த அமைதியில் ஏதோ ஒரு விபரீதம் தோன்றப் போவது போன்ற ஒரு பிரமையும் இருந்தது. அந்த மாளிகையின் பெரிய ஜன்னல்கள் எல்லாம் அகலத் திறந்து கிடந்தன. அவைகள் யாரையோ 'வா, வா' என்று கை நீட்டி அழைப்பது போலிருந்தன. மோகினி தன் அறையில் இருந்த வண்ணம் எதையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

கூடத்தில் பெரிய தாயாரும், மோகினியின் தாயாரும் மெல்லிய குரலில் எதைப் பற்றியோ பேசிக்கொண்டிருந்தார்கள். அவள் தந்தை முன் கூடத்தில் தனியாக உட்கார்ந்திருந்தார்.

மோகினியின் தந்தை சாதாரணமான மனிதர் இல்லை. ஆனாலும் பெரிய மேதாவியும் இல்லை. அவருக்குத் தம் வாழ்க்கையில் இருந்த ஒரே லட்சியம் தம் அருமை மகளைக் கண்ணும் கருத்துமாக வளர்க்க வேண்டும் என்பதுதான். மோகினியைப் பார்க்கும்போதெல்லாம் அவர் உள்ளத்தில் விவரிக்க முடியாத ஒரு ஆனந்தம் ஏற்படுவதை உணர்ந்தார். அது காரணமாக அவருக்கு ஏற்பட்ட ஆறுதலை அவர் வேறு எதிலும் எப்பொழுதும் அடைந்ததில்லை.

மோகினிதான் அவருடைய செல்வம், சொத்து, சுதந்திரம், உயிர்; எல்லாமே அவள்தான். அன்று என்னமோ மோகினியை நினைக்கும் போது அவர் மனத்தில் வருத்தமும் கோபமும் கலந்து அவரை வேதனைப்படுத்திக் கொண்டிருந்தன. தம்முடைய அறையில் எதையோ சிந்தித்த வண்ணம் குறுக்கும் நெடுக்குமாக நடைபோட்டுக் கொண்டிருந்தார். சில சமயம் சட்டென்று கூரையைப் பார்த்தார். மற்றொரு சமயம் ஜன்னலுக்கு வெளியில் தன் பார்வையைத் திருப்பி நீலவானத்தைப் பார்த்தார். அந்தக் கோலத்தில் அவரைப் பார்த்தவர்கள் அவர் மேல் எங்கே ஆகாயம் இடிந்து விழுந்து விடுமோ, இல்லை; பூமிதான் அவர் இருக்குமிடத்தில் வெடித்துப் பிளந்து அவரை விழுங்கி விடுமோ என்று நினைக்கத் தோன்றியது.

# நீரிழிவு

## ஏழு நாட்களில் குணமாகும்

சிறு நீரில் அதிக சர்க்கரை இருப்பின் **நீரிழிவு (DIABETES)** என்று சொல்லப்படும் இப் பயங்கர வியாதியுள்ள நோயாளி நாளுக்கு நாள் தன் முடிவு நெருங்குவதைக் காண்கிறான். இதை நிவர்த்திக்க டாக்டர்கள் இன்ஸுலின் இன்ஜக்ஷன் ஒன்றைத்தான் கண்டு பிடித்தார்கள். இதைக் குத்திக் கொள்வதால் பூரண குணம் ஏற்படுவதில்லை; இன்ஜக்ஷன் மருந்து உள்ளவரை சர்க்கரை தற்காலிகமாக மறைந்து விடுகிறது.

அபரிமிதமான தாகம், பசி, அடிக்கடி சிறு நீர் சர்க்கரையுடன் போதல், எரிச்சல் ஆகியவைகள் இந்த வியாதியின் முக்கிய அறிகுறிகள். வியாதி முற்ற ராஜப் பிளவை கட்டிகள், சாலேஸ்வரம் இதர கொடிய வியாதிகள் ஏற்படும். வீனஸ் சார்ம் நவீன விஞ்ஞான அதிசயமாகும். இதை உபயோகித்ததால் பலர் மரணத்தினின்று தப்பியுள்ளனர்.

வீனஸ் சார்ம் உபயோகித்த 2-வது அல்லது 3-வது நாளில் சிறுநீரில் சர்க்கரை குறைந்து அடிக்கடி போகும் சிறு நீரும் குறைகிறது. 3-வது அல்லது 4-வது நாளில் வியாதி பாதிக்குமேல் குணமடையும். இந்த மருந்துக்குப் பத்தியம் கிடையாது; இன்ஜக்ஷன் கிடையாது. நன்கு விளக்கும் இலவச ஆங்கில புத்தகத்திற்கு எழுதிக் கேளுங்கள்.

**50 வில்லைகள் கொண்ட புட்டி 1-க்கு ரூ. 6-12-0**

(பாக்கிங், தபால் செலவும் இனாம்)

**வீனஸ் ரிஸர்ச் லாபரட்டரி (K.M.)**

**தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா**




கவியரசர் டாகூர் காந்தி மகாத்மாவின் பெருமையையும் அவர் இந்தியாவுக்கு ஆற்றியிருக்கும் அருந்தொண்டையும்

# மகாத்மா காந்தி

என்ற நூலில் அழகாக விளக்கியிருக்கிறார்

**விலை அணா எட்டு**

(தபால் செலவு தனி)

சசிதேவி எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

**விலை ரூ. 2-8-0**

(தபால் செலவு தனி)

கிடைக்குமிடம்

**கல்கி காரியாலயம்**

**கீழ்ப்பாக்கம் :: சென்னை**




"நெடுநாட்களாக மிருந்த முதுகு வலியினால் அவஸ்தைப்பட்டேன். சில நிமிஷங்களே உட்கார்ந்திருந்தபோதிலும், மறுபடி எழுந்து நிற்பதே மிகவும் சிரமமாயிருந்தது. "க்ருஷன்" உபயோகித்துக் குணம் அடையும் வரை, உபயோகித்த வேறு மருந்துகள் ஒன்றிலும் குணம் கிடைக்கவில்லை. எனது ஆரோக்யத்துக்கு ஏற்ற சாதனம் பெற்று இப்பொழுது நான் முற்றிலும் ஒரு புதிய ஸ்திரீயாகிவிட்டது பற்றி சந்தோஷமும் நன்றியறிதலுமுள்ளவளாயிருக்கிறேன்." —E. J. B.

இடைவிடாத முதுகு வலிக்கு ஒரு பொதுக் காரணம்—மூத்திரக் காய்கள் உடலிலுள்ள அசுத்தத்தை வெளியேற்றாமைதான். இவ்வாறு தொல்லையுறும்பொழுது "க்ருஷன்" உட்கொள்ளுங்கள். களைத்துப்போன மூத்திரக் காய்கள் அவைகளுக்கு வேண்டிய உதவியை அதனால் பெறுகின்றன. அவை கழிவு பதார்த்தங்களை ஒழுங்காகவும் இயற்கையாகவும் வெளியேற்றும்பொழுது வலியும் கூடவே வெளியேறி விடுகிறது. தினந்தோறும் உட்கொள்ளும் ஒரு சிறு அளவு க்ருஷன் உங்களது வலிகள் திரும்பவும் வராதென்பதை உறுதிப் படுத்துகின்றது.

**"க்ருஷன்"** உங்களை ஆரோக்யத்துடனும் சந்தோஷத்துடனும் இருக்க உதவுகிறது

KSM: 3

ஏதோ நடக்கக் கூடாத ஒன்று நடந்து விட்டதுபோல, பயங்கரமான ஒரு உண்மையைத் தெரிந்து கொண்டவர் போல அவர் வேதனைப் பட்டுக் கொண்டிருந்தார்.

பிறகு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக்கொண்டு அங்கிருந்த சாய்வு நாற்காலியில் 'தொப்'பென்று சாய்ந்து விழுந்தார்.

அவருக்கு எதிரில் அவர் மனைவி உட்கார்ந்திருந்ததை அவர் முதலில் கவனிக்கவே இல்லை.

இருவரும் சற்று நேரம் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு சும்மாவே இருந்தனர். முதலில் மோகினியின் தாயார் பேச ஆரம்பித்தாள்.

"உங்களுக்கு விஷயம் தெரியுமா!"

"என்ன விஷயம்!"

"என் அண்ணன் மகன் சுந்தரம் நம் வீட்டுக்கு வந்து விட்டுப் போனான்."

"நீ அவனைப் பார்த்தாயா!"

"ஆமாம், பார்த்தேன்."

"எவ்வளவு பெரிய அயோக்கியன்! அந்தப் பயலுக்கு என்ன துணிச்சல், பார்த்தாயா!"

"இல்லை. அவன் அயோக்கியனே இல்லை. மிகவும் உயர்ந்த குணம் படைத்தவனாக இருக்கிறான். உல்லாசம் நிறைந்த அழகிய வாலிபனாகவும் இருக்கிறான். நான் அவனைச் சின்னஞ்சிறு பாலகனாக இருந்தபோது பார்த்தது."

"இங்கு எதற்கு வந்தானாம்! யாரைத் தேடிக் கொண்டு வந்தானாம்!"

"நம்மை யெல்லாம் பார்த்துப் பேசுவதற்குத் தான் வந்தான். நம்முடைய நீண்ட நாளைய உறவு விட்டுப் போகக்கூடாது என்றான். 'பெரியவர்களுக்குள் சண்டை என்றால் நான் உங்களை என்ன பண்ணினேன்' என்று கேட்டான்."

"உறவு விட்டுப் போகக் கூடாது என்றால் எனக்கு ஒன்றும் புரியவில்லையே!"

"அவனுக்கு மோகினியைக் கல்யாணம் செய்து கொடுக்க வேண்டுமாம்."

"மோகினியையா! என்ன தைரியம் அவனுக்கு. நீ முடியாது என்றுதானே சொன்னாய்!"

"அவன் திடீரென்று இந்தக் கேள்வியைக் கேட்டதும் என்னால் பதில் கூறவே முடியவில்லை. அவன் 'அத்தை! அத்தை!' என்று குழைந்து பேசினான் அவன் இனிய குரலுக்கு முன்னால் என்னால் ஒன்றுமே செய்ய முடியவில்லை. மௌனமாகவே இருந்து விட்டேன். அதனால் என்னுடைய சம்மதத்தை ஏற்றுக் கொண்டான்."

"அதற்குமேலே நான் சொல்லுவதைக் கேள்!" என்று மோகினியின் தந்தை ஆரம்பித்தார். அவர் குரலில் தான் ஏதோ தவறு செய்து விட்டவர் போன்ற ஒரு பாவம் இருந்தது.

"உன்னிடம் பேசிவிட்டுத்தான் போயிருக்கிறது, நேரே இங்கு வந்திருக்கிறான். நான் அவனை எதிர்பார்க்கவே இல்லை. பூமியிலிருந்து பொத்துக்கொண்டு கிளம்பியவன் போல என் எதிரில் வந்து தோன்றினான். நான் ஒரு கணம் திகைத்துப் போனேன். என்னைப் பார்த்துச் சிரித்தான். 'மாமா! என்னைத் தெரிகிறதா! நான்தான் சுந்தரம். என்னை உங்களுக்குத் தெரிந்திருக்குமே' என்றான். நீண்ட நாள் என்னிடம் பழகியவனைப் போல் என் அருகில் வந்து நின்றுகொண்டு 'ஏன் மாமா, என்னிடம் பேசமாட்டேன் என்கிறீர்கள்!' என்று கேட்டான். என்னைக் கேட்காமலேயே என் எதிரில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். பிறகு உன்னிடம் என்ன



சென்னை வைத்தியக் கல்லூரிப் பேராசிரியர் டாக்டர் ஏ. என். ராமச்சந்திர ஐயர் அவர்களின் குமாரர் சிரஞ்சீவி சுப்பிரமண்யனுக்கும் மின்சார இலாகா பிரதம இன்ஜினியர் காரியாலயத்தைச் சேர்ந்த நிர்வாக அதிகாரி ஸ்ரீ என். வெங்கட்ராம ஐயர் அவர்களின் குமாரி சௌ. கமலாவுக்கும் ஜூலை மாதம் பதினைந்தாம் தேதி திருவல்லிக்கேணியில் சிறப்பாகத் திருமணம் நடந்தது. திருமணத்துக்கு நண்பர்களும் உறவினர்களும் பிரமுகர்களும் விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசி கூறினர்.

வாழ்க மணமக்கள்!

பேசினானோ அவ்வளவையும் என்னிடம் மிக இனிமையாகப் பேசினான். கடைசியில் மோகினியின் கல்யாணத்தைப் பற்றி என்னையும் கேட்டான்."

"நீங்கள் அதற்கு என்ன பதில் சொன்னீர்கள்!"

"நீதான் அவனைப் பார்த்துப் பேசியிருக்கிறாயே! உனக்குத்தான் அவனைப் பற்றி நன்றாகத் தெரிகிறதே! நான் அவனை எதிர்த்து என்ன சொல்ல முடியும்! நான் இதுவரையில் மோகினியின் எதிர்காலத்தைப் பற்றி எண்ணவே இல்லை. அவள் பெரிய பெண் ஆகிவிட்டாள், அவளுக்குக் கல்யாணம் செய்து கொடுக்க வேண்டும் என்ற எண்ணமே இல்லாமல் இருந்து விட்டேன். அதைப் பற்றி நினைத்துப் பார்த்ததுகூட இல்லையே! இந்த நிலைமையில் சுந்தரம் என்னைப் பார்த்து மோகினியைக் கல்யாணம் செய்து கொள்ளத் தனக்குத் தான் உரிமை உண்டு என்று சொன்னதும் எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. நானும் சரி என்று சொல்லிவிட்டேன்!" என்றார்.

மோகினியின் தந்தை மிகுந்த இரக்கமான சுபாவமுடையவர். யாரையும் எதிர்த்துப் பேசும் குணமில்லாதவர். அவருடைய ஐம்பது வருஷ வாழ்க்கையில் அவர் ஒருநாள் கூட ஒருவரையும் அதட்டிப் பேசியதில்லை. ஆகையால் அவரைப் பார்த்துப் பேசி அவருடைய அபிப்பிராயத்தைப் பெற்றுக் கொண்டு போவதில் சுந்தரத்துக்கு அதிகக் கஷ்டம் இருக்கவில்லை.

சற்று நேரம் அவர் தம் அருமை மனைவியையே பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு மிகுந்த கவலையுடன் பேசினார்.

"மோகினி என்னை விட்டு, இந்த வீட்டை விட்டுப் போய் விட்டால் என் உயிர் போய் விடும். என் விஷயம் உனக்குத் தெரியும். ஆகையால் நீதான் என் உயிர் போகாமல் இருக்க ஏற்பாடு செய்ய வேண்டும். நான் இறந்த பிறகு, நான் இறப்பதற்குக் காரணமாக இருந்த வாலிபனை நீ மருமகனாக ஏற்றுக்கொள்ளப் போகிறாயா!



"சுதேசமித்திரன்" உதவி ஆசிரியர் ஸ்ரீ எம். பி. சீனிவாசன் அவர்களின் குமாரி செள. பரிமளாவுக்கும் அலஹாபாத் ராணுவப் போதகாசிரியர் சிரஞ்சீவி. டி. சீநிவாசனுக்கும் ஜூலை 12-ந் தேதி யன்று சென்னையில் வெகு சிறப்பாக விவாகம் நடந்தது. காலையில் நடந்த முகூர்த்தத்திலும் மாலையில் நிகழ்ந்த உபசரிப்பிலும் பல பிரமுகர்கள் விஜயம் செய்து தம்பதிகளுக்கு ஆசி கூறினார்கள். மணமக்களுக்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன. வாழ்க, மணமக்கள்!

அல்லது மோகினிதான் அவனுடன் வாழ விரும்புகிறாளா!" என்று கேட்டார்.

மோகினியின் தாயார் இந்த வார்த்தைகளைக் கேட்டதும் திடீரென்று தன் தலையில் ஏதோ தாக்கியதைப் போல வேதனைப்பட்டாள். 'இதற்குத்தானா மோகினியைச் செல்லமாக வளர்த்தோம்' என்று நினைத்தாள். என்ன பதில் சொல்லுவது என்று யோசித்த வண்ணம் உட்கார்ந்திருந்தாள். பிறகு "இந்த நிலைமைகளை மோகினியிடம் விளக்கிச் சொன்னால் மோகினி சுந்தரத்தை மணந்து கொள்ள விரும்ப மாட்டாள்" என்றாள்.

அந்தத் துர்ப்பாக்கியத் தந்தையின் இதழ்க் கடையில் ஒரு சோகப் புன்னகை அரும்பியது.

தாயார் உடனே தன் மகளைப் பார்க்கப் புறப்பட்டாள். அவளுக்கு விஷயத்தை எடுத்துச் சொல்ல விரும்பினாள்.

அதே சமயத்தில் அந்த அறைக்குள் மோகினி நுழைந்தாள். அவளுக்குச் சற்றுத் தூரத்துக்குப் பின்னால் அவள் பெரிய தாயார் நின்று கொண்டிருந்தாள். அவள் அழகிய கையில் அன்றலர்ந்த தாமரை மலர் ஒன்று இருந்தது. அவள் கண்களில் இதுவரையில் இல்லாத ஒரு புதிய ஒளி மின்னியது. அவள் முகத்தில் அசைக்க முடியாத ஓர் உறுதி தேங்கி இருந்தது. அவள் தன் தந்தையையும் தாயையும் மாறி மாறிப் பார்த்தாள். பின்னால் திரும்பித் தன் பெரிய தாயாரை ஒரு முறை கூர்ந்து பார்த்தாள்.

"நீங்கள் பேசிக் கொண்டிருந்ததை யெல்லாம் நான் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். நான் சுந்தரத்தை மனதாரக் காதலிக்கிறேன். அவர் என்னையே கல்யாணம் செய்து கொள்ளப் போவதாக எனக்கு வாக்குறுதி அளித்து விட்டார். என் வாழ்க்கையின் இன்பம், என்னுடைய உயிர் அவர் கையில்தான் இருக்கிறது. அவர் என் இதயத்தை ஆட் கொண்டு விட்டார்" என்று சொன்னாள். தன் தந்தையையும் தாயையும் மீண்டும் ஒருமுறை பார்த்தாள். "எங்களைப் பற்றிய மற்ற விவரங்கள் எல்லாம் பெரியம்மாவுக்குத் தெரியும். நீங்கள் அவர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்" என்றாள்.

தன் பெற்றோர்களைப் பார்த்து லேசாகச் சிரித்தாள். அச் சிரிப்புதான் கொண்டிருக்கும் நம்பிக்கையை, உறுதியை மாற்றிக் கொள்ளப் போவதில்லை என்று சொல்லுவது போலிருந்தது. கைதேர்ந்த சிற்பி தன் காலம் எல்லாம் பாடுபட்டு உருவாக்கிய பொன் விக்கிரகம் ஒன்று உயிர் பெற்று நடந்து போவது போல அங்கிருந்து போய் விட்டாள்.

மோகினியின் அழுத்தம் திருத்தமான வார்த்தைகளைக் கேட்டு அவள் தந்தையும் தாயும் திகைத்துப் போனார்கள். அவர்களுக்குத் தாங்கள் கண்டது, கேட்டது எல்லாம் கனவா இல்லை உண்மைச் சம்பவங்களா என்றே புரிந்து கொள்ள முடியவில்லை. "ஒன்றும் தெரியாத விளையாட்டுக் குழந்தையாக இருந்த மோகினியா, இப்படிப் பேசிவிட்டுச் சென்றாள்!" என்று வாய்விட்டுச் சொன்னார் தந்தை. அடுத்த கணம் அவருக்குத் தன் எதிரிலுள்ள பொருள்கள் எல்லாம் தலைகீழாகச் சுழலுவதுபோல் தோன்றியது. ஏதோ மயக்கம் வருவது போலிருந்தது. அப்படியே சோர்ந்துபோய் நாற்காலியிலிருந்து தரையில் விழுந்து விட்டார்.

திடீரென்று கீழே விழுந்த அவரைப் பார்த்ததும் மோகினியின் தாயாரும் அவள் பெரிய தாயாரும் பயந்து போய் விட்டார்கள். என்ன இருந்தாலும் அவர்கள் பெண்பிள்ளைகள் தானே. அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. 'ஓ!' வென்று அழ ஆரம்பித்து விட்டார்கள்.

இந்த இடத்தில் கதையை நிறுத்திவிட்டுக் கிழவி மௌனமாக இருந்தாள். அவள் கதையை நிறுத்திய அந்தக் கணமே அந்த வனத்தின் மோன நிலை என் உணர்வை வந்து மோதிற்று. நெடுநேரம் வாய் பேசாமல் இருந்தேன். கிழவி என் முகத்தைப் பார்க்க முயன்றாள். அதற்கு நான் இடம் கொடாமல் வேறு எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்தேன்.

அவள் என்னைப் பார்த்து "இப்படி ஒரு பெண் தன் பெற்றோர்களிடம் சொல்லி யிருப்பாள் என்று உமக்குச் சந்தேகமாக இருக்கிறது, இல்லையா!" என்று கேட்டாள்.

"காதல் வயப்பட்ட பெண் இதையும் செய்வாள். இன்னமும் செய்வாள். ஆகையால் இதில் எனக்கு ஒன்றும் சந்தேகமில்லை" என்றேன்.

"உன்னுடைய வாழ்க்கையிலும் இப்படி ஏதாவது காதல் சம்பவங்கள் ஏற்பட் டிருக்கிறதோ!" என்று கேட்டுத் தன் பொக்கை வாயைத் திறந்து சிரித்தாள் கிழவி. அந்தச் சிரிப்பில் கொஞ்சம் சந்தோஷம், கொஞ்சம் அவநம்பிக்கை, கொஞ்சம் பரிகாசம் எல்லாம் கலந்திருந்தன.

அப்பொழுது நான் இருந்த முல்லைவனம் என்ற தோப்புக்கு மேலே பனிர் என்று நீ தாவியதுபோலிருந்தது. இதுவரையில் மேகத் திரையில் ஒளிந்திருந்த சந்திரன் பூரண காந்தியுடன் வானத்தின் மீது எழுவது கண்டேன். அமைதியாக இருந்த அந்த வனத்தில் எங்கிருந்தோ நரிகள் ஊளையிடும் சத்தம் கேட்டது. அந்தச் சத்தம் என் உடலில் பயம் உண்டாக்கும் நரம்பைத் தொட்டு விட்டது. என்னைப் பயம் சூழ்ந்து கொண்டது. (தொடரும்)



# டால்டா வனஸ்பதி நீங்கள் செலவு செய்யும் பணத்திற்கு முழுப் பிரயோஜனத்தைத் தருகிறது

எல்லா இடங்களிலுமுள்ள ஸ்திரீகள் கூறுவதாவது

**"டால்டாவையே வாங்குங்கள், அதனால் நீங்கள் பணத்தை மிச்சப்படுத்துவதோடு ருசிமிக்க ஆகாரங்களையும் தயாரிக்கலாம்."**

புத்திசாலியான குடும்பஸ்திரீகள் ஒவ்வொரு தடவையும் டால்டா வாங்குகிறார்கள். டாக்டர்கள் நமது தினசரி உணவில் கொழுப்பு அவசியம் தேவை என்று கூறுகிறார்கள். இதற்கு டால்டாவைத் தேர்ந்தெடுங்கள். அதன் விலை சரசமாயிருக்கிறது. சீல் செய்த டின்களில் கிடைக்கும் டால்டா எவ்வளவு காலம் நீடித்திருக்கிறது என்பதையும் அது உபயோகித்து எவ்வளவு அற்புதமான சாப்பாடு தயாரிக்கலாம் என்பதையும் நீங்களே பார்த்துத் தெரிந்துகொள்ளுங்கள். இன்றே ஒரு டால்டா டின் வாங்குங்கள்.

**சமையல் செலவை எப்படிக் குறைப்பது?**
இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—
அல்லது என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள்:
தீ டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1

# டால்டா




10,5,2,1 பவுண்டு டின்களில் கிடைக்கிறது

HVM. 192-50 TM

# தந்தையின் தயாளம்

புஷ்யன்

குரு மூர்த்திக்குக் கலியாணமான ஐந்து வருடங்களில் மூன்று பெண்கள் வரிசையாகப் பிறந்து விட்டனர். அதற்குப் பிறகு புத்திர சந்தானமே கிடையாது.

உலகத்திலே ஆசைக்கு ஒரு பெண்ணும், ஆஸ்திக்கு ஒரு மகனும் வேண்டும் என்று சொல்வார்கள். ஆனால் குருமூர்த்திக்கு ஆஸ்திக்கு ஒரு பிள்ளையுமில்லாமல் ஆசைக்கே மூன்று பெண்களும் பிறந்திருந்தனர்.

குருமூர்த்தி தன்னுடைய ஆஸ்தியை ஆள ஒரு பிள்ளை இல்லையே என்று இப்போது ஏங்கவில்லை. தன் மூன்று பெண்களுக்கும் விவாகம் நடத்தி அவர்களைக் கணவன் வீட்டுக்கு அனுப்பி விட்டால் அதனால் ஏற்படும் கடன்களை அடைக்கப் பிள்ளை பிறக்கவில்லையே என்றுதான் விசனப்பட்டார்.

அவருக்கு இருந்ததெல்லாம் இந்த விலையுயர்வு காலத்தில் ஐயாயிரம் பெறுமான ஒரு ஓட்டுக் கூரை வீடும், நூறு ரூபாய் சம்பளத்தை மாதம் முதல் தேதி அள்ளி வீசும் குமாஸ்தா உத்தியோகமும்தான்.

ஐயாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள வீடு போனாலும் பரவாயில்லை. மூன்று பெண்களுடைய கல்யாணமும் அதில் ஆகிவிடுவதானால் அதை இழக்க அவர் தயார்தான். அதற்குப் பிறகு எப்படியோ ஓய்வு பெறும் போது வரும் பிராவிடண்ட் நிதிப் பணத்தை வைத்துக் கொண்டு எப்படியோ காலத்தைத் தள்ளலாம் என்று நினைத்தார்.

ஆனால் ஐயாயிரத்தில் மூன்று பெண்களுடைய விவாகம் எங்காவது நடக்குமா?

குருமூர்த்தி கொஞ்சம் தைரியசாலி. பெண்களுக்குக் கலியாணம் நடந்தாலும் நடக்காவிட்டாலும் தங்கள் ஜீவனத்தைப் பார்த்துக் கொள்ளவாவது முடியும்படி செய்யலாம் என்று அவர்கள் மூவரையும் பத்தாம் வகுப்பு வரை படிக்க வைத்தார்.

முதல் பெண் ருக்மிணி கல்யாணத்துக்கு நின்றாள். குருமூர்த்தி மிகவும் பாடுபட்டு ஒரு வரனைப் பிடித்தார். பிள்ளை வீட்டாரின் தாக்குதல்களுக்கெல்லாம் அடிபணிந்தார். கடைசியில் விவாகம் முடிந்ததும் அவர் வாடகை வீட்டில் வசிக்க நேர்ந்தது. தன் சொந்த வீட்டை விற்றுத்தான் ருக்மிணியின் விவாகத்தை நடத்தினார்.

இனி மற்ற இரு பெண்களின் விவாகத்திற்கு என்ன செய்வது? மஞ்சுளா, வைதேகி இருவரும் கடைசல் பிடித்த விக்கிரகங்கள் மாதிரி இருந்தனர். அவர்கள் அழகுக்கு ஈடு அவர்களைத்தான் சொல்ல வேண்டும். அழகும், அறிவும் மட்டும் கல்யாண மார்க்கெட்டில் விலைபோகும் காலமாக இல்லையே. பணம்தானே விலை போய்க்கொண்டிருந்தது?

இருந்தபோதிலும் குருமூர்த்தி நெருக்கடிகளுக்குத் தயாரானார். அவரிடம் அசட்டுத் தைரியம் எப்படியோ புகுந்து கொண்டது. இந்தப் பிள்ளை வீட்டுக்காரர்களுக்குப் புத்தி புகட்ட வேண்டும். அவர்களை எப்படியேனும் ஒரு கை பார்த்து விடுவது என்று நிர்மானித்தார்.

மஞ்சுளாவைப் பார்ப்பதற்குச் சிலபிள்ளைகளும், அவர்களுடைய பெற்றோர்களும் வந்தார்கள். அவர்கள் வந்து உட்கார்ந்ததுமே மஞ்சுளாவைக் கூப்பிட்டுப் பாடச் சொல்லுவார். 'கனி' ரென்ற குரலில் அப்படியே கேட்போர் உள்ளத்தை ஊடுருவிப் பாயும்படிப் பாடுவாள் மஞ்சுளா.

"என்ன, பெண்ணைப் பிடித்திருக்கிறதா? பாட்டு எப்படி? வீட்டு வேலைகளை எல்லாம் முதல்தரமாகச் செய்வாள். பத்தாம் வகுப்புவரை படித்திருக்கிறாள். சம்மதந்தானே?" என்று நேருக்கு நேர் கேட்பார். 'ஏதோ தாங்கள் தயவு பார்த்து முகூர்த்த நாள் குறிக்க வேண்டும். எல்லாம் உங்கள் இஷ்டப்படிச் செய்யக் காத்திருக்கிறேன்' என்ற பல்லவியைப் பாடுவதில்லை. எல்லாம் நேருக்கு நேராகக் கேள்வியும் பதிலும் தான்.

மாப்பிள்ளையாக வரப் போகிறவர் பதில் பேசாமலேயே இருந்தால் போதும். இடு இடென்று ஆரம்பித்து விடுவார்.

"ஏன் பேசாமல் இருக்கிறீர்? பெண்ணின் அழகுக்கு ஏதாவது குறைவா? அவள் பாட்டில் ஏதாவது குற்றம் உண்டோ? உமக்கு என்ன வேண்டும் சொல்லும்? எல்லாவற்றையும் செவ்வனே செய்து கொடுப்பாள். காலையில் எழுவதற்கு முன் கண்ணை மூடிக் கொண்டிருக்கும் போதே வாயில் காப்பியை ஊற்ற வேண்டுமா? சாயங்காலம் ஆபீஸிலிருந்து வரும்போது 'தா, தை' என்று நர்த்தனமாடிக் கொண்டு உம்மை வரவேற்க வேண்டுமா? சொல்லும். ஏன் மௌனம் சாதிக்கிறீர்" என்று குடைந்தெடுப்பார்.

வந்த பிள்ளை வாய்மூடி மௌனியாய் அசட்டுச் சிரிப்புடன், "வீட்டில் கேட்டு விட்டுப் பதில் சொல்லுகிறேன்" என்று சொல்லி விட்டால் போதும்.

"சரிதான், உமக்கு இஷ்டமா, இஷ்டமில்லையா என்று கேட்டால் அப்பாவை, அம்மாவைக் கேட்டுக் கொண்டு சொல்கிறேன் என்கிறீரே. நீர் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறீரா அல்லது உங்கள் அப்பாவா? தைரியமாய்ப் பிடிக்கவில்லை என்று சொல்லுமேன், தலையையா வாங்கி விடுவார்கள்?" என்பார்.

பெண் பார்க்க வந்த பிள்ளைகள் மௌனமாக வெளியேறி விடுவார்கள்.

சம்பந்திகளாக வரப் போகிறவர் வந்தால் வரதட்சணை, சீர், நகை என்று ஆரம்பித்தால் உடனே குருமூர்த்தி புராணம் போல் மடமட வென்று திறந்து கொட்டுவார்.



மதுரை–ராமநாதபுரம் வர்த்தக சங்கம், நாடார் மஹாஜன சங்கம் ஆகியவைகளின் உப தலைவரும் பிரபல வியாபாரியுமான ஸ்ரீ பா. ம. பாண்டிய நாடார் அவர்கள் பேத்தியும், ஸ்ரீ வெ. கு. மீ. ரத்தினசாமி நாடார் அவர்கள் புத்திரியுமான சௌபாக்யவதி சகுந்தலா தேவிக்கும், விருதுநகர் & தேனி வியாபாரம் ஸ்ரீ வெ. பெ. ச. அ. நாராயண நாடார் அவர்கள் புத்திரர் ஸ்ரீ நடராஜன், பி. காம். அவர்களுக்கும் 19—7—53

அவனுடைய முதுகில் பட்டென்று ஒரு ஷொட்டு விழுந்தது.

"என்னடா, ராமாயணம் மாதிரி ஒரு கடிதம்! என்ன, யாராவது கதை, கிதை எழுதி யிருக்கிறார்களா?" என்றான் ரங்கு.

"ராமாயணம் இல்லை, எனக்குப் பெண் பார்த்திருக்கிறார்கள்."

"அடி சக்கை! யார் அந்தப் பாக்கியவதி?"

"புத்தேரி பிரசுகதார் பெண் வசந்தா தேவி. ஒரே பெண்ணும்."

"ஓகோ, சரிதான் நீ இனிமேல் புத்தேரி பிரசுகதார் ஆகி விடுவாய்"

"என்ன உளறுகிறாய்? என் விஷயம்தான் உனக்குத் தெரியுமே..."

"பணக்காரப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வதில்லை, வரதட்சணை வாங்கு வதில்லை என்று சபதம் போட்டிருக்கிறாய், இல்லையா? அதை மறந்து விட்டேன்."

"என்னை எங்கப்பா வீட்டை விட்டுத்

தென்று ஏதாவது பேசித் தொலைத்து விடாதே...'' என்றான் ரங்கு.

ரங்குவும், கோபுவும் இணைபிரியாத சிநேகிதர்கள். இருவரும் எஸ். எஸ். எல். ஸி. வரை ஒன்றாகப் படித்தார்கள். ரங்கு சாதாரணமான குமாஸ்தாவின் பிள்ளை. அதனால் மேலே படிக்க முடியாமல் சென்னையில் ஒரு கம்பெனியில் குமாஸ்தாவாக இருந்தான். கோபுவின் தகப்பனார் நிறைய நிலபுலன் உள்ளவர். அதனால் அவன் கல்லூரியில் சேர்ந்து படித்து வந்தான். இருவரும் சென்னையில் ஒரே அறையில் வசித்து வந்தனர்.

கோபு தன் தகப்பனாருக்கு எழுதி விட்டான். தனக்குத் தற்போது கல்யாணம் செய்து கொள்ளும் உத்தேசம் இல்லையென்றும், அப்படிச் செய்து கொள்ளும் யோசனை உண்டாகும் போது தானே கடிதம் எழுதுவதாகவும் அப்போது பார்த்துக் கொள்ளலாம் என்றும் எழுதியிருந்தான்.

★

திருமூர்த்தி வழக்கம்போலவே பெண் பார்க்க வந்த கோபுவையும், ரங்குவையும் வரவேற்று உபசரித்தார்.

"நீங்கள் எல்லோரும் சிறியவர்கள். வாலிபர்கள். வருங்காலத்தை நிர்ணயிக்கப்போகும் பெரியவர்கள். நீங்கள் எல்லாம் நல்ல ஒழுக்கத்துடன், உயரிய குணத்துடன் வாழ்க்கை நடத்தினால்தான் நம் நாடு முன்னேறும். முன் காலத்தில் எல்லாம் இந்த வரதட்சணை என்ற பேச்சே இல்லை. எப்படியோ இருந்தாற் போலிருந்து பிடித்துக் கொண்டு விட்டது. பாரதப் பெண்களின் சுதந்திரத்தைப் பற்றிப் பிரமாதமாகப் பேசுகிறோம். ஆனால் வரதட்சணையை மட்டும் ஒழிக்க மனம் வரவில்லை. நீங்களும், உங்களைப்போன்ற வாலிபர்களும் சேர்ந்து முன் வர வேண்டும், பெண் சமூகத்தை முன்னேற்றுவதற்கு......'' என்றார்.

அவருக்கு இருவரையும் பார்த்தவுடனேயே ரொம்பவும் பிடித்துப் போயிருந்தது.

"பெண் பார்ப்பதற்கு அழகாயில்லை, படிப்பில்லை, உங்களுக்கு அமைந்தவளில்லை என்று இருந்தால், வேண்டாம் என்று ஒதுக்குவதால் எனக்குக் கவலையில்லை. இஷ்டமில்லாத கணவனுடன் வாழ்க்கையைப் பிணைத்துவிட எனக்கு இஷ்டமில்லை. ஆனால் பெண்ணைப் பெற்றவன் ஏழை என்ற ஒரே காரணத்துக்காகப் பெண்ணை வேண்டாம் என்று தள்ளுவதைக் காணும்போதுதான் எனக்குப் பெருங் கோபம் உண்டாகிறது'' என்றார்.

கோபாலன் அவருக்குப் பதில் கூறினான். "நீங்கள் எங்களைத் தப்பாக எண்ணிக் கொள்ள வேண்டாம். எனக்கு உங்கள் பெண் மஞ்சுளாவை விவாகம் செய்து கொள்ளப் பூரண சம்மதம். நீங்கள் கவலைப் படாதீர்கள். என் தகப்பனாருக்கு எழுதுகிறேன். அவர் இஷ்டப் பட்டால் நல்லதாயிற்று. இல்லா விட்டால் நான் அவர்களுடைய தடையை மீறி உங்கள் பெண்ணை மணந்து கொள்கிறேன். உங்களுக்குக் கடிதம் எழுதுகிறேன். பிறகு முகூர்த்தம் வையுங்கள். திருநீர்மலை எனக்கு மிகவும் பிடித்தமான ஸ்தலம். அங்கேயே மணம் நடத்திக் கொள்ளலாம்'' என்றான்.

★

கோபு தன் தகப்பனாருக்குக் கடிதம் எழுதினான். தான் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டப்படுவதாகவும் பெண்ணைப் பற்றிய விவரங்களை எழுதி மேற்கொண்டு குருமூர்த்தியுடன் பேசி முகூர்த்தம் வைக்கலாம் என்றும் எழுதினான்.

அடுத்த தபாலில் அவனுடைய தகப்பனார் எழுதியிருந்தார் அவனுக்கு.

உன் கடிதம் கிடைத்தது. உன் அதிகப் பிரசங்கித்தனமெல்லாம் எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. நான் பெண்ணை நிச்சயித்தபோது கல்யாணம் செய்து கொள்ளும் யோசனை இல்லை என்றாய். ஒரு வாரம் கழித்துக் 'காதல்' என்கிறாய்.' சீர்திருத்தம், பெண்களின் முன்னேற்



## நெல்லையில் பிரபல திருமணம்

திருநெல்வேலி ஜங்ஷன் 'லயன் ஆட்டோமோபைல்ஸ், பாலன் - டி - வேல்ஸ் ஸ்தாபனங்களின் அதிபரான ஸ்ரீ எம். சோமசுந்தரம் பிள்ளையின் மூத்த குமாரர் செல்வன் எஸ்.முத்துவேலுக்கும், தமது மருமகளும் ரிடையர்ட் விவசாய டெபுடி டைரக்டர் ஸ்ரீ எம். சுப்பிரமணிய பிள்ளையின் குமாரி செல்வி எஸ். பொன்னம்மாளுக்கும் ஜூலை 12, ஞாயிறு அன்று நெல்லை சிந்து பூந்துறை மணமகன் இல்லத்தில் திருமணம் சிறப்புற நடைபெற்றது. காலை திருமணத்திற்கும், மாலை வரவேற்பு வைபவத்திற்கும். இரவு நடைபெற்ற மணக்கால் ஸ்ரீ சங்கரராஜன் கச்சேரிக்கும் நகர பிரமுகர்கள் பலரும், உறவினர்களும் விஜயம் செய்து மணமக்களை வாழ்த்தினர். மணமக்களுக்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகளும் பரிசுகளும் வந்து குவிந்தன.

வாழ்க பொன்னம்மாள் — முத்துவேலு

றும்' என்கிறாய். வரதட்சணைக் கொடுமை என்கிறாய். உனக்கு ஏதாவது பைத்தியம் பிடித்து விட்டதா! எல்லாவற்றையும் விடப் பெரிய குண்டைத் தூக்கிப் போட்டிருக்கிறாய். நான் சம்மதித்தாலும் சம்மதிக்கா விட்டாலும் விவாகம் செய்து கொண்டே விடுவேன் என்கிறாய். எத்தனை நாட்களாய் இந்தக் கெடுமதி! யாருடைய துர்ப்போதனை! பேசாமல் புத்தேரி மிராசுதார் பெண்ணை மணந்து கொள். உன் பதிலை எதிர்பார்க்கிறேன். இங்ஙனம்,

உன் தந்தை.

கோபுவுக்கு முதலிலேயே தெரியும், இப்படித்தான் பதில் வரும் என்று. அதற்கெல்லாம் அவன் பயப்படாமல் பேசாமல் மஞ்சள் தடவிய முகூர்த்தப் பத்திரிகையைத் தகப்பனாருக்கு அனுப்பி விட்டான். எவ்வளவு தீரமான காரியம் செய்கிறோம். ஆயிரக் கணக்கான ரூபாய் சொத்துகளைக் கூட உதறித் தள்ளும் தைரியம் வந்து விட்டதைக் குறித்துப் பெருமைப் பட்டுக் கொண்டான்.

ரங்குவும் வைதேகியை மணம் செய்து கொள்ளப் போகிறான் என்று இங்கு கூற வேண்டிய அவசியமில்லை.

முகூர்த்தப் பத்திரிகையைப் பார்த்த தகப்பனார் உடனே மற்றொரு கடிதம் எழுதினார்.

உன் கல்யாணப் பத்திரிகை கிடைத்தது. உன்னைப் பெற்று அருமையாக வளர்த்துப் பெரியவனாக்கிய எங்களை நிர்த்தாட்சண்யம் செய்யும் அளவுக்கு நீ முன்னேறிவிட்டாய். உன்னைப் பெரிய மனிதன் ஆக்கும்வரை எங்கள் தயவு வேண்டும். கஞ்சி குடிக்கும் வழிதேடிக் கொண்டதும் நாங்கள் வேண்டாம். எங்களை ஆலோசிக்காமல், எங்கள் பேச்சைக் கேளாமல், எங்களை மீறிக் கல்யாணம் செய்து கொள்ளும் அளவுக்கு உனக்குத் தைரியம் வந்துவிட்டது. அப்படியே தைரியத்துடன் எல்லா காரியங்களையும் செய்து கொள். என் சொத்தில் ஒரு தம்பிடியும் உனக்குக் கிடைக்கும் என்று கண்டிப்பாகக் கனவிலும் எதிர்பார்க்க மாட்டாய் என்று நம்புகிறேன். இங்ஙனம்,

உன் தந்தை.

இதைப் படித்ததும் கோபாலன் கொஞ்சம் யோசித்தான். அதிலிருந்த சில வாக்கியங்கள் உண்மைபோலப் பட்டது. பெற்ற தகப்பனாருக்கு எவ்வளவு துரோகம் என்றெல்லாம் சிறிது சிந்தனை செய்து கொண்டிருந்தான்.

ரங்கு வந்து அவன்முதுகில் ஒன்று வைத்ததும் தான் அவனுக்கு உணர்வு வந்தது.

"ஏதோ பிரமாதமாக யோசிக்கிறாயே? எந்தக் கோட்டையைப் பிடிக்க உத்தேசம். மஞ்சுளா தேவியின் மனக் கோட்டையில் தான் புகுந்தாய் விட்டதே!" என்றான்.

கோபு மௌனமாகத் தன் தகப்பனாரின் கடிதத்தை அவனிடம் கொடுத்தான்.

ரங்கு அதைப் படித்துவிட்டு, "அட, இதற்கெல்லாம் நீ தயாராய் இருந்துதானே இதில் பிரவேசித்தாய்? இதற்குப் போய்க் கலங்கலாமா? இந்தச் சொத்தென்ன பிரமாதம்? எத்தனையோ பேர் உழைப்பால் பணக்காரர்கள் ஆகவில்லையா?" என்றான்.

"பணத்தைப் பற்றிக் கவலையில்லை. இருபத்திரண்டு வருடங்கள் என் இஷ்டப்படி யெல்லாம் நடந்து என்னை வளர்த்த பெற்றோர்களை விரோதம் செய்து கொண்டு......" என்று கோபு தடுமாறினான்.

"கோபு, நான் சொல்லுவதைக் கேள். தகப்பன், பிள்ளைச் சண்டை எல்லாம் எத்தனை நாளைக்கு? இன்னும் கொஞ்ச நாளானதும் அந்தப் பாசம் தானே உன்னை ஏற்றுக் கொண்டுவிடும்" என்றான் ரங்கு.

பிறகுதான் கோபுவுக்குத் தைரியமும், உறுதியும் ஒரு ஆறுதலும் உண்டாயின.

★

திருநீர்மலையில் ஆடம்பரமின்றி எல்லா காரியங்களும் நடைபெற்றுக் கொண்டிருந்தன. குருமூர்த்திக்கு இரு சிறந்த மாப்பிள்ளைகளைப் பெற்ற பெருமிதம். ஒரு வெற்றி கொண்ட பெருமை. கோபுவுக்கும், ரங்குவுக்கும் ஒரு லட்சியமான காரியம் செய்கிறோம் என்ற பூரிப்பு. மஞ்சுளாவுக்கும், வைதேகிக்கும் உள்ள ஆனந்தத்தை எப்படிக் கூறுவது என்று தெரியவில்லை.

கோவிலை வலம் வந்து சன்னதிக்கு வந்தார்கள். அங்கு வந்ததும் கோபுவுக்கு ஒரே ஆச்சரியம் உண்டாகி விட்டது.

அவன் தாயாரும், தகப்பனாரும் வந்திருந்தார்கள். கல்யாணத்தைத் தடை செய்ய நேரிலேயே வந்து விட்டார்களோ என்று பதைத்தான்; பயப்பட்டான்.

"கோபு, ஆச்சரியப் படாதே. பயப் படாதே. நான் ஏன் அப்படி எழுதினேன் தெரியுமா? உன்னைப் பரிசோதிக்கத்தான். 'சீர்திருத்தம், சீர்திருத்தம்' என்றும் 'ஹா, ஹூ' என்றும் கூச்சலிடுவார்கள். ஆனால் காரியாம்சத்தில் வரும்போது கப்சிப் என்று இருந்து விடுவார்கள். நீ எப்படிப்பட்டவன் என்று பரிசோதிக்க அப்படி எழுதினேன். அது கண்டு நீ பயப்படாமல் உன் லட்சியத்தைக் கைக்கொள்கிறாயா என்று பார்த்தேன். அதில் நீ தேறிவிட்டாய். உன்னைப் பெற்ற எனக்கும், உன் தாயாருக்கும் இப்போது தான் பெருமை உண்டாகிறது" என்றார்.

கோபுவுக்குத் தன் வீரத் தனத்தைவிட, தன் மாமனாரின் தைரியத்தை விடத் தன் தகப்பனாரின் தயாளம்தான் பெரிதாகப் பட்டது. தந்தையை கைகூப்பி வணங்கினான்.

"அப்பா, உங்களைப் புரிந்து கொள்ளாமல் நான் என்னென்னவோ எழுதி விட்டேன். மன்னியுங்கள்" என்றான்.

"சரி, சரி ஆகட்டும். முகூர்த்த வேளை தவறிவிடப் போகிறது. சீக்கிரம் மாங்கல்ய தாரணம் ஆகட்டும்" என்று அவசரப்படுத்தினார் கோபுவின் தந்தை.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10







Rexona
Rexona

